# நபி ﷺ அவர்களின்
# குணாதிசியங்கள்

ஆசிரியர்:

அஷ்ஷைய்க் முஹம்மது ஜமீல் ஜைனு
(ரஹிமஹுல்லாஹ்)

தமிழாக்கம்:

அஷ்ஷைய்க் முஹம்மது இக்பால் மதனீ
(ஓய்வு பெற்ற அழைப்பாளர், இஸ்லாமிய அழைப்பு வழிகாட்டி மையம்,
துபாய், சவுதி அரேபியாவிலுள்ள இஸ்லாமிய காரியங்கள் பற்றிய
மந்திரி துறையின் துபாய் அழைப்பாளர்.)

# நபி ﷺ அவர்களின் குணாதிசியங்கள்

ஆசிரியர்:

**முஹம்மது ஜமீல் ஜைனு**

(ரஹிமஹுல்லாஹ்)

தமிழாக்கம்:

**ஷைய்க் முஹம்மது இக்பால் மதனீ**

(ஒய்பு பெற்ற அழைப்பாளர், இஸ்லாமிய அழைப்பு வழிகாட்டி மையம், துபாய், சவுதி அரேபியாவிலுள்ள இஸ்லாமிய காரியங்கள் பற்றிய மந்திரி துறையின் துபாய் அழைப்பாளர்.)

# புத்தக விபரத் தொகுப்பு


நூலின் பெயர் :

- **நபி ﷺ அவர்களின் குணாதிசியங்கள்**

மூலமொழி :

- **அரபி**

நூலாசிரியர் :

- **முஹம்மது ஜமீல் ஜைனு ரஹிமஹுல்லாஹ்**

தமிழாக்கம் :

- **முஹம்மது இக்பால் மதனீ**

இரண்டாம் பதிப்பு:

- ஜுலை - 2014

நூலின் அளவு:

- டெம்மி 1/8

பக்கங்கள்:

- 144

வெளியிட்டோர்:

**எஸ்.ஏ.ஆர். டிரஸ்ட்**
43, டி-ஏ, தர்மலிங்கம் தெரு,
கீரைத் தோட்டம்,
மணப்பாறை - 621 306.

طبع على نفقة بعض المحسنين جزاهم الله خيرا

# முன்னுரை

அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்புடையோன் அல்லாஹ்வின் பெயரால் (துவங்குகின்றேன்).

நிச்சயமாக புகழ் அனைத்தும் அல்லாஹ்விற்கே!

அவனை நாம் புகழ்கிறோம் அவனிடமே உதவி தேடுகிறோம் அவனிடத்தே (பாவங்களை) பொருத்தருள வேண்டுகிறோம். நம்முடைய மனங்களின் தீமைகளிலிருந்தும் நம்முடைய செயல்களில் தீயவைகளிலிருந்தும் அல்லாஹ்விடமே பாதுகாக்கத் தேடுகிறோம்.

அல்லாஹ் எவருக்கு நேர்வழி காட்டுகிறானோ அவனை வழிகெடுப்பவர் (எவரும்) இல்லை. இன்னும், அவன் நேர்வழி செலுத்தாதவருக்கு நேர்வழி காட்டுபவரும் இல்லை.

மேலும் வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு எவரும் எதுவும் இல்லை. அவன் தனித்தவன் அவனுக்கு இணை இல்லை என்று நான் சாட்சி கூறுகிறேன்.

நிச்சயமாக முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அவனின் அடியார் மற்றும் அவனின் தூதர் எனவும் சாட்சி கூறுகிறேன்.

(அல்லாஹ்வைப் புகழ்ந்து அவனுடைய நபியின் மீது ஸலவாத் கூறியதற்குப்) பிறகு,

“ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் குணாதிசயங்கள் நபித்துவ நற்குணங்கள் இஸ்லாமிய நல்லொழுக்கங்கள் ஆகியவற்றிலிருந்துள்ள கொத்துக்களை” சங்கை மிகுந்த என் வாசக சகோதரர்களுக்கு முற்படுத்துகிறேன். ஏனெனில் அவர்கள் அவற்றை வாசித்து சங்கை மிகுந்த (குணாதியசங்களின் நாயகராகிய) இத்தலைவரை அவர்கள் அவர்களுடைய பணிவில், அவர்களுடைய சகிப்புத் தன்மையில் அவர்களுடைய வீரத்தில், அவர்களுடைய அள்ளி வழங்கும் தாராளத் தன்மையில், அவர்களுடைய இரட்சகனைப் பற்றிய அவர்களின் ஏகத்துவக் கொள்கை ஆகியவற்றில் பின்பற்றி நடப்பதற்காக. குறிப்பாக நாமிருக்கும் இக்காலகட்டத்தில் ஏகத்துவம் நற்குணங்கள் ஆகியவற்றை மக்களுக்கு மத்தியில் பரப்ப நாம் மிகுந்த தேவையுடையோராவர். அவ்விரண்டின் மூலமே முஸ்லிம்கள் வெற்றி கண்டனர் இஸ்லாமும் பரவியது.

நற்குணங்கள் எஞ்சியிருக்கும் வரையே சமூகங்கள் எஞ்சியிருக்கும் அவர்களுடைய நற்குணங்கள் போய்விடின் அவர்களும் சென்று விட்டனர் என்று கூறிய கவிஞரின் கூற்று எத்துனை அழகானது.

அல்லாஹ்விடமே, முஸ்லிம்களுக்கு இந்நூலைப் பயனுள்ளதாக, அதை தன் சங்கையான முகத்திற்காக தூயதாகவும் ஆக்கித்தர நான் கேட்கிறேன்.

முஹம்மது ஜமீல் ஜைனூ

# பொருளடக்கம்

بسم الله الرحمن الرحيم

جمعية اهلحديث الهند تملناد وباندجيري

ஜம்மிய்யத் அஹ்லே ஹதீஸ் ஹிந்த் - தமிழ்நாடு & பாண்டிச்சேரி

**JAMIAT AHL - E - HADEES HIND** - TAMILNADU & PONDY

*Affiliated to : Markazi Jamiat Ahl-E-Hadees Hind, New Delhi. Reg No. 11016/1980*

| President: | Secretary: | Treasurer: |
| --- | --- | --- |
| Shaik **Mohammed Abdullah** *Sb* | Shaik **Dr. R.K. Noor Mohammed** | Janab **P. Ataullah Basha** *Sb* |
| *Hydrabadi, Umari, Madani.* | *Umari, Madani.* | |


**بسم الله الرحمن الرحيم**

**الحمد لله رب العالمين والصلاة والسلام على محمد وعلى آله وصحبه أجمعين ومن تبعهم بإحسان إلى يوم الدين وبعد،،**

**فإن شمائل النبي صلى الله عليه وسلم من أحسن ما ورد في سيرة النبي صلى الله عليه وسلم وأفضلها، إذ هي تشمل صفة خَلْق النبي صلى الله عليه وسلم وخُلُقه، وتتضمن معجزات كثيرة، إذْ ذاتُهُ صلى الله عليه وسلم وخُلُقه وطبعه وعَرَقُه الذي كان أطيب من ريح المسك، وهيبته وختم نبوته على ظهره كل ذلك كان معجزاتٍ من معجزاته الكثيرة التي منحها اللهُ إياهُ صلى الله عليه وسلم، وسوف تطلع أيها القارئ الكريم على نوادر ثمينة كثيرة من تلك السيرة العطرة في ثنايا هذا الكتاب الذي ألفه فضيلة الشيخ العلامة جميل زينو رحمه الله، وترجم له فضيلة شيخنا العلامة السلفي محمد إقبال المدني –حفظه الله– الذي أتحف القراء التامليين بترجمة معاني القرآن الكريم، وكتب الأحاديث الشريفة وغير ذلك.**

**وإني أهنئ فضيلته على صبره وعكوفه وجهوده الجبارة في ترجمته لهذا الكتاب وغيره مع ما لحق به من ضَعْفٍ في الجسد بسبب مرضه وتقدم سنه، لكنه ما شاء الله قوي العزيمة والروح، طويل النفس وكثير العمل، وإنجازاته العلمية لخير دليل على ذلك والحمد لله على ذلك حمداً كثيرا طيباً مباركاً فيه.**

**كما أهنئ ساعده الأيمن ومساعده الميمون في مسيرته العلمية والعملية نجله الأكبر فضيلة الشيخ محمد أسعد العمري على عونه لوالده في أعماله العلمية والخيرية، فنعم الولد ونعم الوالد جزاهما الله أحسن الجزاء.**

**وإني أسأل الله سبحانه وتعالى أن يبارك في عمر فضيلة شيخنا وأوحد زماننا وفريد عصرنا في عالَم التامليين العلامة محمد إقبال المدني، ويلبسه لباس الصحة والعافية حتى يقدم للأمة التاملية تراجم أخرى لكتب السنة المشرفة والعقيدة الصافية والمنهج السليم في زمن كثرت فيه الفتن والعقلانية والبدع والخرافات، وقل العلماء وكثر الخطباء، وخرجت الدجاجلة ونطقت الرويبضة، وأن يتقبل جهوده ويجعلها خالصة لوجهه الكريم آمين.**

**كتبه**

**د/ أركي نور محمد(أركي محيي الدين**

**الأمين العام لجمعية أهل الحديث في ولاية تاملنادو وباندیشري**

**التاريخ: 24 شوال 1435هـ الموافق 20 أغسطس 2014م**

بسم الله الرحمن الرحيم

## அஷ்ஷெய்க் ஆர்.கே. நூர் முஹம்மத் மதனீ அவர்கள் மனமுவந்து அளித்த மதிப்புரையின் தமிழாக்கம்.

الحمد لله رب العالمين والصلاة والسلام على محمد وعلى آله وصحبه أجمعين ومن تبعهم بإحسان إلى يوم الدين وبعد

நபி அவர்களின் வாழ்க்கை வரலாறு தொடர்பாக வந்துள்ள தகவல்களிலேயே அவர்களின் குணாதிசியங்கள் பற்றிய தகவல்கள்தான் மிக அழகானதும், சிறந்ததும் ஆகும். ஏனெனில் அதில் நபி அவர்களின் ஒழுக்கங்கள், பழக்க வழக்கங்கள் பற்றிய அனைத்து தகவல்களும் பதிவு செய்யப்பட்டிருக்கிறது. மேலும் நபி அவர்கள் செய்து காட்டிய பல அற்புதங்களையும் அதில் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

நபி அவர்களின் உள்ளமை, ஒழுக்கம், பழக்கவழக்கம், முஷ்க் எனும் நறுமணத்தை விட நறுமணம் பெற்ற அவர்களின் வேர்வை, அவர்களின் கம்பீரமான தோற்றம் மற்றும் அவர்களின் முதுகில் இருந்த நபித்துவ முத்திரை ஆகிய அற்புதங்கள் அனைத்தும் அல்லாஹ் அவர்களுக்கு வழங்கிய அற்புதங்களாகும்.

இத்தகைய உயர்ந்த மதிப்புடைய நபி அவர்களின் குணாதிசியம் தொடர்பான தகவல்களை அரபி மொழியில் அஷ்ஷெய்க் அல்லாமா ஜமீல் ஜைனூ (ரஹ்) அவர்கள் இந்நூலில் தொகுத்திருக்கிறார்கள்.

இத்தகைய மேன்மை வாய்ந்த இந்நூலை எமது மதிப்பிற்குரிய ஸலஃபி அஷ்ஷெய்க் அல்லாமா முஹம்மத் இக்பால் மதனீ அவர்கள் தமிழில் மொழி பெயர்த்துள்ளார்கள். அஷ்ஷெய்க் முஹம்மத் இக்பால் மதனீ அவர்கள் இதற்கு முன்பே அல்குர்ஆனின் பொருளையும், நபி அவர்களின் ஹதீஸ்களின் தொகுப்பையும் தமிழில் மொழிபெயர்த்துள்ளார்கள். மேலும் பல இஸ்லாமிய நூல்களையும் எழுதியுள்ளார்கள்.

அஷ்ஷெய்க் முஹம்மத் இக்பால் மதனீ அவர்கள் தனது முதுமை மற்றும் நோயின் காரணத்தினால் பலவீனமான நிலையில் இருந்தும் நபி அவர்களின் குணாதிசியங்கள் என்ற இந்நூலை மொழிபெயர்த்திருக்கிறார்கள் என்றால், இது அவர்களின் பொறுமை, உறுதி மற்றும் விடாமுயற்சிக்கு ஓர் எடுத்துக்காட்டாகும். இதற்காக நான் ஷெய்க் அவர்களை மனதார பாராட்டுகிறேன்! மாஷா அல்லாஹ் ஷெய்க் அவர்கள் பலவீனமான நிலையில் இருந்தும் இத்தகைய மார்க்க பணிகளை செய்கின்றார்கள் என்றால், அது

அவர்களின் உறுதியையும் மனவலிமையையும், பரந்த மனபான்மையையும் மற்றும் அதிக மார்க்க பணிகளை செய்ய வேண்டும் என்ற ஆர்வத்தையும் காட்டுகிறது. மேலும் ஷெய்க் அவர்கள் மார்க்க கல்வி தொடர்பானவற்றில் முழுமையான முயற்சியை செய்து சத்தியத்தை தெரியப்படுத்துவது அவர்களின் நன்மைக்கு ஆதாரமாக இருக்கிறது. இதற்காக நான் அல்லாஹ்விற்கு நன்றி செலுத்துகிறேன்! அதிகமான புகழையுடையவானவும் அதில் நன்மையையும் அபிவிருத்தியையும் பெற்றவனாக அந்த அல்லாஹ் இருக்கிறான்!

அவ்வாறே ஷெய்க் அவர்களுக்கு வலக்கரமாகவும், அவர்களின் மார்க்க தேடல்கள் மற்றும் பணிகளில் அவர்களுக்கு உதவியாளராகவும் உள்ள அவர்களின் மகனார் ஷெய்க் முஹம்மத் அஸ்அத் உமரி அவர்களையும் நான் மனதார பாராட்டுகிறேன்! தந்தையும் சிறந்தவர், மகனும் சிறந்தவர்! அல்லாஹ் இவ்விருவருக்கும் நற்கூலி வழங்குவானாக!

தமிழ் உலகில் தனித்து அறியப்பட்ட அறிஞரான அல்லாமா முஹம்மத் இக்பால் மதனீ அவர்களின் வயதில் பரக்கத்தை ஏற்படுத்திட வேண்டி நான் அல்லாஹ்விடம் பிரார்த்திக்கின்றேன்! நபி அவர்களின் சுன்னா, தூய அகீதா மற்றும் ஸஹீஹான மன்ஹஜ் தொடர்பான புத்தகங்களை தமிழ் பேசும் முஸ்லிம்களுக்கு மொழியாக்கம் செய்து பயனளிப்பதற்கு ஷெய்க் அவர்களுக்கு உடல் ஆரோக்கியத்தை நல்கிட வேண்டி அல்லாஹ்விடமே பிரார்த்திக்கின்றேன்! ஏனெனில் நாம் வாழும் இக்காலத்தில் குழப்பங்களும், கொள்கை ரீதியான பித்அத்களும், குராஃப்பத்துகளும் மற்றும் தர்க்க ரீதியான வாதங்களும் நிறைந்து காணப்படுகின்றன. மார்க்கத்தை முறையாக கற்றிருந்த உலமாக்கள் குறைந்துவிட்டனர், மார்க்கத்தை முறையாக கற்காத பேச்சாளர்கள் அதிகமாகி விட்டனர். மேலும் மார்க்கத்தின் பெயரால் பொய் பேசுபவர்கள் வெளிப்பட்டுக் கொண்டிருக்கின்றனர், அறிவிலிகள் மார்க்கத்தை பற்றி பேசுகின்றனர். இத்தகைய குழப்பமான சூழ்நிலையில் ஷெய்க் முஹம்மத் இக்பால் மதனீ அவர்கள் சத்தியத்தை நிலைநாட்டுவற்காக முயற்சி செய்துக் கொண்டிருக்கிறார்கள். அல்லாஹ் அவர்களின் முயற்சியை அங்கீகரித்துக் கொள்வானாக! அதனை அவனுக்காக மட்டுமே செய்கின்ற இக்லாஸையும் வழங்குவானாக! ஆமீன்!

இப்படிக்கு

**டாக்டர் ஆர். கே. நூர் முஹம்மத்**

பொதுச் செயலாளர்,

ஜம்மிய்யத்தே அஹ்லே ஹதீஸ், தமிழ்நாடு-பாண்டிச்சேரி

ஹிஜ்ரி 1435 ஷவ்வால் 24

20.8.2014

## அஷ்ஷெய்க் எஸ். கமாலுத்தீன் மதனீ அவர்கள் மனமுவந்து அளித்த மதிப்புரை

**الحمد لله رب العالمين والصلاة والسلام على أشرف الأنبياء والمرسلين نبينا محمد وعلى أله وصحبه أجمعين, وبعد**

**فإن الشيخ الفاضل محمد إقبال المدني حفظه الله الداعي إلى الله والمتخرج من الجامعة الإسلامية بالمدينة المنورة , قد قام بترجمة كتاب "قطوف من الشمائل المحمدية" الذي الفه الشيخ الفاضل محمد بن جميل زينو رحمه الله إلى اللغة التاملية التي يتكلم بها ملائين من الناس في مختلف أنحاء العالم , ولاشك إن هذا الكتاب نافع جدا لمن يحب ان يعرف سيرة خاتم الأنبياء والرسل ورحمة للعالمين محمد صلى الله عليه وسلم وخاصة في هذا الكتاب بيان واضح عن أخلاقه صلى الله عليه وسلم وأدابه وتواضعه وكرمه وحلمه وشجاعته وغيرها التي ينبغي لكل مسلم ان يطلع عليها ويقتدي بها لأن الله تعالى وصف نبيه صلى الله عليه وسلم وقال: (وأنك لعلى خلق عظيم)**

**وقد بذل الشيخ محمد إقبال المدني جهودا مذكورة في ترجمة هذا الكتاب علما بأنه قد قام من قبل بتأليف وترجمة عدد من الكتب الدينية , وأن كل من يقرأ ترجمة هذا الكتاب من أهل اللغة التاملية سينتفع بها ويعرف عن أخلاق نبيه ويطبقه في حياته , فجزا الله المؤلف والمترجم وكل من يساهم لنشر هذا الكتاب خير الجزاء ويجعل جهودهم في ميزان حسناتهم يوم القيامة .**

**كمال الدين**

**رئيس المجلس الأعلى لجمعية أهل القران والحديث**

அஷ்ஷைய்க் முஹம்மது ஜமீல் பின் ஜைனு என்ற அறிஞர் எழுதிய குதூபுன் மினஸ் ஸமாயிலில் முஹம்மதிய்யா என்ற அரபி நூலை மரியாதைக்குரிய ஷைய்க் முஹம்மத் இக்பால் மதனீ அவர்கள் தமிழில் மொழிபெயர்த்து சில ஆண்டுகளுக்கு முன் வெளியிட்டார்கள். ஆயிரக் கணக்கான மக்கள் அதைப் படித்து அதனைப் படித்து பயனடைந்தனர். நபிகளாரின் நற்பண்புகளை தமிழ்பேசும் மக்கள் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற நன்னோக்குடன் மீண்டும் அந்த புத்தகத்தை வெளியிட அனைத்து முயற்சிகளையும் மேற்கொண்டு புதிய பொழிவோடு வழங்கியுள்ளார்கள்.

சரியான ஆதாரங்களின் அடிப்படையில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் அன்றாட வாழ்க்கை முறைகள் தொகுக்கப்பட்டுள்ள மூலப் புத்தகத்தை எளிய தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளார்கள். தள்ளாத பருவத்திலும் அல்லாஹ்வின் மார்க்கத்திற்காக இடைவிடாது உழைத்துக் கொண்டிருக்கும் அஷ்ஷைய்க் முஹம்மது இக்பால் மதனீ அவர்களுக்கு வல்ல அல்லாஹ் நல்ல உடல் ஆரோக்கியத்தையும், நீண்ட ஆயுளையும் வழங்குவானாக!

இந்த புத்தகத்தின் மூலம் ஆசிரியருக்கும் இது வெளிவர உதவியாக இருந்த அனைவருக்கும் அல்லாஹ் மறுமையில் நல்லருள் புரிவானாக! ஆமீன்!!

**எஸ். கமாலுத்தீன் மதனீ**

ஜம்மிய்யத்து அஹ்லில் குர்ஆல் வல் ஹதீஸ்

## அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களுடைய பிறப்பு

1. உயர்ந்தோனாகிய அல்லாஹ் கூறுகிறான்:

لَقَدْ مَنَّ اللهُ عَلَى الْـمُؤمِنِينَ إِذْ بَعَثَ فِيهِمْ رَسُولاً مِّنْ أَنفُسِهِمْ يَتْلُو عَلَيْهِمْ آيَاتِهِ وَيُزَكِّيهِمْ وَيُعَلِّمُهُمُ الْكِتَابَ وَالْحِكْمَةَ وَإِن كَانُواْ مِن قَبْلُ لَفِي ضَلالٍ مُّبِينٍ

*நிச்சயமாக அல்லாஹ் விசுவாசிகளின் மீது அருள்புரிந்தான் அவர்களில் ஒரு தூதரை அவர்களிலிருந்தே அவன் அனுப்பி வைத்தான் அவர்களுக்கு அவனுடைய வசனங்களை அவர் ஓதிக் காண்பித்து, அவர்களைப் (பாவத்திலிருந்து) பரிசுத்த மாக்கியும் வைக்கின்றார் அவர்களுக்கு வேதத்தையும் (குர்ஆனையும்) ஞானத் தையும் (ஸுன்னத்தையும்) கற்றுக் கொடுக்கின்றார் நிச்சயமாக அவர்கள் இதற்கு முன் பகிரங்கமான வழிகேட்டில் இருந்தனர்.*

அத்தியாயம் ஆலு இம்ரான் வசனம் 164

2. மேலும், உயர்ந்தோனாகிய அல்லாஹ் கூறுகிறான்

قُلْ إِنَّمَا أَنَا بَشَرٌ مِّثْلُكُمْ يُوحَى إِلَيَّ أَنَّمَا

*“(நபியே) நீர் கூறுவீராக நிச்சயமாக நான் உங்களைப் போன்ற ஒரு மனிதன் தான் நிச்சயமாக (வணக்கத்திற்குரிய) உங்களுடைய நாயன் ஒரே நாயன்தான் என்று எனக்கு வஹீ மூலம் அறிவிக்கப் படுகிறது.”* (அத்தியாயம் அல்கஹ்ஃபு 110)

3. திங்கட்கிழமை நோன்பு நோற்பது பற்றி அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களிடம் கேட்கப்பட்டது அ(தற்க)வர்கள் அது ஒரு நாள் அதில் தான் நான் பிறந்தேன் அதில் தான் நபியாக நான்

அனுப்பப்பட்டேன், அதில் தான் என்மீது குர்ஆன் இறக்கி வைக்கப்பட்டது என்று கூறினார்கள்.

இதனை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்

4. மக்கா முகர்ரமாவில் (நபிஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்) பிறந்த வீடு என அறிமுகமான ஒரு வீட்டில், யானை (ச்சண்டை நடந்தேறிய) வருடம் ஈஸவீ 571ஆம் ஆண்டு ரபீஉல் அவ்வல் மாதம் திங்கட்கிழமையன்று (ஊர்மக்களுக்கு மத்தியில்) அறிமுகமான பெற்றோருக்கு (மகனாக) அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பிறந்தார்கள். அவர்களுடைய தந்தை அப்துல்லாஹ் பின் அப்துல் முத்தலிப், அவர்களுடைய தாயார் ஆமினா பின்த் வஹப், அவர்களுடைய பாட்டனார், அவர்களுக்கு முஹம்மது எனப் பெயர்வைத்தார், இன்னும் அவர்களுடைய தந்தை அவர்களின் பிறப்பிற்கு முன்பே இறப்பெய்தி விட்டார்.

5. கண்ணியம் மிகுந்த இத்தூதரின் தகுதியை அறிவது நிச்சயமாக முஸ்லிம்களின் கடமையாகும். அவர்களின் மீது இறக்கிவைக்கப்பட்ட குர்ஆனைக் கொண்டு தீர்ப்பு வழங்குவார்கள் அவர்களுடைய நற்குணங்களால் (முஸ்லிம்கள்) தங்களுடைய குணங்களை அமைத்துக் கொள்வார்கள், மேலும் நிச்சயமாக நான் பிரார்த்தனை செய்து அழைப்பதெல்லாம் என் இரட்சகனையே அவனுக்கு ஒருவரையும் நான் இணையாக்கமாட்டேன் என்று (நபியே) நீர் கூறுவீராக என்ற உயர்ந்தோனாகிய அல்லாஹ்வின் கூற்றில் வடிவமைத்து விட்ட அவர்களின் தூதுத்துவத்தை (மனித சமூகத்தின்பால் எடுத்து வைக்க) எந்த தவ்ஹீதைக் கொண்டு ஆரம்பித்தார்களோ அதன் பக்கம் அழைப்பதை மிக முக்கியமாகக் கொள்வார்கள்.

அல்ஜின் அத்தியாயம் வசனம் 20

## (அல்லாஹ்வின்) தூதர் ﷺ அவர்களுடைய வம்சாவழி

1. உயர்ந்தோனாகிய அல்லாஹ் கூறுகிறான்

مُّحَمَّدٌ رَّسُولُ اللهِ

*முஹம்மது அல்லாஹ்வின் தூதராவார் (48:29)*

2. அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறுகிறார்கள் எனக்கு ஐந்து பெயர்கள் உள்ளன. நான் முஹம்மது - புகழப்பட்டவர் - ஆவேன். நான் அஹ்மத்-அல்லாஹ்வை அதிகமாகப்

புகழ்பவர் ஆவேன். நான் மாஹீ- அழிப்பவர் ஆவேன். என் மூலமாக அல்லாஹ் நிராகரிப்பை அழிக்கின்றான். நான் ஹாஷிர்-ஒன்று திரட்டுபவர் ஆவேன். மக்கள் எனக்குப் பின்னால் ஒன்று திரட்டப்படுவார்கள் நான் ஆகிப் (அல்லாஹ்வுடைய தூதர்களில்) இறுதியானவர் ஆவேன்.

புகாரி மற்றும் முஸ்லிம் பதிவு செய்துள்ளனர்

3. அல்லாஹ்வின் தூதர் ஸல்லலல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், தங்களுக்குரிய பல பெயர்கள் நமக்குப் பொருள் சொல்லிக்காட்டிகிறார்கள்,

நானே முஹம்மது, நானே அஹ்மது, நானே நபிமார்களில் கடைசியானவன், மற்றும் தவ்பாவை தன் சமூகத்தினருக்காக அல்லாஹ்விடமிருந்து கொண்டு வந்த நபி, கிருபையுடைய நபி, என்றும் கூறினார்கள்.

இதனை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்

4. அல்லாஹ்வின் தூதர் ஸல்லலல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியதாவது குறைஷி மறுப்பாளர்களின் திட்டுதலையும், அவர்களின் சபித்தலையும் என்னை விட்டு அல்லாஹ் எப்படி திருப்பி விடுகிறான் என்பதைக் கண்டு நீங்கள் வியப்படைய வில்லையா என்னை முதம்மம் இகழப்படுவர் என்று சொல்லி ஏசுகிறார்கள் சபிக்கிறார்கள். ஆனால் நானோ முஹம்மத் புகழப்படுபவர் ஆவேன்.

இதனை புகாரி பதிவு செய்துள்ளார்கள்

5. "நிச்சயமாக அல்லாஹ், இஸ்மாயீலின் சந்ததிகளிலிருந்து "கினானாவைத் தேர்வு செய்தான். "கினானா"விலிருந்தே குரைஷியரைத் தேர்வு செய்தான் குறைஷியரிலிருந்தே பனூ ஹாஷிமைத் தேர்வு செய்தான்" பனூ ஹாஷிமிலி ருந்தே என்னைத் தேர்வு செய்தான்" என அல்லாஹ்வின் தூதர் ஸல்லலல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

இதனை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்

6. அல்லாஹ்வின் தூதர் ஸல்லலல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "என் (இயற்)பெயரைச் சூட்டிக்கொள்ளுங்கள் (ஆனால் அபுல்காசிம் எனும்) எனது குறிப்புப் பெயரைச் சூட்டிக்கொள்ளாதீர்கள். ஏனெனில், நானே பங்கீடு செய்பவன் (காசிம்) ஆவேன். உங்களிடையே நான் பங்கீடு செய்கிறேன்" என்று கூறினார்கள்.

இதனை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்

## அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களை நீர் பார்ப்பது போன்று

1. "மனிதர்களில் அழகிய முகமுடையவர்களாகவும், அழகிய குணமுடையவர்களாகவும், உடல் அமைப்பில் மிக உயரமாகவும் இல்லாமல், குட்டையாகவும் இல்லாமல் இருந்தார்கள் அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்."

புகாரி மற்றும் முஸ்லிம் இதை பதிவு செய்துள்ளனர்.

2. "அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், வெண்மையான அழகிய முகத்தை உடையவர்களாக இருந்தார்கள்".

இதை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

3. "அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், (மிகக்கூடுதலான உயரம் மற்றும் மிகக்கட்டையானவர்களாக இல்லாது) நடுத்தாரமானவர்கள், இரு தோள்பட்டைக்கிடையில் விசாலமானவர்களாக, அடர்ந்த தாடியை உடையவர்களாக இருந்தார்கள், அவர்களைச் சிவப்பு நிறம் மிகைத்திருக்கும். அவர்களுடைய முடியானது அவர்களுடைய இரு காதுகளின் ஓரம் வரை இருந்தது, சிவப்பு நிற மேலாடை மற்றும் கீழாடையில் அவர்களை நான் கண்டேன், அவர்களைவிட மிக்க அழகானவரை நான் கண்டதேயில்லை".

இதை புகாரி பதிவு செய்துள்ளார்கள்.

4. தலை, இருகைகள், இருபாதங்கள் ஆகியவை பருமனாக, அழகான முகம் உடையவர்களாக அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இருநத்தார்கள், அவர்களுக்கு முன்போ, அவர்களுக்குப் பிறகோ அவர்களைப் போன்று நான் (எவரையும்) காணவில்லை.

இதை புகாரி பதிவு செய்துள்ளார்கள்.

5. "அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் முகம் சூரியன் மற்றும் சந்தரினைப் போன்றிருந்தது, அது வட்டமாகவும் இருந்தது".

இதை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

6. "அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மகிழ்ச்சியடைந்தால் அவர்களுடைய முகம் ஒளிபெற்றுவிடும். முடிவாக அவர்களின் முகம் சந்திரனின் ஒரு துண்டு போல் இருக்கும், அதை நாங்கள்

(அவர்களின் முகத்தில் கண்டு) அறிந்து கொள்பவர்களாகவும் இருந்தோம்". புகாரி மற்றும் முஸ்லிம் இதை பதிவு செய்துள்ளார்கள்

7. "அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் புன்னகைத்தல்லாது (உரத்துச்) சிரிக்க மாட்டார்கள், அவர்கள் பால் நீ உற்றுப் பார்த்தால் அவர்கள் சுருமா இடாதவர்களாக இருக்க, இருகண்ணிலும் சுருமா இட்டுள்ளார்கள் என்றும் கூறுவாய்".

ஹஸன் தரத்தையுடையதாகும், இதனைத் திர்மிதீ பதிவு செய்துள்ளார்கள்.

8. "தொண்டையின் கடைசிப்பகுதியை நான் காண்கின்ற அளவிற்கு, எல்லாப் பற்களும் தெரிகின்றவாறு சிரிக்கக் கூடியவர்களாக அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை நான் கண்டதில்லை, நிச்சயமாக அவர்களின் சிரிப்பு, புன்னகையாகத்தான் இருக்கும் என்று ஆயிஷா ரளியல்லாஹு அன்ஹா அறிவித்துக் கூறுகிறார்கள்.

இதை புகாரி பதிவு செய்துள்ளார்கள்.

9. ஜாபிர் பின் ஸமுரா ரளியல்லாஹு அன்ஹு அறிவித்துக் கூறுகிறார்கள்: "ஒளி மிகுந்த சந்திரனின் இரவில் அல்லாஹ்வின தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை நான் கண்டுவிட்டு, அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களையும் இன்னும் சந்திரனையும் நான் உற்று நோக்கினேன் - அவர்களின் மீது சிவப்பு நிற கீழாடை மற்றும் மேலாடை இருந்தது. அப்போது அவர்கள், "என்னிடம் சந்திரனைவிட மிக்க அழகானவர்களாக இருந்தனர்".

திர்மிதி இதைப் பதிவு செய்துள்ளார்.

ஹாகிம் இதைச் ஸஹீஹ் எனக் கூறி அதற்கு தஹபீ ஒப்புதல் தெரிவித்துள்ளனர்.

10. அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய தன்மைபற்றி கூறியவரின் கூற்று எத்துனை அழகானது!

"மிக்க வெண்மையானவரும் கூட, அவரின் முகத்தால் மழை பெய்விக்கப்படும், அனாதைகளுக்கு உணவளிப்பவர், கைம் பெண்களுக்கு (மற்றவர்களால்) ஏற்படும் அநீதிகளிலிருந்து தடுப்பவர்.

முஸ்லிம்களுக்கு பஞ்சம் ஏற்பட்டபோது அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், அல்லாஹும்மஸ்கினா - யா அல்லாஹ்! (மழை பெய்வித்து) எங்களுக்குத் தண்ணீர் புகட்டுவாயாக! என்று கூறி

துஆச் செய்தபோது மழை பெய்தது அப்போது அபூதாலிபின் கூற்றிலுள்ள இக்கவியை இப்னு உமர் மற்றும் அவரல்லாதோர் பாடினர்.

இதை புகாரி பதிவு செய்துள்ளார்கள்

கருத்து: வெண்மையானவர்களென வர்ணிக்கப்பட்ட அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், மனிதர்கள் அவர்களிடம் தங்களுடைய சங்கையான முகத்தால் அல்லாஹ்வின் பால் முன்னோக்கி மழையை அவர்களுக்கு இறக்கி வைக்குமாறு அவனிடம் பிரார்த்தித்து வேண்டுமாறு கேட்டார்கள், இ(ந் நிகழ்ச்சியான)தோ அவர்கள் வாழும் காலத்தில் நடந்தேறியதாகும். ஆனால் அவர்களின் மரணத்திற்குப்பிறகு அப்பாஸ் ரளியல்லாஹு அன்ஹு அவர்களை மழை பெய்வதற்காக தங்களுக்கு துஆ செய்யுமாறு கலீபா உமர் ரளியல்லாஹு அன்ஹு அவர்கள் (வஸீலாத்) தேடினார்கள். (அந்நிலையில்) தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் - (அவர்களின் மண்ணறைக்குச்) சென்று துஆச் செய்யுமாறு கேட்கவில்லை.

கினானாவைச் சேர்ந்த ஓர் ஆடவர் கவியேற்றி அவர் கூறுகிறார்.

உனக்கே புகழனைத்தும் (உரித்தாகும்!) நன்றி செய்தோரிலிருந்து புகழ் (உனக்கே உரித்தாகட்டும்!) நபி அவர்களின் முகத்தால் (அம்முகம்) வானத்திலிருக்கும் உன்னை நோக்கிக் கேட்ட பிரார்த்தனையினால் தண்ணீர் புகட்டப்பட்டோம்.

அவரைப்படைத்தவனாகிய அல்லாஹ்வை அழைத்து, அவனிடம் ஒரு பிரார்த்தனையைச் செய்தார்; தன்னிடமிருந்து பார்வையை ஒரு முகமாகவும் ஆக்கியிருந்தார்; மேலங்கியைப் போடுவது போன்று இன்னும் அதைவிட துரிதமாகவே இருந்தது. முடிவில் (மழை) முத்துகளை நாங்கள் கண்டு விட்டோம். பிரகாசமான மிக்க வெண்மையுடையீர் என அவருடைய தந்தையின் சகோதரர் அபூதாலிப் கூறியவாறே அவர்கள் இருந்தார்கள் அவர்களின் (பிரார்த்தனையின்) நிமித்தம் மேகக்கூட்டத்திலிருந்து அல்லாஹ் (தண்ணீரைக்) குடிப்பாட்டினான் அச்செய்திக்கு இதுவே கண்கூடாகும்,

ஆகவே, எவர் அல்லாஹ்விற்கு நன்றி செலுத்துகிறாரோ, அவர் மென்மேலும் பெறுவார்; எவர் அல்லாஹ்வை மறுக்கின்றாரோ, (நன்றி கொண்றவராகி விடுகிறாரோ) அவர் அதல்லாததைச் சந்திப்பார்.

இப்னுல் அஸூருக்குரிய மனாலுத்தாலிப் பக்கம் 106லிருந்து எடுத்தெழுதி யுள்ளோம்..

அருள் வளம் பெற்ற இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்.

(அல்லாஹ்வின்) தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அபூபக்ரு, அவர்களுடைய அடிமை, அவ்விருவருக்கு வழிகாட்டுபவர் ஆகியோர் மக்காவிலிருந்து புறப்பட்டு மதீனாவிற்குச் செல்லும் அவர்களுடைய வழியில் உம்முமஃபது எனப்பெயரிடப்பட்ட ஒரு பெண்ணின் இரு கூடாரங்களைக் கடந்தும் செல்கின்றனர்; (உம்மும்ஃபதாகிய) அவர் தன் கூடாரத்திற்கருகே அமர்ந்து (உணவுப் பண்டங்களை) உண்ண மற்றும் பருகக் கொடுத்து (வியாபரம் செய்து) வந்தார் அவரிடமிருந்து இறைச்சி மற்றும் ஈத்தம் பழத்தை (காசு கொடுத்து) வாங்குவதற்காக அவரிடம் விசாரித்தனர், அவரிடம் (வாங்குவதற்காக எந்தத் திண்பண்டத்தையும்) அவர்கள் பெறவில்லை, அவர்களிடமிருந்த வழிச்சாதம் தீர்ந்து அவர்களுக்கு பசி ஏற்பட்டபிறகு கூடாரத்தின் ஓரத்தில் ஒரு ஆட்டை அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் காண்கிறார்கள். (ஆட்டைக் கண்டுவிட்ட) தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்

உம்மு மஃபதே! இது என்ன ஆடு?

உம்மு மஃபத்: ஆண் ஆட்டின் தேவையற்ற பலவீனமடைந்து விட்ட ஒரு பெண் ஆடு.

(அல்லாஹ்வின்) தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அதில் பால் உண்டா

உம்மு மஃபது: (பால் வற்றிப்போய்) அது மிக்க பலவீனம் அடைந்து விட்டது.

தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்: அதிலிருந்து பால் கறக்க எனக்கு நீர் அனுமதி வழங்குகிறீரா?

உம்மு மஃபத்: என் தந்தை மற்றும் என் தாய் அர்ப்பணம்! அதிலிருந்து பால் கறக்கலாம் என்று தாங்கள் கண்டால் அதிலிருந்து பால் கறந்து கொள்ளுங்கள்.

(அதன் பிறகு) அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அந்த ஆட்டை அழைத்து தங்களுடைய கையினால் அதன் பால் காம்பைத் தடவிக் கொடுத்து, தன் புகழால் கண்ணியமடைந்து விட்ட அல்லாஹ்வின் பெயரையும் கூறி உம்மு மஃபதுக்காக அவர் ஆட்டில் (பரகத்தை நல்கிட) துஆவும் செய்தனர்; முடிவாக அந்த ஆடு தன்னிரு கால்களை விரித்துக் கறப்பதற்கு மடியும் சுரந்தது அப்போது பெரும்

பாத்திரத்தைக் கேட்டு வாங்கி அது நிறையும் வரை அதிலிருந்து பால் கறந்தனர்; பின்னர் அப்பெண்ணுக்கு அவர் வயிறு நிறையும் வரை குடிக்கக் கொடுத்தனர். தன் தோழர்களுக்கு அவர்களுடைய வயிறு நிறையும் வரையும் குடிக்கக் கொடுத்த விட்டு இரண்டாவது முறையாக பாத்திரத்தில் - அது நிறையும் வரை பால் கறந்து பின்னர் அதை அவரிடம் கொடுத்துவிட்டு அவர்களோடு பைஅத் (உடன்படிக்கை) செய்துவிட்டு அவரிடமிருந்து பிரயாணித்துச் சென்றும் விட்டனர்.

கொஞ்ச நேரத்திற்குப் பிறகு அப்பெண்ணின் கணவர் (அபூமஃபத்) பலவீன மடைந்துவிட்ட மெலிந்த ஆடுகளை இழுத்துக் கொண்டு வந்தடைந்தவர் பால் இருப்பதைக் காண்கிறார்! (ஆச்சரியமடைந்தவராக) அந்த ஆடு சினை தாங்கமுடியாத நிலையிலிருக்க, வீட்டிலும் பால் இல்லாதிருக்க இந்தப்பால் உனக்கு எங்கிருந்து கிடைத்தது?

உம்மு மஃபத்: இல்லை! அல்லாஹ்வின் மீது சத்தியமாக நிச்சயமாக அவருடைய நிலையில் இன்னின்னவாறு பரகத்துச் செய்யப்பட்ட ஓர் ஆடவர் நம்மைக்கடந்து சென்றார்.

அபூமஃபத்: உம்மு மஃபதே! அவரை எனக்கு வர்ணித்துக் காட்டுவீராக!

அல்லாஹவின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை உம்மு மஃபது வர்ணித்துக் காட்டுகிறார்:

சுடர் மேலிட்ட பிரகாசமான முகத்தையுடைய ஓர் ஆடவரை நான் கண்டேன், அவருக்கு உடலில் எவ்வித குறையுமில்லை, இளைத்தவரோ, தடித்தவரோ அவர் அல்லர் அழகான சுடர் மிக்கவர் அவருடைய இரு கண்களில் கருமை உண்டு கண் முடி நீண்டவர் அவருடைய சப்தத்தில் இனிமையும் அடர்த்தி உண்டு; அவருடைய இரு புருவங்கள் - அவை இரண்டும் நீண்டு வளைந்து ஒன்றேடொன்று இணைந்துள்ளன,

அவர் வாய் பொத்தி(ப் பேசாது) இருப்பின் அவரின் மீது கம்பீரமிருக்கும்; இன்னும் அவர் பேசினால், அழகு அவரை மேலிட்டுவிடும் தூரத்திலிருந்து (நீர்பார்த்தால்), மனிதர்களில் அழகு மிக்கவர் மற்றும் அவர்களில் மிக்க கம்பீரமானவர், சமீபத்தில் (நீர்பார்த்தால்) அவர்களில் தனியாகத் தெரிபவர் மற்றும் அவர்களில் மிகச் சிறந்தவர் சுருங்கக் கூறுபவர், அவரின் பேச்சோ கோர்க்கப்பட்ட முத்துகளைப் போன்றிருக்கும் விகாரமான உயரத்தையுடை யவரோ, மிகுந்த குட்டையானவரோ அல்லர், இரண்டு கொப்புகளுக் கிடையில் ஒரு கொப்பு போன்று மூவருக்கு மத்தியில் தோற்றத்தில் மிகச்

செழிப்புடையவர் அவர்களில் தரத்தால் மிகவும் உயர்ந்தவர்; அவரைச் சூழ அவருக்கென நண்பர்கள் உள்ளனர்; அவர் பேசினால் அவரின் பேச்சுக்கு அவர்கள் வாய் பொத்தியிருப்பர், இன்னும் அவர் கட்டளையிட்டால் அவரின் கட்டளையை ஏற்றுச் செயல்பட அவர்கள் விரைவர் அவரிடமுள்ள அவரின் தோழர் கூட்டம் அவருக்கு கீழ்ப்படிந்து நடப்பார்கள்; கடுகடுத்த முகத்தையுடையவரல்லர்; இல்லாதவற்றை உருவாக்கிப் பேசுபவருமல்லர்;

(இவற்றை அமைதியாகச் செவிமடுத்துக் கொண்டிருந்த அவரின் கணவர்)

அபூமஃபத்: அல்லாஹ்வின் மீது சத்தியமாக! மக்காவில் அவர் காரியம் பற்றி நமக்குக் கூறப்பட்டதே அத்தகைய குறைஷியரைச் சேர்ந்தவர் தான் அவர், அவரை திண்ணமாக நண்பராக நான் ஆக்கிக் கொள்ள (உறுதி கொண்டு) நாடிவிட்டேன்; அதற்குரிய வழியை நான் பெற்றுவிட்டால் திண்ணமாக (அவ்வாறே) நான் செய்வேன்;

(உம்மு மஃபதுவின் கூடாரத்தில் தங்கியிருந்து விட்டு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எவ்வித ஆபத்துமின்றிப் புறப்பட்டுச் சென்றுவிட்டார்கள் என்பதை மக்காவில் கீழ்க்கண்டவாறு அறிந்து கொள்கிறார்கள்)

மனிதர்களின் இரட்சகனாகிய அல்லாஹ் தன் சிறந்த நற்கூலியை இரு நண்பர்களுக்கு நல்குவானாக!

உம்மு மஃபதின் இரு கூடாரத்தில் (மதிய உணவிற்குப் பிறகு) அவ்விருவரும் (இளைப்பாறி) சிறிய தூக்கம் தூங்கினர்; அவ்விருவரும் நேர்வழியைக் கொண்டு (அங்கு) இறங்கினர், அதனால் அ(ப் பெண்ணான)வர் நேர்வழியையும் அடைந்தவர், முஹம்மதுவின் நண்பராக மாலைப் பொழுதை அடைந்தவர் திண்ணமாக வெற்றியடைந்துவிட்டார் என்று (கூறுபவரின்) சப்தத்தைக் கேட்பவர்களாக, எவர் கூறுகிறார் என்று அவர்கள் அறியாதவர்களாக மக்கா உயர் குரலோடு காலைப் பொழுதை அடைந்தது.

இது உறுதியான ஹஸன் ஹதீஸாகும் ஹாகிம் இதைப் பதிவு செய்து ஸஹீஹ்தெனவும் கூறினார்கள்; தஹபீயும் அதற்கு ஒப்புதல் தெரிவித்துள்ளார்கள், இப்னு கஸீர் அவர்கள், “உம்மு மஃபதுவின் சம்பவம் பலவழிகளில் - அவற்றில் சில, சிலவற்றைப் பலப்படுத்தும் மற்றும் மிகப் பிரபல்யமானதாகும் என்று கூறியுள்ளார்கள்.

## அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களுடைய சிறப்புகள்

1. உயர்ந்தோனாகிய அல்லாஹ் கூறுகிறான்

يَا أَيُّهَا النَّبِيُّ إِنَّا أَرْسَلْنَاكَ شَاهِدًا وَمُبَشِّرًا وَنَذِيرًا وَدَاعِيًا إِلَى اللهِ بِإِذْنِهِ وَسِرَاجًا مُّنِيرًا وَبَشِّرِ الْمُؤْمِنِينَ بِأَنَّ لَهُم مِّنَ اللهِ فَضْلًا كَبِيرًا

“*நபியே! நிச்சயமாக நாம் உம்மை (மனிதர்களுக்குச்) சாட்சி யாளராகவும், நற்செய்தி கூறுபவராகவும், அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவராகவும் அனுப்பி வைத்திருக்கிறோம் இன்னும் அல்லாஹ் வின்பால் அவனின் அனுமதி கொண்டு மக்களை அழைப்பவ ராகவும், பிரகாசிக்கும் விளக்காகவும் (உம்மை நாம் அனுப்பி யுள்ளோம்). (நபியே!) விசுவாசிகளுக்கு அல்லாஹ்விடமிருந்து, நிச்சயமாக அவர்களுக்கு பெரும் பேரருள் உண்டு என்று நீர் நன்மாராயமும் கூறுவீராக.*” (அல் அஹ்ஜாப் அத்தியாயம், வசனங்கள் 45,46,47)

2. மேலும், உயர்ந்தோனாகிய அல்லாஹ் கூறுகிறான்

مَّا كَانَ مُحَمَّدٌ أَبَا أَحَدٍ مِّن رِّجَالِكُمْ وَلَكِن رَّسُولَ اللهِ وَخَاتَمَ النَّبِيِّينَ وَكَانَ اللهُ بِكُلِّ شَيْءٍ عَلِيمًا

“*உங்களுடைய ஆண்களில் எவருக்கும் முஹம்மது தகப்பனாக இருக்கவில்லை; எனினும், அல்லாஹ் வுடைய தூதராகவும், நபிமார்களுக்கு(க் கடைசி) முத்திரையாகவும் (இறுதி நபியாகவும்) இருக்கிறார்; அன்றியும் அல்லாஹ் ஒவ்வொரு பொருளைப் பற்றியும் நன்கறிந்தோனாக இருக்கிறான்.*” (அல் அஹ்ஜாப் அத்தியாயம், வசனம் 40)

3. மேலும், உயர்ந்தோனாகிய அல்லாஹ் கூறுகிறான்

وَمَا أَرْسَلْنَاكَ إِلَّا رَحْمَةً لِّلْعَالَمِينَ

“*(நபியே!) உம்மை அகிலத்தாருக்கு ஓர் அருளாகவே அன்றி நாம் அனுப்பவில்லை*” (அல் அன்பியா 107)

4. மேலும், அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறுகிறார்கள்

பின்பற்றப்பட்டவர்களால் மறுமை நாளில் நபிமார்களில் நானே மிக்க அதிகமானவன், சுவனத்தின் வாயலைத் தட்டுபவர்களில் முதலாமவனும் நானே.

முஸ்லிம் இதனைப் பதிவு செய்துள்ளார்கள்.

5. மேலும் , ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறுகிறார்கள்:

சுவனத்தில் (செல்ல) பரிந்துரைப்பவரில் முதலாமவன் நானே, நான் உண்மைப்படுத்தப்பட்டவாறு நபிமார்களில் எந்த நபியும் உண்மைப் படுத்தப்படவில்லை. மேலும், நபிமார்களிலிருந்துள்ள ஒரு நபி - அவரை அவருடைய உம்மத்திலிருந்து ஒரே ஒரு ஆடவரைத் தவிர (மற்றெவரும்) உண்மைப்படுத்தவில்லை” (முஸ்லிம்)

6. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:

என்னுடைய இரட்சகனிடம் மூன்றைக் கேட்டேன், அவன் எனக்கு இரண்டைக் கொடுத்துவிட்டு ஒன்றைக் தடுத்து விட்டான், என்னுடைய உம்மத்தினரை பசியினால் அழித்துவிடாதிருக்குமாறு என் இரட்சகனிடம் நான் கேட்டேன், எனக்கு அதை அவன் கொடுத்தான், மேலும் என்னுடைய உம்மத்தினரை (தண்ணீரில்) மூழ்கடித்து அழித்து விடாதிருக்குமாறு அவனிடம் நான் கேட்டேன், எனக்கு அதை அவன் கொடுத்தான், அவர்களின் பகைமையை அவர்களுக்கிடையே ஆக்காதிருக்குமாறும் அவனிடம் நான் கேட்டேன்,அதை எனக்கு அவன் தடுத்துவிட்டான்

இதை முஸ்லிம் பதிவு செய்துள்ளனர்

மற்றொரு அறிவிப்பில்: “அவர்களல்லாதோரிலிருந்து எதிரியை அவர்களின் மீது சாட்டிவிடாதிருக்குமாறு அவனிடம் நான் கேட்டேன்”, அதை எனக்கு அவன் கொடுத்தான், இதனைத் திர்மிதீ, நஸாயீ ஆகியோர் பதிவு செய்துள்ளனர், இதன் அறிவிப்புத் தொடரை அல்பானீ ஸஹீஹ் எனக் கூறியுள்ளார்.

7. (மக்காவிலுள்ள மஸ்ஜிதுல் ஹராமிலிருந்து மஸ்ஜிதுல் அக்ஸாவிற்கு இரவில் பயணித்த சம்பவமான) இஸ்ராஉவின் ஹதீஸில் அனஸ் பின் மாலிக்

கூறுகிறார்கள், அதிலே பதிவாகி உள்ளது: "நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களோ, அவர்களுடைய இருகண்கள் உறங்கக் கூடிதாகும், அவர்களின் இதயமோ உறங்காது". (புகாரி)

8. "மறுமை நாளில் ஆதமுடை மக்களின் தலைவன் நானே, (கப்ரிலிருந்து வெளியேறுவதற்காக) பூமி எவர்களுக்காக பிளக்குமோ, அவர்களில் முதலாமவன் நானே, பரிந்துரைப்பவரில் மற்றும் பரிந்துரை ஏற்கப்படுபவரில் முதலாமவன் நானே" என அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறுகிறார்கள். (முஸ்லிம்)

9. மேலும், அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறுகிறார்கள்:

அனைத்து நபிமார்களைவிட (காரியங்கள்) ஆறால் நான் சிறப்பிக்கப் பட்டுள்ளேன்: பேச்சுக்களின் சுருக்கத்தை நான் கொடுக்கப்பட்டுள்ளேன் (எதிரிகளின் இதயங்களில்) திடுக்கம் (ஏற்படுவது) கொண்டு நான் வெற்றியும் அளிக்கப்பட்டேன் (எதிரிகளிடமிருந்து போர்க்களத்தில் கிடைத்த) வெற்றிப் பொருட்கள் எனக்கு (அனுபவிக்க) ஆகுமாக்கப்பட்டும் உள்ளது. பூமி எனக்கு தொழுமிடமாகவும் சுத்தம் செய்து கொள்ளும் சாதனமாகவும் ஆக்கப்பட்டது. அனைத்துப் படைப்பினங்கள் பால் "(எல்லாமனிதர்களுக்கும்) தூதராகவும் நான் அனுப்பப்பட்டுள்ளேன், நபிமார்கள் என்னைக் கொண்டே இறுதியாக்கப்பட்டார்கள்". (முஸ்லிம்)

10. "தலைமுறை தலைமுறையாக ஆதமுடைய மக்களின் நூற்றாண்டுகளில் மிகச் சிறந்தவற்றில் (நபியாகவும், ரசூலாகவும்) நான் அனுப்பப்பட்டேன், முடிவாக எதிலிருந்து நான் இருந்தேனோ அத்தகைய நூற்றாண்டில் நான் ஆகிவிட்டேன்" என்று அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (புகாரி)

மேலும், அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்,

11. "நிச்சயமாக எனக்கு உதாரணம் மற்றும் எனக்கு முன்னிருந்த நபிமார்களுக்கு உதாரணம் ஓர் ஆடவர் போன்றாகும், அவர் ஒரு கட்டிடத்தைக் கட்டி அதை அழகாக்கி நேர்த்தியாகவும் ஆக்கிவிட்டார், (ஆனால்) அதன் ஓரங்களில் உள்ள ஒரு ஓரத்தில் ஒரு செங்கலின் இடம் தவிர, (அவ்வாறு கட்டிமுடிக்கப்பட்ட கட்டிடமான) அதை மனிதர்கள் சுற்றிப்பார்த்து அதைப்பற்றி ஆச்சரியமும் அடைந்து இந்தச் செங்கல் நீ வைத்திருக்க வேண்டாமா? என்று கூறுவர் (நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்

அவர்கள்) நானே அந்தச் செங்கல், நானே நபிமார்களில் இறுதியானவன்" என்று கூறினார்கள். (புகாரி, முஸ்லிம்)

12. மேலும், அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "நிச்சயமாக நான் அல்லாஹ்விடம், நபிமார்களில் இறுதியானர் என எழுதப்பட்டிருந்தேன், நிச்சயமாக ஆதமோ அவர்களுடைய மண் படைப்பில் (பூமியின் மீது) போடப்பட்டிருந்தனர், மேலும், என் காரியத்தின் முதலாவது (நிலை) பற்றி உங்களுக்கு தெரிவிக்கிறேன்.

இப்ராஹீமின் பிரார்த்தனை, ஈஸாவின் நற்செய்தி என்னைப் பெற்றெடுத்தபோது என் தாயார் கண்டார்களே அத்தகைய கனவு ஆகியவையாகும், அவர்களுக்கு திட்டமாக ஒரு ஒளி வெளியாகி, ஷாம் தேசத்தின் மாளிகைகள் அதிலிருந்து அவருக்குப் பளிச்சிட்டன" என்று கூறினார்கள்.

இதனை ஹாகிம் சரிகண்டு தஹபீ ஒப்புதலும் தெரிவித்து மிஷ்காத்தில் அல்பானீ அவர்களும் அதனை ஸஹீஹ் எனக் கூறினார்கள்.

13. "ஹீரா குகையில் அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் மலக்கு ஜிப்ரீல் வந்து, "இக்ரஉ பிஸ்மி ரப்பிகல்லதீ கலக்" (படைத்தானே அத்தகைய உம்முடைய இரட்சகனின் பெயரால் ஓதுவீராக!) என்று கூறினார் அதை(ப் பெற்று)க் கொண்டு அவர்களுடைய இதயம் நடுங்கத்திரும்பி, குவைலிதின் மகளார் கதீஜாவிடம் நுழைந்து திண்ணமாக என்னைப் பற்றி நான் பயந்து விட்டேன் என்று (கூறி அவர்களுக்கு நடந்தேரிய) செய்தியை அவருக்குக் தெரிவித்தார்கள் (அதைச் செவியேற்ற) கதீஜா ரளியல்லாஹு அன்ஹா கூறினார்கள்:

(நீங்கள் கூறுவது போன்று) அல்ல! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! ஒருபோதும் அல்லாஹ் உங்களை இழிவு படுத்தமாட்டான் நிச்சயமாக நீங்கள் இரத்த சொந்தத்தை (த்துண்டித்து விடாது)ச் சேர்த்துக் கொள்கிறீர்கள் தனித்து இயங்க முடியாதவரின் சுமையையும் சுமக்கிறீர்கள்; வறியவர்களுக்காக (உழைத்து) சம்பாதிக்கவும் செய்கிறீர்கள் விருந்தினர்களை உபசரிக்கவும் செய்கிறீர்கள்; உண்மையாகவே துன்பங்களில் ஆட்பட்டோருக்கு உதவி புரியவும் செய்கிறீர்கள் (ஆகவே, என்னுடன் வாருங்கள்; என்று கூறி) அவர்களை வரகா பின் நவ்ஃபல் என்பவரிடம் கதீஜா ரளியல்லாஹு அன்ஹா அவர்கள் (அழைத்துக்) கொண்டு சென்று தந்தையின் சகோதரரின் மகனாரே! உம்முடைய சகோதரரின் மகனாரிடமிருந்து செவியேற்பீராக என்று அவரிடம் கதீஜா (ரளியல்லாஹு அன்ஹா) கூறினார்கள்.

அப்போது அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்

அவர்கள் தாங்கள் கண்டதைப்பற்றி அவருக்குத் தெரிவிக்கிறார்கள், (அதைக்கேட்டுவிட்டு) வரகா அவர்களிடம், “மூஸாவின் மீது அல்லாஹ் இறக்கிவைத்தானே அத்தகைய ஜிப்ரீல் தான் அவர், அ(ழைப்புப் பணி நடந்தேரும் சமயத்)தில் நான் வாலிபனாக இருக்க வேண்டுமே! உம்முடைய சமூகத்தார் உம்மை (ஊரிலிருந்து) வெளியேற்றிவிடுகின்ற போது நான் உயிரோடு இருக்க வேண்டுமே என்று கூறுகிறார். (அதைக் கேட்டவிட்ட) அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், “என்னை அவர்கள் (என் சொந்த ஊரிலிருந்து) வெளியேற்றி விடக்கூடியவர்களா எனக்கேட்கிறார்கள்; அ(தற்க)வர், ‘ஆம்’ எந்த ஒரு ஆடவரும் நீர் கொண்டுவந்ததைப் போன்று கொண்டு வரவில்லை, அவர் விரோதிக்கப்பட்டே தவிர உம்முடைய நாள் என்னை அடையுமானால் மிகப்பெரிய உதவியாக உமக்கு நான் உதவி செய்வேன் என்றும் கூறினார்.

வஹீயின் ஆரம்பம் பற்றிய நூலில் இதை புகாரி அவர்கள் பதிவு செய்துள்ளார்கள்.

## அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களின் நபித்துவ முத்திரை

1. சிவப்பாக - அது அவர்களுடைய உடலுக்கு ஒப்பாக - துருத்திக் கொண்டிருந்த ஒரு உறுப்பாக அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய இரு தோள்பட்டைகளுக் கிடையில் முத்திரையை, புறாவின் முட்டையைப் போன்று நான் கண்டேன் என்று ஜாபிர் பின் ஸமுரா ரளியல்லாஹு அன்ஹு அறிவித்துக் கூறுகிறார்கள். (முஸ்லிம்)

2. “நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை நான் பார்த்துவிட்டு அவர்களிடம் நான் நுழைந்தும் விட்டேன், அவர்களுடைய உணவிலிருந்தும் உண்டேன், அவர்களுடைய பானத்திலிருந்தும் பருகினேன், அவர்களுடைய இடது தோள் பட்டையின் மேல்பகுதியில் கருமச்சம் போன்று - தோலின் மேல் பகுதியின் மீது துருத்திக் கொண்டிருக்கும் வட்டமான மருவைப் போன்று நபித்துவத்தின் முத்திரையை நான் பார்த்தும் விட்டேன்” என்று அப்துல்லாஹ் பின் ஜர்ஸஸ் ரளியல்லாஹு அன்ஹு அறிவித்து கூறுகிறார்கள். (முஸ்லிம்)

3. எனது சிறிய தாயார் என்னை அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் கொண்டு சென்று, “அல்லாஹ்வின் தூதர் அவர்களே! நிச்சயமாக என் சகோதரியின் மகனார் வேதனை அடைகிறார்” என்று கூறினார் (அதைக்கேட்ட ஸல்லல்லாஹு அலைஹி

வஸல்லம்) அவர்கள் என் தலையைத்தடவி விட்டு எனக்கு பரக்கத்திற்காக துஆவும் செய்து விட்டு வுளூவும் செய்தார்கள், பின்னர் அவர்களுடைய வுளூவுச் செய்த தண்ணீரிலிருந்து நான் குடித்துவிட்டு அவர்களுடைய முதுகுக்குப்பின்னாலும் சென்று அவர்களுடைய இரு தோள்பட்டைகளுக் கிடையில் முத்திரையின் பால் நான் நோட்டமிட்டேன், அப்போது அது சிட்டுக்குருவியை விடச்சிறிய பறவையின் முட்டையைப் போன்றிருந்தது என்று அஸ்ஸாயிப் பின் யஜீது கூற நான் செவியேற்றேன் என அல்ஜஅது பின் அப்துர்ரஹ்மான் அறிவித்துக் கூறுகிறார்கள். (புகாரி, முஸ்லிம்)

## நபி ﷺ அவர்களின் (வேர்வைத் துளிகளின்) கஸ்தூரி வாசனை (நிறைந்த நுகர்வதற்கு ஏற்றதாக உள்ள) நறுமணம்

1. அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அழகான நிறத்தையுடையவர்களாக இருந்தார்கள், நிச்சயமாக அவர்களின் வேர்வையானது முத்து போன்றிருக்கும்; அவர்கள் நடந்தால் அழகாக எட்டு வைப்பார்கள், தீபாஜை (ஒரு வகைப்பட்டுத்துணியை)யும், பட்டையும் அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய முன் கையைவிட மிக மிருதுவானதாக நான் தொட்டதில்லை. கஸ்தூரியையும் (நறுமணங்களில் ஒருவகையான) அம்பரையும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய வாடையைவிட நறுமணமுள்ளதாக நான் நுகரவும் இல்லை. என்று அனஸ் ரளியல்லாஹு அன்ஹு அறிவித்துக் கூறுகிறார்கள். (புகாரி, முஸ்லிம்)

2. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எங்களிடம் பிரவேசித்தார்கள், பின்னர் எங்களிடம் அவர்கள் (களைப்பாற) ஒரு சிறிய தூக்கம் தூங்கினார், அப்போது அவர்கள் வேர்த்தார்; (அதைக்கண்ட) என் தாயார் ஒரு பாட்டலைக் கொண்டு வந்து அதில் வேர்வையை துடைத்து எடுக்க ஆரம்பித்தனர்; அது சமயம் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் விழித்து, “உம்மு ஸுலைமே! நீர் செய்கின்ற இது என்ன? எனக் கேட்டார்கள்”, அ(தற்க)வர், இது உங்களுடைய வேர்வை(த் துளிகள்) அதை எங்களுடைய நறுமணங்களில் நாங்கள் ஆக்குவோம், அதுவோ நறுமணத்தில் மிகுந்த நறுமணமுடையதாகும் என்று கூறினார் என அனஸ் ரளியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவித்துக் கூறுகிறார்கள். (முஸ்லிம்)

3. (நபி) ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எதிரில் வந்தால், மணமுள்ள வாசனையினால் அறியப்படுபவர்களாக இருந்தார்கள்,

4. நிச்சயமாக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நறுமணத்தை மறுக்காதவர்களாக இருந்தனர் (புகாரி)

## அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களுடைய தூக்கத்தின் தன்மை

1. இரவில் முற்பகுதியில் உறங்கிவிட்டு, அதன் பிற்பகுதியை உயர்ப்பிப்பவர்களாகவும் அவர்கள் இருந்தார்கள் (புகாரி, முஸ்லிம்)

2. "நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தங்களுடைய படுக்கைக்குச் சென்றால் பிஸ்மிகல்லாஹும்ம அமூது வஅஹ்யா" ("யா அல்லாஹ்! உன் பெயரால் நான் மரணிக்கிறேன் மற்றும் உயிர் பெற்று எழுவேன்") என்று கூறுபவர்களாக இருந்தார்கள், இன்னும் அவர்கள் தூக்கத்திலிருந்து விழித்தால் "அல்ஹம்து லில்லாஹில்லதீ அஹ்யானா பஅதமா அமாத்தனா வஇலைஹின்னஷுர்" நம்மை மரணிக்கச் செய்த பின் நமக்கு உயிரளித்தவனாகிய அல்லாஹ்விற்கே அனைத்துப்புகழும் உரித்தாகுக அவன் பாலே எழுப்பப்படுவோம் எனக் கூறுவார்கள்.

3. "ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தங்களுடைய தூங்குமிடத்தை அடைந்தால் தங்களுடைய வலது முன்கையை தங்களுடைய வலது கன்னத்திற்கு கீழே வைத்து ரப்பிக னீ அதாபக்க யவ்ம தப் அஸு இபாதக்க" (என்னுடைய இரட்சகா! உன்னுடைய அடியார்களை நீ எழுப்பும் நாளில் உன்னுடைய வேதனையிலிருந்து என்னை நீ காத்தருள்வாயாக!) என்றும் கூறுவார்கள்.

இதனைத் திர்மிதீ பதிவு செய்து ஸஹீஹ் எனக் கூறினார்கள்.

4. அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், ஒவ்வொரு இரவிலும் தங்களுடைய படுக்கைக்குச் சென்றால் அவர்களின் இரு முன்கைகளை ஒன்றாகச்சேர்த்து "குல்ஹுவல்லாஹு அஹது" "குல் அஊது பிரப்பில் பலக்" "குல் அஊது பிரப்பின்னாஸ்" ஆகிய (அத்தியாயங்களான)வற்றை அவ்விரண்டிலும் ஓதி, அவ்விரண்டில் ஊதிக் கொண்டு தங்களுடைய உடலில் அவர்கள் இயன்ற அளவிற்கு அவ்விரண்டையும் தடவி கொள்வார்கள், அவ்விரண்டாலும் தங்களுடைய தலை, தங்களுடைய முகம் அகியவற்றைக் கொண்டு (தடவ) அவர்கள் ஆரம்பித்து, தங்களுடைய உடலின் முன் பகுதியிலும் (தடவிக்கொள்வார்கள்) அதை மும்முறை அவர்கள் செய்வார்கள்

புகாரி மற்றும் முஸ்லிம் ஒருமித்துப் பதிவு செய்துள்ளார்கள்

5. (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் இரவில் எதன் மீது தூங்குவார்களோ அத்தலையணை, தோலினால் மற்றும் அதன் உட்பகுதி ஈச்ச ஓலைகளால் இருந்தது.

ஸஹீஹான தரத்தை உடையதாகும் இதனை அஹ்மது பதிவு செய்துள்ளார்கள்

6. எதன் மீது அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தூங்குவார்களோ அந்த விரிப்பு தோலினால் மற்றும் அதன் உட்பகுதி ஈச்ச ஓலைகளால் இருந்தது. (முஸ்லிம்)

7. அல்லாஹ்வின் தூதர் அவர்களே! நீங்கள் வித்ரு தொழுமுன் தூங்கப்போகிறீர்களா? என்று ஆயிஷா ரளியல்லாஹு அன்ஹா கேட்டார்கள், அ(தற்க)வர்கள் ஆயிஷாவே, நிச்சயமாக என் இருகண்கள் உறங்குகின்றன, என் இதயமோ உறங்குவதில்லை என்று கூறினார்கள்.

புகாரி மற்றும் முஸ்லிம் ஒருமித்துப் பதிவு செய்துள்ளார்கள்

## அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களின் ஓதுதல் மற்றும் அவர்களின் தொழுகை

وَرَتِّلِ الْقُرْآنَ تَرْتِيلا

*1. "குர்ஆனை (நன்கு திருத்தமாக) நிறுத்தி நிறுத்தியும் ஓதுவீராக!"*

(அல்முஜ்ஜம்மில் அத்தியாயம் வசனம் - 4) என உயர்ந்தோனாகிய அல்லாஹ் கூறுகிறான்.

2. மூன்று நாட்களைவிட மிகக் குறைவானவற்றில் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் குர்ஆனை (முழுமையாக) ஓதாதவர்களாக இருந்தனர்.

இது ஸஹீஹான எனக் தரத்தையுடையதாகும் இதனை இப்னு ஸஅது பதிவு செய்துள்ளார்கள்

3. ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தங்களது ஓதுதலை ஒவ்வொரு வசனமாக ஓதக்கூடியவர்களாக இருந்தனர்;

"அல்ஹம்து லில்லாஹி ரப்பில் ஆலமீன்" (என்று கூறிவிட்டுப்) பின்னர் நிறுத்து வார்கள், "அர்ரஹ்மானிர்ரஹீம்" (என்று கூறிவிட்டுப்) பின்னர் நிறுத்துவார்கள்

இது ஸஹீஹ் ஆகும், இதனைத் திர்மிதி பதிவு செய்துள்ளார்கள்

4. உங்களது சப்தங்களைக் கொண்டு (ஓதுவதால்) குர்ஆனை அழகாக்குங்கள் ஏனெனில் நிச்சயமாக அழகான சப்தம் குர்ஆனுக்கு அழகை அதிகப்படுத்து கிறது என ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

இது ஸஹீஹான ஹதீஸாகும், இதனை அபூதாவூது பதிவு செய்துள்ளார்கள்

5. குர்ஆனை (ஓதும்போது அதை)க் கொண்டு தங்களுடைய சப்தத்தை (நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் நன்கு நீட்டுபவர்களாக இருந்தார்கள்.

இது ஸஹீஹான ஹதீஸாகும் இதனை அஹ்மத் பதிவு செய்துள்ளார்கள்

6. ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சப்தமிடக்கூடியதை (சேவலின் சப்தத்தை)க் கேட்டால் தொழுகையை நிறைவேற்றுபவர்களாக இருந்தார்கள்.

புகாரி மற்றும் முஸ்லிம் இதனை ஒருமித்துப் பதிவு செய்துள்ளனர்.

7. (சில சந்தர்ப்பங்களில்) "தங்களது காலணிகளுடன் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் தொழுகையை நிறைவேற்றுபவர்களாக இருந்தனர்".

புகாரி மற்றும் முஸ்லிம் ஒருமித்துப் பதிவு செய்துள்ளனர்

8. (அல்லாஹுவின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் தஸ்பீஹை தங்களது வலக்கையால் எண்ணுபவர்களாக இருந்தனர்

இது ஸஹீஹாகும், இதனை திர்மிதி மற்றும் அபூதாவூது பதிவு செய்துள்ளனர்

9. "ஒரு காரியம் அவர்களுக்கு சங்கடத்தை ஏற்படுத்தினால் தொழுபவர்களாக இருந்தனர்"

இதன் தரம் ஹஸன் ஆகும் இதனை அஹ்மது, அபூதாவூத் ஆகியோர் பதிவு செய்துள்ளனர்.

10. (நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் தொழுகையில் அமர்ந்தால் தங்களது இரு முட்டுக்கால்களின் மீது தங்களுடைய இருகைகளை வைத்துக் கொண்டு கட்டைவிரலை அடுத்துள்ள தங்களது வலது (ஆட்காட்டி) விரலையும் உயர்த்தி(ப்பின்னர்) அதனால் துஆச் செய்வார்கள் (5/80 இலக்கமிட்டு தொழுகையில் அமரும் தன்மை பற்றிய

பகுதியில் முஸ்லிம் இதனைப் பதிவு செய்துள்ளார்கள்.)

11. (நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் வலது (ஆட்காட்டி) விரலை (தொழுகையில் இருப்பின் போது) அசைத்து அதன் மூலம் துஆ செய்பவர்களாக இருந்தார்கள்.

இதன் தரம் ஸஹீஹாகும், நஸாயீ இதனைப் பதிவு செய்துள்ளார்கள்

"(அசைக்கின்ற அந்நிலையில் ஆட்காட்டி விரலான) அது ஷைத்தானின் மீது இரும்பை (க் கொண்டு அடிப்பதை)விட நிச்சயமாக மிகக் கடினமானதாகும்" எனக்கூறுபவர்களாகவும் இருந்தார்கள்

இதன் தரம் ஹஸன் ஆகும் இதனை அஹ்மது பதிவு செய்துள்ளார்கள்

12. (நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் இடக்கை மீது வலக்கையை தங்களுடைய நெஞ்சின் மீது தொழுகையில் வைப்பவர்களாக இருந்தார்கள்.

இதனை இப்னு குஸைமா மற்றும் அவரல்லாதோர் பதிவு செய்து திர்மிதீ அதனை ஹஸன் தரத்தையுடையதெனவும் கூறினார்கள். இமாம் நவவீ அவர்கள் இதனை முஸ்லிமின் விளக்க உரையில் எடுத்துக் கூறியுள்ளார்கள். தொப்புகளுக்குக் கீழ் கைவைப்பது பற்றிய ஹதீஸை பலவீனமானதெனவும் கூறியுள்ளார்கள்.

13. ஸஹீஹான ஹதீஸ் கிடைத்துவிட்டால் அதுவே என் மத்ஹப் வழி என்ற கூற்றின் மீது நிச்சயமாக நான்கு இமாம்களும் ஒருமித்து கருத்துத் தெரிவித்துள்ளனர், ஆகவே விரலை அசைத்தல், நெஞ்சின் மீது (தொழுகையில்) கைவைத்தல் ஆகியவை தொழுகையின் சுன்னத்துகளில் உள்ளதாக இருக்கவே, அ(ந்த இமாமான)வர்களின் மத்ஹபில் உள்ளதாகவும் ஆகிவிடும்.

14. தொழுகையில் (ஆட்காட்டி) விரலை (இருப்பில்) அசைத்தல் எனும் நபி வழியை இமாம் மாலிக் மற்றும் அவரல்லாதோர், இன்னும் நவவீ அவர்களுக்குரிய ஷரஹுல் முஹத்தப் பாகம் 3 பக்கம் 454ல் இருப்பது போன்று ஷாஃபிய்யாக்களில் சிலர் எடுத்துக் கொண்டனர். ஜாமிஉல் உஸூலின் ஆய்வாளர் அதுபற்றி பாகம் 5, பக்கம் 404ல் எடுத்துக் கூறியுள்ளார்கள்.

15. மேற்கூறப்பட்ட ஹதீஸில் (விரலான) அதை அசைப்பதின் தத்துவத்தை அல்லாஹுவின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்

திண்ணமாகத் தெளிவு செய்துவிட்டார்கள், (அதன்) காரணம், நிச்சயமாக (ஆட்காட்டி) விரலை தொழுகையில் (இருப்பில்) அசைப்பதானது அல்லாஹ்வுடைய ஏகத்துவத்தின்பால் சைக்கினை செய்கிறது. இன்னும் இவ்வாறு அசைப்பதானது இரும்பின் அடியைவிட ஷைத்தானுக்கு மிகக் கடினமாக உள்ளது. காரணம்: நிச்சயமாக அவன் ஏகத்துவத்தை வெறுக்கிறான். ஆகவே, ஒவ்வொரு முஸ்லிமின் மீது அல்லாஹுவின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் பின்பற்றுவது மற்றும் அவர்களின் சுன்னத்தை வழிமுறையை மறுக்காதிருப்பது கட்டாயக் கடமையாகும். ஏனெனில், நான் தொழ என்னை நீங்கள் கண்டது போன்று தொழுங்கள்" என ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் திண்ணமாகக் கூறியுள்ளார்கள்.

இதனை புகாரி பதிவு செய்துள்ளார்கள்

## நபி ﷺ அவர்களுடைய நோன்பு

1. ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: "(நோன்பு நோற்பது கடமையென) விசுவாசங் கொண்டவராக (அதன் நற்கூலியையும் அல்லாஹ்விடம்) தேடியவராக எவர் (ரமளான்) மாத நோன்பு நோற்றாரோ அவருடைய பாவத்திலிருந்து முந்தியதை அவருக்காக (அல்லாஹ்வினால்) பொருத்தருளப்படுகிறது.

புகாரி மற்றும் முஸ்லிம் பதிவு செய்துள்ளனர்

2. "எவர் ரமளான் நோன்பை நோற்றுவிட்டு, ஷவ்வாலில் (ஆறு நோன்பு நோற்று இந்த) ஆறையும் தொடரச் செய்தாரோ காலம் முழுவதும் (வருடம் நிறைய) நோன்பு நோற்றதைப் போன்று அது ஆகிவிட்டது" என ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

முஸ்லிம் இதனைப் பதிவு செய்துள்ளார்கள்

1. ரமளானுக்குப் பிறகு ஷவ்வால் மாதத்தின் முதல் நாள் நோன்புப் பெருநாள் அன்று நோன்பு நோற்பதை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தடுத்துள்ளார்கள் ஆகவே பெருநாளைக்குப் பிறகு ஷவ்வால் மாதத்தின் ஆறு நோன்புகளை இயன்றால் நோற்காலம், இயலாவிட்டால் பிரித்தும் நோற்கலாம் தொடர்ந்து நோற்றால் மட்டுமே சரி என்று கூற ஹதீஸின் தெளிவில் ஆதாரமில்லை.

2. அரபா நாளன்று மற்றும் ஆஷூரா நாளன்று நோன்பு நோற்றவருக்கு,

சிறிய பாவங்களுக்குப் பரிகாரமாக ஆக்குமாறு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அல்லாஹ்விடம் கணக்கிட்டுக் கொள்வார்கள் என்பதுவே அதன் கருத்து ஏனெனில், பெரும் பாவங்கள். அவற்றைச் செய்தவர் தவ்பாச் செய்யாதவரை மன்னிக்கப்பட மாட்டாது.

3. வெள்ளி மற்றும் சனி நாட்களில் இந்நோன்பு நாள் வந்தடைந்தால் நோன்பு நோற்கக் கூடாதென சிலர் வாதிக்கின்றனர், ஆனால் வெள்ளி மற்றும் சனி நாட்களில் நோன்பு நோற்பதைத் தடை செய்த ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய நோக்கத்தெளிவை அறிந்து கொண்டால் வாதம் நில்லாது.

4. வெள்ளிக்கிழமை மிகச்சிறப்பிற்குரிய நாள் அந்நாளில் நோன்பிருப்பின் கூடுதல் நன்மை பெறமுடியும் என்றெண்ணி அந்நாளில் மட்டும் நோற்கக்கூடாது என்பதே தடைபற்றி வந்துள்ள தெளிவாகும், அது போன்றே சனிக்கிழமையை யூதர்கள் மகத்துவப்படுத்தி தங்களுடைய சிறந்த நாளாக நோன்பு நோற்றுவந்தனர் ஆகவே சனிக்கிழமை நோற்பதற்கு ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் தடைவித்தார்கள். ஆகவே தான் வெள்ளிக்கிழமை நோன்பு நோற்பவரை அதற்கு முந்திய நாளில் அல்லது அடுத்தநாளில் நோன்பிருந்தாலல்லாது நோன்பிருக்கக்கூடாது எனக்கூறினார்கள், ஆகவே இரு நாட்களை மகத்துவப்படுத்தி நோன்பிருக்கத்தான் தடையே தவிர, அரபா நாள், முஹர்ரம் 9, 10 ஆகிய நாட்கள் வெள்ளிக்கிழமையன்று வந்தால் நோன்பு நோற்க நபிவழியில் எவ்விதத்தடையுமில்லை என்பதை விளங்கிச் செயல்படுவோமாக.

5. ஒவ்வொரு மாதத்திலும் (பிறை 13,14,15 ஆகிய நாட்களில்) மூன்று (நோன்பு) மற்றும் ரமளான் முதல் (அடுத்துவரும்) ரமளான் வரை (நோன்பிருப்பதான) இது, காலம் அதன் முழுவதும் நோன்பு நோற்ப(தற்குச் சமமான) தாகும், அரபா நாளின் நோன்பானது, (ஹஜ்ஜை நிறைவேற்றும் நிமித்தம் அரபா மைதானத்தில் தங்குபவர் இந்நோன்பை நோற்பது அவருக்கு ஆகாது) அதற்கு முந்திய வருடம், அதற்குப்பிறகுள்ள வருடம் ஆகியவற்றுக்குப் பரிகாரமாக ஆக்குமாறு அல்லாஹ்விடம் நான் கணக்கிட்டுக் கொள்வேன், இன்னும் (முஹர்ரம் பத்தாம் நாளான) ஆஷூரா நாளின் நோன்பானது அதற்கு முந்திய வருடத்திற்குப் பரிகாரமாக ஆக்குமாறு அல்லாஹ்விடம் நான் கணக்கிட்டுக் கொள்வேன் என அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

இதனை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்

6. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: "எதிர் (வரும்) ஆண்டு வரை (உயிர் வாழந்து) நான் எஞ்சியிருந்தால் (முஹர்ரம் மாதம்) ஒன்பதாவது (நாள்) அன்று நிச்சயமாக நான் நோன்பு நோற்பேன்" என்று கூறினார்கள்.

இதனை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்

7. திங்கட்கிழமை மற்றும் வியாழக்கிழமை நோன்பு நோற்பது பற்றி அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வினவப்பட்டார்கள் அ(தற்க)வர்கள் கூறினார்கள்

இரண்டு நாட்கள் - அவ்விரண்டில், அகிலத்தாரின் இரட்சகனின் சந்நிதானத்தில் (மனிதர்களின்) செயல்கள் எடுத்துக் காட்டப்படுகின்றன. ஆகவே நான் நோன்பாளராக இருக்கவே என் செயல்கள் எடுத்துக் காட்டப்படுவதை நான் விரும்புகிறேன்.

நஸாயீ இதனைப் பதிவு செய்து அல்முன்திரீ, அது ஹஸன் தரத்தையுடையதெனக் கூறியுள்ளார்கள்.

8. "நோன்புப் பெருநாள் மற்றும் ஹஜ்ஜுப் பெருநாள் (அன்று) நோன்பு நோற்பதை விட்டும் அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தடைசெய்துள்ளார்கள்".

புகாரி மற்றும் முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்

9. ரமளான் மாதம் தவிர (வேறு) எந்த மாதத்தின் நோன்பையும் (மாதம்) முழுவதும் நிறைவு செய்தவர்களாக அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை நான் கண்டதில்லை என ஆயிஷா ரளியல்லாஹு அனஹா அறிவித்துள்ளார்கள்.

புகாரி மற்றும் முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

## அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களின் வணக்க வழிபாடு

1. உயர்ந்தோனாகிய அல்லாஹ் கூறுகிறான்

يَا أَيُّهَا الْمُزَّمِّلُ قُمِ اللَّيْلَ إِلَّا قَلِيلًا

*"போர்வை போர்த்திக் கொண்டிருப்பவரே! இரவில் (தொழுவதற்காக) எழுவீராக! சொற்ப(நேர)ம் தவிர"* (அல்முஜ்ஜம்மில் 1,2)

2. ஆயிஷா ரளியல்லாஹு அன்ஹா கூறுகிறார்கள்: "ரமளான் மற்றும் அதல்லாத (மாதங்களான)வற்றில் பதினொரு 'ரக்அத்'களைவிட அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அதிகப்படுத்துபவர்களாக இருந்ததில்லை. நான்கு 'ரக்அத்'கள் தொழுவார்கள், அவற்றின் அழகு மற்றும் அவற்றின் நீட்டம் பற்றி நீர் கேட்டுவிடாதீர்! (அவ்வளவு அழகாக அவை இருந்தன) பின்னர் நான்கு, 'ரக்அத்'கள் தொழுவார்கள்; அவற்றின் அழகு மற்றும் அவற்றின் நீட்டம் பற்றி நீர் கேட்டுவிடாதீர்! (அவ்வளவு அழகாக அவை இருந்தன;) பின்னர் மூன்று ('ரக்அத்'கள்) தொழுவார்கள்; அதுசமயம் வித்ரு தொழு முன் உறங்கப்போகிறீர்களா? என நான் கேட்பேன், அ(தற்க)வர்கள், நிச்சயமாக என்னுடைய இரு கண்கள் அவை இரண்டும் உறங்குகின்றன, என் இதயமோ உறங்குவதில்லை" என்று கூறுவார்கள்.

புகாரி மற்றும் முஸ்லிம் இதனைப் பதிவு செய்துள்ளார்கள்.

3. அஸ்வது பின் யஜீது அறிவித்துக் கூறுகிறார்கள்: அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவ்களுடைய இரவுத் தொழுகை பற்றி ஆயிஷா ரளியல்லாஹு அன்ஹா அவர்களிடம் நான் கேட்டேன், அ(தற்க) வர்கள், "இரவின் முற்பகுதியில் அவர்கள் உறங்குபவர்களாக இருந்தார்கள், பின்னர் (தூக்கத்திலிருந்து வணக்கத்திற்காக) எழுந்து கொள்வார்கள்; (அவர்கள் எழுந்து கொண்ட நேரம்) 'ஸஹர்' நேரமாக அது இருப்பின் வித்ருத் தொழுவார்கள், பின்னர் தங்களுடைய படுக்கைக்கு அவர்கள் வந்து விடுவார்கள்; (ஆனால்) அவர்களுக்கு (இல்லற)த் தேவையிருப்பின் தங்களுடைய குடும்பத்தினருடன் கலந்து கொள்வார்கள் (அதற்குப் பின்னர்) பாங்கை அவர்கள் செவியேற்று விட்டால் எழுந்து கொள்வார்கள், குளிப்பு கடமையானவர்களாக அவர்கள் இருப்பின், தண்ணீரைத் தன்மீது ஊற்றி(க்குளித்து)க் கொள்வார்கள்; அவ்வாறில்லாவிட்டாலோ வுளூஉச் செய்து கொண்டு தொழுகைக்காக அவர்கள் புறப்பட்டும் விடுவார்கள்.

இதனை புகாரி, முஸ்லிம் அவரல்லாதோர் பதிவு செய்துள்ளனர்.

4. அபூஹுரைரா ரளியல்லாஹு அன்ஹு அறிவித்துக் கூறுகிறார்கள்: "அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அவர்களது இரு பாதங்கள் சுரந்துவிடும் வரை இரவில் தொழுபவர்களாக இருந்தார்கள், அப்போது, அல்லாஹ்வின் தூதர் அவர்களே! "உங்களது பாவத்தில் முந்தியது மற்றும் பிந்தியதை அல்லாஹ் உங்களுக்கு மன்னித்து விட்டிருக்க இ(வ்வாறு பாதம் சுரக்க தொழுவதான)தைச் செய்கிறீர்கள்? என அவர்களிடம் கூறப்படும். அ(தற்க)வர்கள் நன்றியுள்ள அடியாராக நான் இருக்க வேண்டாமா? என்று கூறுவார்கள்.

புகாரி மற்றும் முஸ்லிம் இதை ஒருமித்துப் பதிவு செய்துள்ளனர்.

5. அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:

“உங்களது இந்த உலகிலிருந்து பெண்கள் மற்றும் நறுமணம் எனக்கு விருப்பமாக்கப்பட்டுள்ளது; இன்னும் என்னுடைய கண் குளிர்ச்சி தொழுகையில் ஆக்கப்பட்டுள்ளது”.

இது ஸஹீஹான தரத்தையுடையதாகும். இதனை அஹ்மது பதிவு செய்துள்ளார்கள்.

## அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களுடைய பேச்சின் தன்மை

وَالنَّجْمِ إِذَا هَوَى مَا ضَلَّ صَاحِبُكُمْ وَمَا غَوَى
وَمَا يَنطِقُ عَنِ الْهَوَى إِنْ هُوَ إِلَّا وَحْيٌ يُوحَى

***1.** நட்சத்திரத்தின் மீது சத்தியமாக! அது விழுந்து (மறைந்து) விடும் சமயத்தில் (நம்முடைய தூதராகிய) உங்களின் தோழர் வழி தவறிவிடவில்லை; அவர் தவறான வழியில் செல்லவுமில்லை. அவர் தன் மன இச்சையின்படி (எதையும்) பேசுவதுமில்லை. இது அறிவிக்கப்படும் (வஹீயாகிய) அறிவிப்பே தவிர (வேறு) இல்லை (அந்நஜ்மு அத்தியாயம் வசனம் **1,2,3,4**)*

2. “எழுதுவீராக! என் உயிர் எவன் கைவசமிருக்கிதோ, அத்தகையவனின் மீது சத்தியமாக! என்னிலிருந்து உண்மையைத் தவிர (வேறெதுவும்) வெளியாகுவதில்லை” என்று அப்துல்லாஹ் பின் அம்ருக்கு ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

இது ஹஸன் தரத்தையுடையதாகும் இதை அபூதாவூது பதிவு செய்துள்ளார்கள்

3. “(எதிர்களின் இதயங்களில்) திடுக்கம் ஏற்படுவது கொண்டு வெற்றியளிக்கப் பட்டேன், அநேகக்கருத்துகளடங்கிய சுருக்கமானபேச்சை நான் கொடுக்கப் பட்டும் உள்ளேன், பூமியை எனக்கு தொழுமிடமாகவும், சுத்தம் செய்வதற்குரிய சாதனமாகவும் ஆக்கப்படுள்ளது; ஒரு சமயம் நான் உறங்கிக் கொண்டிருக்க பூமியின் (பொக்கிஷங்களுக்குரிய) சாவிகளை எனக்கு கொடுக்கப்பட்டுப்

பின்னர் என் கையில் (அவை) போடப்பட்டன" என அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

இதை புகாரீ பதிவு செய்துள்ளார்கள்

அபூஹுரைரா ரளியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள்:

அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சென்று விட்டார்கள், நீங்களோ அ(ப்பொக்கிஷங்களான) வற்றை வெளிப்படுத்துகிறீர்கள்.

4. அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பேச்சில் நீங்கள் தொடராகப்பேசுவது போன்று பேசுபவர்களாக இருக்கவில்லை, எனினும் தெளிவான விளக்கமான பேச்சாகப் பேசுபவர்களாக இருந்தனர், அவர்களிடம் எவர் அமர்ந்திருந்தாரோ, அவர் அதைமனனம் செய்து கொள்வார் என்று ஆயிஷா ரளியல்லாஹு அன்ஹா அவர்கள் அறிவித்துக் கூறுகிறார்கள்.

இதனை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்

5. செய்தியை அவர்கள் தெரிவிப்பவர்களாக இருந்தார்கள் அதை எண்ணும் ஒருவர் எண்ணிக் கொண்டிருந்தால் அதைச் சரியாக கணக்கிட்டுவிடுவார்.

புகாரீ மற்றும் முஸ்லிம் இதனை பதிவு செய்துள்ளனர்.

6. அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நீண்ட மவுனமுடையவர்களாக இருந்தார்கள்.

ஹஸன் தரத்தைவுடையது, இதனை அஹ்மது பதிவு செய்துள்ளார்கள்.

7. அவர்கள் கூறுவதை அறியப்படுவதற்காக (கூறும்) வார்த்தையை ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மும்முறை திருப்பிக் கூறுவார்கள். மற்றுமொரு அறிவிப்பில் (விளங்கப்படுவதற்காக) என வந்துள்ளது. (திருப்பிக் கூறுவதற்கு அவசியமான கடினமான வார்த்தைகளை மும்முறை திருப்பிக் கூறுவார்கள் என்பதே இதன் கருத்தாகும்).

8. பிரார்த்தனையிலிருந்து (இம்மை மற்றும் மறுமையில் நன்மைகள்) அனைத்தையும் தன்னுள் அடக்கியதை விரும்புபவர்களாக மற்றும் அதற்கிடையில் உள்ளவற்ற விட்டுவிடுபவர்களாக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இருந்தார்கள்.

ஸஹீஹான தரத்தை உடையதாகும் இதனை அஹ்மது பதிவு செய்துள்ளார்கள்.

9. அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பிரசங்கம் செய்தால் அவர்களுடைய இருகண்கள் சிவந்துவிடும், அவர்களுடைய சப்தமும் உயர்ந்துவிடும் அவர்களுடைய கோபமும் கடுமையாகிவிடும், முடிவாக (எதிரிகளான) அவர்கள் காலைப் பொழுதில் உங்களை அடைந்து விட்டார்கள் இன்னும் (எதிரிகளான) அவர்கள் மாலைப் பொழுதில் உங்களை அடைந்துவிட்டார்கள் என்று (போர்ப்பொறுப்பை ஏற்றிருக்கும் ஒருவர்தன்) படையினரை நிச்சயமாக எச்சரிக்கை செய்யக்கூடியவரைப் போன்று அவர்கள் இருந்தார்கள்.

இதனை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

## அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களுடைய நீர்த்தடாகத்தின் தன்மை பற்றி...

“என்னுடைய நீர்த்தடாகம் ஒரு மாத தொலை தூரத்தை உடையதாகும், அதன் நீர் பாலைவிட மிக்க வெண்மையானதாகும், அதன்மணம் கஸ்தூரியை விடவும் மிகுந்த நறுமணமுடையதாகும்; அதன் (நீரைப்பருகுவதற்காக அங்கு வைக்கப்பட்டிருக்கும்) பாத்திரங்கள் (அவற்றின் எண்ணிக்கை) வானத்தின் நட்சத்திரங்கள் போன்ற (அளவுள்ள) தாகும் அதிலிருந்து எவர் பருகினாரோ, அவர் ஒரு போதும் தாகிக்கமாட்டார்” என அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

இதனை புகாரீ பதிவு செய்துள்ளார்கள்.

## அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களுடைய பற்றற்வற்றிலிருந்து (சில) ... (ஆனால் துறவறமல்ல)

وَلَا تَمُدَّنَّ عَيْنَيْكَ إِلَىٰ مَا مَتَّعْنَا بِهِ أَزْوَاجًا مِّنْهُمْ زَهْرَةَ الْحَيَاةِ الدُّنيَا لِنَفْتِنَهُمْ فِيهِ وَرِزْقُ رَبِّكَ خَيْرٌ وَأَبْقَىٰ

*1. “மேலும், (நபியே!) அவர்களில் சில பிரிவாருக்கு உலக வாழ்க்கையின் அலங்காரமாக எதைக் கொண்டு சுகமனுபவிக்கச் செய்திருக்கிறோமோ, அதன் பக்கம் உம்முடைய இருகண்களையும் திண்ணமாகச் செலுத்த வேண்டாம், இவையாவும் (அதில்)*

*அவர்களைச் சோதிப்பதற்காகவே (நாம் கொடுத்திருக்கிறோம் ஆனால்) உம் இரட்சகன் உமக்கு மறுமையில் கொடுக்கயிருப்பது மிகச் சிறந்ததும் மிகநிலையானதுமாகும்".* (தாஹா அத்தியாயம், வசனம் 131)

2. அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் , தங்களுடைய மனைவியரிடம் ஒரு மாதகாலத்திற்குத் தாங்கள் பிரவேசிக்க மாட்டார்கள் என்று சத்தியம் செய்து விட்டு அவர்களை விட்டும் நீங்கிக் கொண்டு உயர்விடத்தில் இருந்தார்கள் என்ற ஹதீஸில்:

அந்த உயர்ந்த இடத்தில் அவர்களிடம் உமர் பிரவேசித்த போது, அங்கே, எதனால் தோல்பதனிடப்படுமோ அந்த இலைகளிலுள்ள குவியல், தொங்கவிடப்பட்ட தோல்பை தொலிக்கோதுமையின் ஒரு குவியல் ஆகியவை தவிர வேறெதுவும் அங்கு இல்லை, அப்போதவர்கள் மடிந்து போன ஒரு பாயின் மீது படுத்திருக்க, அது அவர்களுடைய விலாப்பகுதியில் தடிப்பை ஏற்படுத்தியிருந்தது, (இதைக் கண்டுவிட்ட) உமர் அவர்களின் இருகண்கள் நீரை வடித்தன; (இந்நிலையில் உமரைக்கண்ட அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள், உமக்கு (என்ன ஆனது) உம் காரியமென்ன? எனக் கேட்டார்கள்,

அப்போது (உமராகிய) நான் அல்லாஹ்வின் தூதர் அவர்களே! நீங்கள் அல்லாஹ்வின் படைப்பினங்களில் அல்லாஹ்வினால் தேர்வு செய்யப் பட்டவர்கள், கிஸ்ராவும், கைஸரும் - அவ்விருவரும் எந்த சுகபோகத்தில் இருக்க வேண்டுமோ அதில் (அதை அனுபவித்துக் கொண்டு) உள்ளனர் என்று கூறினேன், (அதைக் கேட்ட) அவர்களின் முகம் சிவப்படைந்த நிலையில் (எழுந்து) அமர்ந்து கொண்டு பின்னர் கத்தாபின் மகனாரே! "அவர்கள் ஒரு சில ஆடவர்கள் - அவர்களுடைய நல்லவைகள் அவர்களின் உலக வாழ்க்கையில் துரிதமாகக் கிடைத்து விட்டன" என்று கூறினார்கள்.

புகாரீ மற்றும் முஸ்லிம் பதிவு செய்துள்ளனர்

முஸ்லிமுடைய அறிவிப்பில்: "அவர்களுக்கு இவ்வுலகமிருக்க, நமக்கோ மறுமையி(ன் நிலையான வாழ்வி)ருப்பதை நீர் - பொருந்திக் கொள்ளவில்லையா? எனக் கேட்டார்கள், (அதற்கு) நான் 'ஆம்' அல்லாஹ்வின் தூதர் அவர்களே! என்று கூறினேன், அ(தற்க)வர்கள், கண்ணியம் மற்றும் மகத்துவமிக்க அல்லாஹ்வைப் புகழ்வீராக! என்று கூறினார்கள்.

அறிவிப்பாளர் உமர் பின் அல்கத்தாபு ரளியல்லாஹு அன்ஹு

3. அல்கமா இப்னு மஸ்ஊது அறிவித்ததாக அறிவித்துக் கூறுகிறார்கள்:

அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், ஒருபாயின் மீது படுத்திருந்தார்கள், அ(ப்பாயான)து அவர்களுடைய தோலில் தடிப்பை ஏற்படுத்தியிருந்தது, அதை நான் தடவி விட்டுக் கொண்டிருந்தேன், இன்னும் என் தந்தை மற்றும் தாய் அர்ப்பணம் எங்களுக்குத் தாங்கள் தெரிவித்திருக்கக் கூடாதா? அவ்வாறெனில், தங்களை (இவ்வகைத்) தடிப்பிலிருந்து காக்கும் எதையாவது (கொண்டுவந்து) அதன் மீது தங்களுக்காக விரித்திருப்போம்" என்று நான் கூறினேன், அ(தற்க)வர்கள் எனக்கும் "இவ்வுலகிற்கும் என்ன இருக்கிறது? நான் மற்றும் இவ்வுலகம் ஒரு வாகனிப்பவனைப் போன்றல்லாது இல்லை, ஒரு மரத்தடியில் அவன் நிழல் பெற்றுவிட்டுப் பின்னர் (அங்கிருந்து) அதிகாலையில் செல்லும்போது அதை அவன் விட்டு விடுகிறான்" என்று கூறினார்கள்.

இதனைத் திர்மிதி பதிவு செய்து ஹஸன், ஸஹீஹான ஹதீஸ் எனவும் கூறினார்கள்.

4. மேலும், அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: "'உஹுது' (மலை) போன்று நிச்சயமாக தங்கம் என்னிடமிருந்து மூன்று இரவுகள் எனக்கு வருவது - அந்நிலையில் அதிலிருந்து ஏதேனும் எஞ்சியிருப்பது எனக்கு மகிழ்ச்சியைத்தராது, (என்றாலும்) என்கடனை அடைப்பதற்காக நான் எதிர் நோக்கியிருக்கும் கொஞ்சத்தைக் தவிர"

இதனை புகாரீ பதிவு செய்துள்ளார்கள்

5. அம்ரு பின் அல்ஹாரிஸ் ரளியல்லாஹு அன்ஹுமா அறிவித்துக் கூறுகிறார்கள்:

அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், தங்களுடைய மரணத்தின் போது தங்கக்காசு வெள்ளிக்காசு, அடிமை, பெண் அடிமை, அவர்கள் அதன் மீது வாகனித்து வந்து வெண்மையான கோவேறு கழுதை அவர்களுடைய ஆயுதம், பிரயாணிகக்காக அவர்கள் தர்மமாக அதை ஆக்கியிருந்தார்களே அந்த பூமி ஆகியவற்றைத் தவிர எப்பொருளையும் விட்டுச் செல்லவில்லை.

இதனை புகாரீ பதிவு செய்துள்ளார்கள்.

## நபித் தோழர்கள் மற்றும் தூதர் ﷺ அவர்களுடைய பசி

ஒரு இரவின் போது அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் (தங்களுடைய வீட்டிலிருந்து) புறப்படுகிறார்கள், அப்போது அவர்கள், அபூபக்கர் அவர்களுடன் உமர் ஆகிய இருவரும் அவ்விருவருடைய வீட்டிற்கு வெளியில் அமர்ந்து இருக்கின்றனர்.

தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்: இந்நேரத்தில் உங்களிருவரின் வீடுகளிலிருந்து உங்களிருவரையும் வெளியேற்றியது எது?

அபூபக்கர் மற்றும் உமர்: அல்லாஹ்வின் தூதர் அவர்களே! பசி!

தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்: நானும்தான், என் உயிர் எவன் கைவசமிருக்கிறதோ அத்தகையவனின் மீது சத்தியமாக உங்கள் இருவரையும் வெளியேற்றியதுவே என்னையும் வெளியேற்றிவிட்டது!

அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், அவர்களை எழுந்திருக்குமாறு கட்டளையிட அவர்களுடன் அவர்கள் எழுந்து அன்ஸாரிகளிலுள்ள ஒரு தோழரின் வீட்டிற்கு அவர்கள் செல்கின்றனர், (அவர் பெயர் அபூல்ஹைஸம் மாலிக் பின் அத்தைஹான்) அவரை அவருடைய வீட்டில் (காணப்) பெறவில்லை (அப்போது வீட்டிலிருந்த) ஒரு பெண்: வருக! உங்கள் வரவு நல்வரவாகுக! (என்று தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் பேசியது).

தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்: (வீட்டாராகிய) இன்னவர் எங்கே?

அப்பெண்: சுவையான தண்ணீரை எங்களுக்காகக் கொண்டு வரச் சென்றுள்ளார், (இதற்கிடையில் வீட்டின் உரிமையாளராகிய) அபுல் ஹைஸம் மற்றும் அவர்களுடைய இரு தோழரைப் பார்த்துவிட்டு, நபி அவர்களைக் கட்டித் தழுவி, தன்தாய் , தந்தை ஆகியோரை அவர்களுக்கு அர்ப்பணமாக்குகிறார்.

அபுல் ஹைஸம்: புகழ் அனைத்தும் அல்லாஹ்விற்கே! இன்றையத்தினம் விருந்தினர்களால் என்னை விட மிகந்த சிறப்புடையவர் எவருமில்லை! (என்று கூறிவிட்டு) அபுல்ஹைஸம் அங்கிருந்து சென்று ஈச்சமரத்தின் ஒரு கொப்பைக் கொண்டு வருகிறார்: அதில் காய்ந்த, ஈரமான, தொலிசுருங்கிய (அனைத்து வகையான ஈத்தம் பழங்களான)வையும் இருந்தன.

அபுல் ஹைஸம்: இவற்றிலிருந்து புசியுங்கள், (என்று கூறிவிட்டு)

அவர்களுக்காக ஒரு ஆட்டை அறுப்பதற்காக தன்னுடைன் கத்தியை எடுத்துக் கொண்டு நடக்கிறார்.

தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்: பால் கொடுக்கும் ஆட்டைத் தவிர்ப்பீராக! (என்று அவரை எச்சரித்து விட்டு) தூதர் மற்றும் அவர்களுடைய இரு தோழர்கள் வயிறு நிறையும் வரை ஈத்தம் பழத்தையும் இறைச்சியையும் உண்டுவிட்டு தாகம் தீர சுவையான தண்ணீரையும் பருகுகிறார்கள்.

தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் (அபூபக்கர், உமர் ஆகியோரிடம்) "என் உயிர் எவன் கையிலிருக்கிறதோ, அத்தகையவனின் மீது சத்தியமாக! இந்த அருட்கொடை பற்றி மறுமை நாளில் நிச்சயமாக நீங்கள் கேட்கப்படுவீர்கள், உங்களுடைய வீடுகளிலிருந்து பசியானது உங்களை வெளியேற்றியது, பின்னர் நீங்கள் இந்த அருட்கொடைய அடைந்து கொண்டே திரும்புகிறீர்கள்.

இந்த ஹதீஸானதை முஸ்லிம், மாலிக், திர்மிதி ஆகியோர் பதிவு செய்துள்ளனர்.

ஹதீஸிலிருந்து பெறப்படும் கருத்துக்கள் :

1. தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் மற்றும் அவர்களுடைய தோழர்கள் பசியின் கொடுமை அவர்களுக்கு கடுமையாகிறது அப்போது அவரவர்களின் வீடுகளிலிருந்து வெளியேறுகிறார்கள் எனெனில் (எங்காவது) அவர்கள் உணவைப் பெறலாம்.

2. ஓர் ஆடவர் - தன் தோழர்களில் எந்த ஒருவரின் வீட்டிலும் உணவைப் பெறுவதற்காகச் செல்வது குற்றமல்ல.

3. அருட்கொடையின் சிறப்பு அதைப்படைத்தவனுக்கு நன்றி செய்தல் அதன் மூலம் அருட்கொடை செய்தவனைப் புறக்கணித்து விடாது நினைவில் வைத்தல் ஆகியவை பற்றி தெரிந்து கொள்ளுதல்.

4. ஒருபெண்ணிடம் திரைக்கு அப்பாலிருந்து கேள்வி கேட்பது ஓர் ஆடவருக்கு (மார்க்கத்தில்) ஆகுமானதாகும்.

## அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களுடைய வாழ்க்கை

1. உயர்ந்தோனாகிய அல்லாஹ் கூறுகிறான்:

وَوَجَدَكَ عَائِلًا فَأَغْنَىٰ

*"மேலும், தேவையுடையவராக அவன் உம்மைக் கண்டான் ஆகவே, உமது தேவையை நிறைவேற்றி (உம்மை) தேவையற்ற வராக ஆக்கிவிட்டான்"* (அள்ளுஹா அத்தியாயம் வசனம் - 7)

2. ஆயிஷா ரளியல்லாஹு அன்ஹா அவர்கள் அறிவித்து கூறுகிறார்கள்:

முஹம்மதின் குடும்பத்தினராகிய நாங்கள் எங்களை மாதம் கடந்துவிடும் (இந்நிலையில்) நெருப்பை மூட்டாதவர்களாக இருந்தோம், அவை இரண்டு கருத்தவைதான்; உலர்ந்த ஈத்தம்பழம் மற்றும் தண்ணீர், என்றாலும் எங்களைச்சுற்றி அன்ஸார்களிலுள்ள வீட்டார்கள் இருந்தனர், அவர்களுடைய ஒட்டகங்கள் அல்லது ஆடுகளிலிருந்து (கறந்த) பாலை அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்காக அனுப்பிக் கொடுப்பவர்களாக இருந்தனர் அந்தப்பாலிலிருந்து அவர்கள் குடித்து, எங்களுக்கும் குடிக்கக் கொடுப்பார்கள்.

இதனை புகாரீ மற்றும் முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

3. "அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், அல்லாஹ்வை அவர்கள் அடையும் (மரணிக்கும்) வரை உயர்வகையில் தயார் செய்யப்பட்ட ரொட்டியையோ, முழுமையாக பொரிக்கப்பட்ட ஆட்டையோ கண்டதாக நான் அறியேன்" என அனஸ் ரளியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவித்துக் கூறுகிறார்கள்.

இதனை புகாரீ பதிவு செய்துள்ளார்கள்

4. மேலும், தரங்குறைந்த உலர்ந்த ஈத்தம்பழத்திலிருந்து தங்களுடைய வயிறு கொள் அளவிற்கு வைத்துச் சுற்றிக் கொண்டிருக்க அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை நான் திண்ணமாகக் கண்டேன் என உமர் பின் அல்கத்தாபு ரளியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள்.

இதனை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

5. அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்காக கோதுமை ரொட்டி மற்றும் (அதைத்தொட்டுத் தின்னுவதற்காக) மணம் மாறிய (சிக்கடித்த) எண்ணையை, தான் கொண்டு சென்றதாக அனஸ் ரளியல்லாஹு அன்ஹு அறிவிக்கிறார்கள், இன்னும் அவர்களுடைய கவசத்தை ஒரு யூதனிடம் அடமானம் வைத்து(ப் பெற்ற பணத்திலிருந்து) தங்களுடைய குடும்பத்தினருக்காக தொலிக் கோதுமையை (வாங்கி)

எடுத்தார்கள்: முஹம்மதின் குடும்பத்தாரிடம் உலர்ந்த ஈத்தம் பழத்தில் ஒரு மரக்கால் இருந்தோ மற்றும் நல்ல கோதுமையிலிருந்து ஒரு மரக்கால் இருந்தோ ஒரு மாலைப் பொழுது கடக்கவில்லை" என அவர்கள் கூற அவர்களிடம் திண்ணமாக நான் செவியேற்றேன்.

இதனை புகாரீ பதிவு செய்துள்ளார்கள்.

6. தொடர்ந்து பல இரவுகள் இரவு உணவைப் பெறாதவர்களாகவும், அவர்களும் அவர்களின் குடும்பத்தினரும் (வயிற்றைச்) சுருட்டியவர்களாக இரவைக் கழித்துள்ளனர் அவர்களின் (உணவான) ரொட்டி அதிகமாக தொலிக் கோதுமையினால் இருந்தது.

தரம் ஹஸன், அஹ்மது மற்றும் அவரல்லாதோர் அதைப்பதிவு செய்துள்ளனர்

7. ஆயிஷா ரளியல்லாஹு அன்ஹா அறிவித்துக் கூறுகிறார்கள்.

"முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் குடும்பத்தினர் மதினாவை வந்தடைந்தது முதல், அவர்கள் மரணிக்கும் வரை தொடந்து மூன்று நாட்கள் நல்ல கோதுமை ரொட்டியினால் வயிறு நிறைய உணவுண்டதில்லை".

8. யா அல்லாஹ்! முஹம்மதுடைய குடும்பத்தினரின் உணவை (அவர்களின்) பசியைத் தீர்க்கின்ற அளவிற்கு ஆக்குவாயாக என்று அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறுவார்கள்.

இதனை புகாரீ மற்றும் முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

## அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களுடைய அழுகை

முதலாவது ஹதீஸ்: (அல்லாஹ்வின்) தூதர் அவர்கள் அப்துல்லாஹ் பின் மஸ்ஊது அவர்களுடன் உட்கார்ந்திருந்தனர்.

தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்: எனக்காக ஓதுவீராக!

இப்னு மஸ்ஊது ரளியல்லாஹு அன்ஹு: உங்கள் மீது (வேதம்) இறக்கப்பட்டிருக்க, உங்களுக்காக நான் ஓதுவதா?

தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்: அதை என் அல்லாத வரிடமிருந்து நான் செவியேற்க விரும்புகிறேன். அப்துல்லாஹ் பின் மஸ்ஊது அந்நிஸா அத்தியாயத்திலிருந்து "(நபியே!) ஒவ்வொரு சமுதாயத்திலிருந்து, ஒரு சாட்சியை நாம் கொண்டுவரும்போது இவர்களுக்கு (விரோதமான) சாட்சியாக உம்மை நாம் கொண்டும் வந்தால், நிராகரித்த இவர்களுடைய

நிலைமை எவ்வாறிருக்கும்?” என்ற இவ்வசனத்தை அவர் வந்தடையும் வரை ஓதினார். அந்நிஸா அத்தியாயம் வசனம் 41

தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்: “இப்போது உமக்குப் போதும்”.

இப்னு மஸ்ஊது அல்லாஹ்வின் தூதர் அவர்களின்பால் திரும்பிப் பார்க்கிறார்கள் அதுசமயம் அவர்களுடைய இரு கண்கள் நீரை வடிக்கின்றன.

புகாரீ மற்றும் முஸ்லிம் பதிவு செய்த ஹதீஸாகும்.

ஹதீஸிலிருந்து பெறப்படும் கருத்துக்கள் :

1. குர்ஆனை செவியேற்குமிடத்து பணிவென்பது அழுகையால் இருக்கலாம், (ஓலமிட்டுக்) கத்துவதால் அல்ல.

2. ஓதியவருக்கு அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் “இப்போது உமக்குப் போதும்” எனக் கூறினார்கள், ஸதகல்லாஹுல் அழீம் என்று அவர்கள் கூறவே இல்லை.

3. அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தன்னல்லாதவரிடமிருந்து குர்ஆனைக் கேட்பதை விரும்புவர்களாக இருந்தனர்.

இரண்டாவது ஹதீஸ்: அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் அவர்களுடைய மகனார் இப்ராஹீமிடம் - நபித்தோழர்கள் நுழைகிறார்கள், அவரோ, அவருக்குப் பாலூட்டுபவரிடம் இருக்கிறார்; அந்நிலையில் அவரை (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் (வாங்கி) எடுத்து அவரை முத்தமும் இட்டு முகர்ந்து கொள்ளவும் செய்கிறார்கள், பின்னர், நபித்தோழர்கள் அதற்குப்பிறகு (ஒருசமயம்) அவர்களிடம் நுழைகிறார்கள் அப்போது இப்ராஹீமை இறப்பெய்திவிட காணப் பெறுகிறார்கள்; (அந்நிலையில்) அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் இருகண்களும் நீரைக் கொட்டத் தொடங்கின (அதைக் கண்டுவிட்ட) அப்துர்ரஹ்மான் பின் அவ்ஃப்: அல்லாஹ்வின் தூதர் அவர்களே! நீங்களுமா (அழுகிறீர்கள்)?

அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்: “நிச்சயமாக அது அருளாகும் நிச்சயமாக கண்நீரை வடிக்கின்றது. இதயமோ கவலை அடைகின்றது. நம்முடைய இரட்சகனுக்குப் பொருத்த மானதையல்லாது நாம் கூறவும் மாட்டோம்; நிச்சயமாக நாங்கள், இப்ராஹீமே! உன் பிரிவால் கவலையும் அடைந்தவர்கள்”.

இதனை புகாரீ மற்றும் முஸ்லிம் பதிவு செய்துள்ளனர்.

ஹதீஸிலிருந்து பெறப்படும் கருத்துகள் :

1. சப்தம் மற்றும் ஒப்பாரியின்றி மய்யித்திற்காக அழுவது (மார்க்கத்தில்) அனுமதியுடையதாகும்.

2. (அல்லாஹ்வின்) நிர்ணயத்(தால் - விதியால் ஏற்பட்டு விட்ட)தை பொருந்திக் கொண்டு, கோபத்தைத் தெரிவிக்குமே அவ்வாறான பேச்சுக்களைத் தவிர்ப்பதோடு, மையித்திற்காக கவலை அடைவது அனுமதியுடையதாகும்.

## அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களைக் (கனவில்) காணுதல்

1. "கனவில் என்னை எவர் கண்டாரோ, திண்ணமாக என்னையே அவர் கண்டார், ஏனெனில் நிச்சயமாக ஷைத்தான் என்னைப் போன்று உருவெடுக்க (சக்தி) பெறமாட்டான்" என்று ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

இதனை புகாரீ பதிவு செய்துள்ளார்கள்.

2. கனவில் என்னை எவர் கண்டாரோ, திண்ணமாக அவர் உண்மையைப் பார்த்துவிட்டார் ஏனெனில் நிச்சயமாக ஷைத்தான் என் தன்மையில் அவன் உருவெடுக்க (சக்தி பெற) மாட்டான்" என்று ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.

இதனை புகாரீ மற்றும் முஸ்லிம் பதிவு செய்துள்ளனர்.

3. "கனவில் என்னை எவர் கண்டாரோ, அவர் விழிப்பில் என்னைக் காண்பார், என்னைப்போன்று ஷைத்தான் உருவெடுக்க (சக்தி) பெற மாட்டான்" என்று ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

புகாரீ மற்றும் முஸ்லிம் பதிவு செய்துள்ளனர்

ஹதீஸ்களிலிருந்து பெறப்படும் கருத்துக்கள் :

1. நிச்சயமாக (அல்லாஹ்வின்) தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை அவர்களுடைய உயரம் அவர்களின் நிறம், அவர்களின் தோற்றம் அவர்களின் தாடி மற்றும் அவையல்லாத ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய குணாதிசயங்கள் பற்றி வந்துள்ள விதத்தின் படி கனவில் கான்பது சாத்தியமானதாகும்.

2. இந்த ஹதீஸ்களுக்கு விரிவுரையில், நிச்சயமாக கனவில் காண்பதற்குரிய சரியான முறையானது.

ஸஹீஹான ஹதீஸ்களில் நிரூபணமாகிவிட்ட அவர்களுடைய தோற்றத்தில் அவர்களை (கனவில் காணும்) அவர் காண்பதாகும் அவையல்லாதவற்றைக் கொண்டு உயரமானவர்களாக அல்லது குட்டையானவர்களாக அல்லது கடுமையான மாநிறத்தில் அவர்களைப் பார்த்திருந்தால் (உண்மையில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களை அவர் பார்க்கவே இல்லை என்று இந்த ஹதீஸ்களின் தெளிவுரையில் மனாவீ திண்ணமாகக் கூறுகிறார்.

3. "விழிப்பில் என்னை அவர் காண்பார்" என்ற ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய கூற்றின் கருத்தாவது: (மறுமைநாளில்) நெருக்கம், பரிந்துரை ஆகிய தன்மைகளைக் கொண்டுள்ள பிரத்யேகமான காணுதலாகும் எனவும் மனாவீ கூறியுள்ளார்.

4. ஸுஃபிய்யாக்களில் சிலர் - மூன்றாவது ஹதீஸ் ஆதாரமாக வைத்து அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை - விழித்த நிலையில் இவ்வுலகில் அவர்கள் பார்ப்பார்கள் (பார்க்க முடியும்) என வாதிக்கிறார்கள்.

"அவ்வாதத்தினால், நிச்சயமாக இவர்கள் நபித்தோழர்கள் என்பது மற்றும் மறுமைநாள் வரை நபித்தோழமை நிலைத்திருக்கும் என்பது கட்டாயமாகிறது என்றும் வாதிக்கிறார்கள்" (இதை எந்த ஒரு முஸ்லிமும் கூறமாட்டான் - கூடாது) என்ற தன்னுடைய கூற்றின் மூலம் இப்னு ஹஜர் அவர்கள் (ஸுஃபிய்யாக்களாகிய) அவர்களின் மீது மறுப்பும் தெரிவித்துள்ளார்கள்.

5. "எனக்கு அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: என்று (பொய்யாகக் கூறப்பட்ட ஒரு ஹதீஸின் இறுதிவரை) அபுல் மாவாஹிப் அஷ்ஷாதிலி கூறினார் என்ற அவரின் கூற்றை ஸுஃபிய்யாக்களின் நூல்களில் ஒன்றில் நான் வாசித்தேன். (பின்னர் ஒரு சமயம்) இம்மனிதர் - இவர் நபித்தோழரா? என்று அந்நூலைத் தொகுத்தவரிடம் நான் கேட்டேன், அ(தற்க)வர் இல்லை, என்றாலும் அவருக்கும் அபுல்ஹஸன் அஷ்ஷாதலி அவர்களுக்குமிடையே ஐந்து ஷைக்குகளே உள்ளனர், அவரோ திண்ணமாக அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை விழித்த நிலையில் கண்டுள்ளார்!" என்று கூறினார்,

நபித்தோழர்கள் அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை - அவர்களுடைய மரணத்திற்குப் பிறகு விழித்த நிலையில்

காணவே இல்லையே என்று அவரிடம் நான் கூறினேன்; அவர் அதை ஒப்புக் கொள்ளவில்லை "எவர் என் மீது வேண்டுமென்றே பொய் கூறுகிறாரோ, அவர் தன் இருப்பிடத்தை நரகத்தில் ஆக்கிக் கொள்ளவும்" என்று தன் கூற்றின் மூலம் எச்சரிக்கை செய்துள்ளார்களே அத்தகைய அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மீது பெய்யுரைப்பதில் உள்ளதாகும் இது என்று என் மனதில் நான் கூறிக் கொண்டேன்.

6. நிச்சயமாக தான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை கனவில் கண்டு, தனக்கு ஏதோ ஒன்றைச் செய்யுமாறு அவர்கள் கட்டளை யிடுவதாக எண்ணுகிறாரே, அந்த மனிதரைப்பற்றி ஷைகுல் இஸ்லாம் ஜகரிய்யா அல் அன்ஸாரீ அவர்களிடம் கேட்கப்பட்டது? அ(தற்க)வர்கள் (அவ்வாறு எண்ணுவது) வெறுக்கப்பட்டது, இல்லை! ஹராமானதாகும் மேலும் நிச்சயமாகக் கனவுகள் அவற்றிலிருந்து மார்க்க சட்டங்களை எடுக்கப்ப(டுவதுகூ)டாது என மார்க்க அறிஞர்கள் ஆதாரத்துடன் தெளிவு செய்துள்ளனர்.

7. அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை - அவர்களுடைய மரணித்திற்குப் பிறகு விழித்த நிலையில் கண்டதாக எவர் வாதிக்கிறாரோ, அவரின் மீது "அவர்களுக்கு அப்பால் - அவர்கள் எழுப்பப்படும் நாள் வரை தடுப்பு உள்ளது" என்ற உயர்ந்தோனாகிய அல்லாஹ்வின் கூற்று மிகப்பெரும் மறுப்பாகும். ஆகவே, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய இறப்பிற்குப்பிறகு இவ்வுலகில் அவர்களை நடமாடுவதாகக் கண்டேன், என்று எவராவது கூறினால் முழுக்க முழுக்க பொய்யாகும்.

காரணம்: கப்ரிலிருக்கும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மறுமை நாளைக்கு முன்பு தங்களுடைய கப்ரிலிருந்து வெளியேறி வரமாட்டார்கள் என்பதற்கு இவ்வசனம் மற்றும் அவர்களின் ஹதீஸ்கள் ஆதாரமாகும்.

"விழித்த நிலையில் பார்ப்பார்" என்ற வாசகத்தின் கருத்து நூலாசிரியர் கூறுவது போன்று மறுமையில் தான் இவ்வுலகில் இல்லை. ஆனால், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை நபித் தோழர்கள் தவிர மற்றெந்த முஸ்லிமும் கனவில் பார்க்கவே முடியாது என்று ஒரு சிலர் வாதிக்கிறார்கள் அவர்களின் வாதத்திற்கு ஹதீஸில் தெளிவில்லை. நபித் தோழரல்லாதவரும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைக்

கனவில் காண இயலும், ஆனால் அதனால் எந்த மார்க்க சட்டங்களையும் நிரூபணம் செய்ய இஸ்லாத்தில் அனுமதியில்லை.

அல்லாஹ்வே மிக்க அறிந்தவன்.

## அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களின் இறப்பு

1. உயர்ந்தோனாகிய அல்லாஹ் கூறுகிறான்

وَمَا جَعَلْنَا لِبَشَرٍ مِّن قَبْلِكَ الْخُلْدَ أَفَإِن مِّتَّ فَهُمُ الْخَالِدُونَ

*"மேலும், (நபியே!) உமக்கு முன்னர் எம்மனிதருக்கும் (இவ்வுலகில்) நிரந்தர (ஜீவிய)த்தை நாம் ஆக்கவில்லை, ஆகவே நீர் இறந்து விட்டால் அவர்கள் (மட்டும் என்றென்றும்) நிரந்தரமாக இருக்கப் போகிறார்களா?"* (அல்அன்பியா அத்தியாயம் வசனம் 34)

2. நிச்சயமாக கண்ணியம் மற்றும் மகத்துவத்திற்குரிய அல்லாஹ் - தன் அடியார்களிலுள்ள ஒரு சமூகத்தார்க்கு அருளை அவன் நாடினால் அதற்கு முன்பு அதன் நபியைக் கைப்பற்றிக் கொள்கிறான், அதற்காக அவரை (அதன் காரியங்களை கவனித்து இவர்களின் நற்பேருகளை தயார்படுத்திவைக்கும்) முன்னவராக அதற்கு முன்னால் முந்தியவராக ஆக்கிவைக்கிறான், இன்னும் ஒரு சமூகத்தாரின் அழிவை (அல்லாஹ்வாகிய) அவன் நாடிவிட்டால் அ(ச்சமூகத்)தை அவர்களுடைய நபி உயிரோடிருக்கவே தண்டிக்கிறான். அ(ந்நபியான)வர் பார்த்துக் கொண்டிருக்க அவர்களை அழித்து விடுகிறான்.

ஆகவே, அவரை அவர்கள் பொய்யாக்கி மற்றும் அவருடைய கட்டளைக்கு அவர்கள் மாறு செய்த சமயத்தில் அச்சமூகத்தை அழித்து அ(ந்நபியான) அவருடைய கண்ணைக் குளிரச் செய்தான் என ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

இதனை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

3. "நிச்சயமாக அல்லாஹ், (துன்யாவாகிய) இம்மைக்கிடையே மற்றும் அல்லாஹ்விடம் உள்ள (மறுமையின் நற்பேருகளான) வற்றுக்கிடையே (இரண்டிலொன்றைத்) தேர்ந்தெடுக்குமாறு ஓர் அடியாருக்கு விருப்பமளித்தான், அந்த அடியார் அல்லாஹ் விடமுள்ளதைத் தேர்ந்தெடுத்துவிட்டார்". என ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் (தன்னைப் பற்றிக்)

கூறினார்கள். (அதைச் செவியேற்ற) அபூபக்ரு ரளியல்லாஹு அன்ஹு அவர்கள் அழுதுவிட்டனர்.

இதனை புகாரீ பதிவு செய்துள்ளார்கள்.

4. அனஸ்பின் மாலிக் ரளியல்லாஹு அன்ஹு அறிவித்துக் கூறுகிறார்கள்: அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பால் நான் பார்த்தேன் அந்தக்கடைசிப் பார்வையானது, திங்கட்கிழமை திரை நீக்கப்பட்டது அவர்களின் முகத்தை நான் பார்த்தேன் ஏட்டின் காகிதத்தைப் போன்று நிச்சயமாக அது இருந்தது - மனிதர்களோ அபூபக்ருக்குப் பின்னால் இருந்தனர் - மனிதர்கள் குழம்பத் தொடங்கி விட்டனர் அப்போது (நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் மனிதர்களின்பால், நிலைத்திருங்கள் (குழம்பாதீர்கள்) என சைக்கினை செய்தார்கள். திரையும் மூடப்பட்டது, அந்நாளின் கடைசி(ப் பகுதி)யில் அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இறப்பெய்தியும் விட்டனர்.

இதனை புகாரீ பதிவு செய்துள்ளனர், முஸ்லிமும் இதுபோன்றே பதிவு செய்துள்ளார்கள்.

5. நிச்சயமாக அவர்களுடைய தலையானது, என்னுடைய கழுத்திற்குக் கீழ்பகுதியான மூச்சுவிடுமிடம் மற்றும் என்னுடைய நெஞ்சின் மீது இருக்க (அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களை அல்லாஹ் கைப்பற்றிக் கொண்டான் என ஆயிஷா ரளியல்லாஹு அன்ஹா அவர்கள் அறிவித்துக் கூறுகிறார்கள்.

6. அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், மரணக்கஷ்டங்களிலிருந்து (அனுபவிக்கப்) பெற வேண்டியவற்றை அவர்கள் பெற்றுக் கொண்டிருந்தபொழுது அவர்களுக்கு ஏற்பட்டகஷ்டமே! என பாத்திமா ரளியல்லாஹு அனஹா கூறுகிறார்கள். (அதைச் செவியேற்ற) நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இன்றையத்தினத்திற்குப் பிறகு உனது தந்தையாருக்கு எவ்விதக் கஷ்டமுமில்லை (இப்புவியில் பிறந்த) எந்த ஒருவரையும் விட்டுவிடாதே அத்தகைய (மரணமான)து உமது தந்தைக்கு வந்து ஆஜராகிவிட்டது. (ஆகவே அடுத்த) சந்திப்பு மறுமை நாளிலாகும் என்று கூறினார்கள்.

இதனை புகாரீ பதிவு செய்துள்ளார்கள்.

7. அப்துல்லாஹ் பின் அப்பாஸ் ரளியல்லாஹு அன்ஹுமா அறிவித்துக் கூறுகிறார்கள்: நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்,

மக்காவில் பதிமூன்று வருடமும் மதினாவில் பத்து வருடமும் அவர்களுக்கு (அல்லாஹ்விடமிருந்து) வஹீ அறிவிக்கப்படுபவர்களாக தங்கியிருந்தனர். மேலும் அவர்கள் அறுபத்து மூன்று வயதுடையவர்களாக இருக்க இறப்பெய்தினார்கள்.

இதை புகாரீ பதிவு செய்துள்ளார்கள்

8. மதீனாவின் மேற்பகுதியில் அபூபக்ரு ரளியல்லாஹ் அன்ஹு இருந்தபோது, அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இறப்பெய்திவிட்டார்கள். (அப்போழுது) உமர் ரளியல்லாஹு அன்ஹு அவர்கள் “அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இறந்துவிடவில்லை” என்று கூறியவர்களாக நின்றனர்

(அதுசமயம்) அபூபக்ரு ரளியல்லாஹு அன்ஹு அவர்கள் (அங்கு) வந்து அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் (முகத்தின்) மீதிருந்த (போர்வையான)தை நீக்கிவிட்டு, அவர்களை முத்தமிட்டு விட்டு என் தந்தை உங்களுக்கு அர்ப்பணம்! உயிரோடிருந்தபோதும் இறப்பெய்தி விட்டபோதும் நீங்கள் நறுமணமுடையவராக உள்ளீர்கள். என் உயிர் எவன் கைவசமிருக்கிறதோ அத்தகையவனின் மீது சத்தியமாக! இரு மரணங்களை ஒருபோதும் அல்லாஹ் உங்களைச் சுவைக்கச் செய்யமாட்டான் என்றும் கூறினார்கள்.

(இறப்பெய்தி விட்ட அவர்கள் நிச்சயமாக மீண்டும் உயிர் பெற்றெழுவார்கள் இறுதியில் இறப்பெய்துவார்கள் என்ற தவறான எண்ணங்கொண்டிருப்போர்க்கு இக்கூற்று மறுப்பாகும்) பின்னர் அபூபக்ரு ரளியல்லாஹு அன்ஹு அவர்கள் வெளியேவந்து :

“சத்தியம் செய்தவரே! (உமரே!) சற்றுதாமதிப்பீராக! (அவசரப்படாதீர்) என்று அபூபக்ரு அவர்கள் பேச ஆரம்பித்த பொழுது உமர் ரளியல்லாஹு அவர்கள் அமர்ந்து விட்டனர். அப்போது அபூபக்ரு ரளியல்லாஹு அன்ஹு அவர்கள் அல்லாஹ்வைப்புகழ்ந்து அவனைப் போற்றிவிட்டு, எவர் முஹம்மதை வணங்குபவராக இருக்கிறாரோ, நிச்சயமாக முஹம்மது, திண்ணமாக இறப்பெய்திவிட்டார்கள் இன்னும் அல்லாஹ்வை எவர் வணங்குகிறாரோ நிச்சயமாக அல்லாஹ் மரணமே ஏற்படாத ஜீவனுள்ளவன் என்றும் அவர் தெரிந்து கொள்ளட்டும் மேலும் அவர்கள்.

(அல்ஜுமர் அத்தியாயம் வசனம் 31 ஐ ஓதி) “நிச்சயமாக நீர் இறந்து

விடுகிறவரே நிச்சயமாக அவர்களும் இறந்து விடுகிறவர்கள் தாம்” என்றும் கூறினார்கள். மேலும், அவர்கள் (ஆலு இம்ரான் அத்தியாயம் மூன்றை ஓதி)

“இன்னும், முஹம்மது ஒரு தூதரே அன்றி (இறக்காமல் இருக்கக்கூடியவர்) இல்லை. அவருக்கு முன்னரும், (இவ்வாறே) தூதர்கள் பலர் திட்டமாகச் சென்றிருக்கின்றனர். அவர் இறந்து விட்டால் அல்லது கொல்லப்பட்டு விட்டால் நீங்கள் உங்கள் குதிங்கால்களின் மீது (புறங்காட்டித்) திரும்பி(ச் சென்று) விடுவீர்களா? (அவ்வாறு) எவரேனும் தனது இரு குதிங்கால்களின் மீது (புறங்காட்டித்) திரும்பி(ச் சென்று) விட்டால் அதனால் அவர் அல்லாஹ்வுக்கு எந்த இடையூறும் செய்யவேமாட்டார், மேலும் நன்றி செலுத்துவோருக்கு அல்லாஹ் (நற்)கூலியைத் தருவான்” என்றும் கூறினார்கள். (அதைச் செவியேற்ற) மனிதர்கள் அழுது விட்டனர் என்று ஆயிஷா ரளியல்லாஹு அன்ஹா அறிவித்துக்கூறினார்கள்.

9. அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஆரோக்கியமாக இருந்த நிலையில் கூறுபவர்களாக இருந்தார்கள்: “நிச்சயமாக எந்த நபியும் சுவனத்திலுள்ள தன் இருப்பிடத்தை அவர் காணாத வரை கைப்பற்றப்பட மாட்டார்,

பின்னர் இவ்வுலகம் மற்றும் மறு உலகத்தை தேர்ந்தெடுப்பதற்கு அவருக்கு விருப்பமளிக்கப்படும்” ஆயிஷா ரளியல்லாஹு அன்ஹா கூறுகிறார்கள்: அவர்களுக்கு மரணம் சம்பவித்தபோது அவர்களின் தலையோ என் தொடையின் மீதிருக்க - மயக்கம் அவர்களுக்கு ஏற்பட்டுவிட்டது பின்னர் அவர்கள் தெளிந்தார்கள் அப்போது அவர்களுடைய பார்வை முகட்டின் பால் நிலைகுத்திவிட்டது.

பின்னர் அவர்கள், “அல்லாஹும்ம அர்ரஃஃபீக்கல் அஃலா” என்று கூறினார்கள், அவ்வாறென்றால் நம்மை அவர்கள் தேர்ந்தெடுக்கவில்லை (மறுமையையே மறு உலகத்தையே தேர்ந்தெடுத்து விட்டார்கள்) என்று நான் கூறினேன். மேலும், அவர்கள் ஆரோக்கியமாக இருந்தபோது நமக்குத் தெரிவித்துக் கொண்டிருந்தார்களே அத்தகு செய்திதான் அது என்பதை நிச்சயமாக நான் அறிந்து கொண்டேன் என்று ஆயிஷா ரளியல்லாஹு அன்ஹா அவர்கள் கூறினார்.

10. நிச்சயமாக தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், தங்களுடைய தூதுத்துவத்தை எத்திவைத்து விட்டு அவர்களின் மூலம் அல்லாஹ் இந்த மார்க்கத்தைப் பூர்த்தியாக்கி வைத்த பிறகு ஹிஜ்ரி 11ம் வருடம் திங்கட்கிழமை இறப்பெய்தினார்கள் என்பதுவே அறியப்பட்ட ஒன்றாகும்.

## அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களுடைய நற்பண்புகளிலிருந்து...

1. உயர்ந்தோனாகிய அல்லாஹ் கூறுகிறான்

فَبِمَا رَحْمَةٍ مِّنَ اللهِ لِنتَ لَهُمْ وَلَوْ كُنتَ فَظًّا غَلِيظَ الْقَلْبِ لاَنفَضُّواْ مِنْ حَوْلِكَ فَاعْفُ عَنْهُمْ وَاسْتَغْفِرْ لَهُمْ وَشَاوِرْهُمْ فِي الأَمْرِ فَإِذَا عَزَمْتَ فَتَوَكَّلْ عَلَى اللهِ إِنَّ اللهَ يُحِبُّ الْمُتَوَكِّلِينَ

*(நபியே!) அல்லாஹ்வுடைய அருளின் காரணமாகவே நீர் அவர்களிடம் மென்மையாக (இரக்கமுள்ளவராக) நடந்து கொள்கிறீர்; மேலும், சொல்லில் கடுகடுப் பானவராக, இரக்கமற்ற இதயமுள்ளவராக நீர் இருந்திருப்பீரானால், உம்மிடமிருந்து அவர்கள் பிரிந்து சென்றிருப்பார்கள். ஆகவே, அவர்(களின் பிழை)களை நீர் மன்னித்து (அல்லாஹ்விடம்) அவர்களுக்காக மன்னிக்கக் கோருவீராக! மேலும், (யுத்தம், சமாதானம் முதலிய மற்ற) காரியத்தில் அவர்களுடன் கலந்தாலோசனை செய்வீராக! யாதொரு காரியத்தை நீர் முடிவு செய்துவிட்டால் அல்லாஹ்வின் மீதே நீர் (உம்முடைய காரியங்களை ஒப்படைத்து முழுமையாக) நம்பிக்கை வைப்பீராக! (ஏனென்றால்) நிச்சயமாக அல்லாஹ் (தம் காரியங்களை அவனிடம் ஒப்படைத்து முழுமையாக) நம்பிக்கை வைப்போரை நேசிக்கிறான்.* (அலு இம்ரான் அத்தியாயம் வசனம் 159)

2. மேலும், உயர்ந்தோனாகிய அல்லாஹ் கூறுகிறான்.

وَإِنَّكَ لَعَلى خُلُقٍ عَظِيمٍ

*“(நபியே!) நிச்சயமாக மகத்தான நற்குணத்தின் மீதும் நீர் இருக்கின்றீர்”.* (அத்தியாயம் அல்கலம் வசனம் 4)

3. ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய குணம் குர்ஆனாக இருந்தது

முஸ்லிம் இதனை பதிவு செய்துள்ளார்கள்

4. ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மிக வெறுப்பான குணம் பொய்யாக இருந்தது.

ஸஹீஹ் தரத்ததையுடையதாகும். இதனை பைஹக்கீ பதிவு செய்துள்ளார்கள்.

5. அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கெட்டவர்களாகவோ, கெட்ட நடத்தையுடையவர்களாகவோ இருக்கவே இல்லை. மேலும், நிச்சயமாக உங்களில் மிகச் சிறந்தவர், குணங்களால் உங்களில் மிக்க அழகானவராவார் என கூறுபவர்களாகவும் இருந்தார்கள்.

புகாரீ மற்றும் முஸ்லிம் பதிவு செய்துள்ளனர்.

6. அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கெட்டவர்களாகவோ, சபிப்பவர்களாகவோ ஏசுபவர்களாகவோ இருக்க வில்லை. கண்டிக்கும்போது: அவருக்கு என்ன நேர்ந்தது? அவருடைய கை மண்ணைத் தொடட்டும் மற்றுமொரு அறிவிப்பில்: அவருடைய நெற்றி மண்ணைத் தொடட்டும் என்று கூறுபவர்களாக இருந்தார்கள்.

புகாரீ இதனை பதிவு செய்துள்ளார்கள்.

7. அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "மனிதர்களில் முகத்தால் மிக அழகானவர்களாக, அவர்களில் குணத்தாலும் மிகச் சிறந்தவர்களாக" இருந்தார்கள்.

இதனை புகாரீ பதிவு செய்துள்ளார்கள்.

8. அபூஹுரைரா ரளியல்லாஹு அன்ஹு அறிவித்துக் கூறுகிறார்கள்: அல்லாஹ்வின் தூதர் அவர்களே! இணைவைத்துக் கொண்டிருப்போருக்கு எதிராக துஆச் செய்யுங்கள் என்று கூறப்பட்டது, அ(தற்க)வர்கள், "நிச்சயமாக நான், மிகுந்து சபிப்பவனாக அனுப்பபடவில்லை. நான் அனுப்பப்பட்டதெல்லாம் அருளாகத்தான்" என்று கூறினார்கள்.

இதனை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

9. (தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் நற்சகுனம் பார்ப்பவர்களாகவும், துர்சகுனம் பார்க்காதவர்களாகவும் இருந்தார்கள். அழகான பெயர் அவர்களுக்கு விருப்பமானதாகவும் இருந்தது.

இது ஸஹீஹான தரத்தையுடையதாகும் அஹ்மது இதனைப் பதிவு செய்துள்ளார்கள்.

10. அம்ரு பின் அல்ஆஸ் ரளியல்லாஹு அன்ஹு அறிவித்துக் கூறுகிறார்கள்: அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், எதிரில்வந்து கொண்டிருந்தார்கள், அவர்களின் பேச்சு என்னைப் பற்றியே இருந்தது; முடிவாக, நிச்சயமாக நான், சமூகத்தாரில் மிகச் சிறந்தவன் என்று எண்ணி விட்டேன். அம்ருபின் அல்ஆஸ்: அல்லாஹ்வின் தூதர் அவர்களே மிகச்சிறந்தவர் நானா? அல்லது அபூபக்ரா?

தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்: அபூபக்ரு

அம்ருபின் அல்ஆஸ்: அல்லாஹ்வின் தூதர் அவர்களே! மிகச்சிறந்தவர் நானா அல்லது உமரா?

தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்: உமர்

அம்ருபின் அல்ஆஸ்: அல்லாஹ்வின் தூதர் அவர்களே! மிகச் சிறந்தவர் நானா? அல்லது உஸ்மானா?

தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்: உஸ்மான்

அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் நான் கேட்டபோது எனக்கு உண்மையே உரைத்தார்கள். நிச்சயமாக நான், அவர்களிடம் கேட்காது இருந்திக்க வேண்டுமென விரும்பினேன்.

இதனைத் திரிமிதீ பதிவு செய்து அல்பானீ ஹஸன் எனவும் கூறியுள்ளார்கள்.

11. அதாஉ பின் யஸார் அறிவித்துக் கூறுகிறார்:

அப்துல்லாஹ் பின் அம்ரு பின் அல்ஆஸ் ரளியல்லாஹு அன்ஹு அவர்களை நான் சந்தித்து, "அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய தன்மை பற்றி தவ்ராத்தில் வந்துள்ளதை எனக்குத் தெரிவிப்பீராக! என்று கூறினேன்; 'ஆம்' அல்லாஹ்வின் மீது சத்தியமாக! குர்ஆனில் (வந்து) உள்ள அவர்களுடைய சில தன்மை பற்றி நிச்சயமாக தவ்ராத்தில் அவர்கள் வர்ணிக்கப்பட்டுள்ளார்கள்: "(நபியே!)" நிச்சயமாக நாம் உம்மை (மனிதர்களுக்குச்) சாட்சியாளராகவும் நன்மாராயங் கூறுபவராகவும், அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவராகவும் அனுப்பி வைத்திருக்கிறோம்". எழுதப்படிக்கத் தெரியாதோருக்குப் பாதுகாப்பாகவும் (அனுப்பி வைத்திருக்கிறோம்). நீர் என்னுடைய அடியாரும் என்னுடைய தூதரும் ஆவீர், (காரியங்கள் அனைத்தையும் ஒப்படைத்து முழுமையாக அல்லாஹ்வின் மீது) நம்பிக்கை கொள்பவர் என உமக்கு நான் பெயர் சூட்டியுள்ளேன், சொல்லில் கடினமானவரோ, இரக்கமற்றவரோ கடைத்

தெருக்களில் சப்தமிட்டுத் திரிபவரோ அல்லர்; தீமைக்குத் தீமை செய்ய மாட்டார்; எனினும் மன்னித்து பொருட்படுத்தாதும் விட்டுவிடுவார். மேலும், கோணலான மார்க்கத்தை அவரின் மூலம் (நிமிரச் செய்து) சீர்படுத்தி அவர்கள் "லாஇயலாஹ இல்லல்லாஹ்" என்று கூறும் வரை (நபியான) அவர்களை அல்லாஹ் கைப்பற்றிக் கொள்ளவே மாட்டான், அவர்களின் குருட்டுக் கண்களையும், செவிட்டுக் காதுகளையும், மூடப்பட்ட இதயங்களையும் (அவரின் மூலம்) அவன் திறக்கச் செய்வான்.

இதனை புகாரீ பதிவு செய்துள்ளார்கள்.

12. அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இரு காரியங்களுக்கிடையில் ஏதாவதொன்றைத் தேர்ந்தெடுக்குமாறு விருப்பமளிக்கப்பட்டதில்லை அது பாவமாக இல்லாதிருப்பின் அவ்விரண்டில் மிக்க எளிதானதை அவர்கள் தேர்ந்தெடுத்துக் கொள்ளவர் அது பாவமாக இருப்பின் அதை விட்டும் மனிதர்களில் மிகத் தூரமானவர்களாக இருந்தனர். அல்லாஹ்வினால் (புனிதமாக்கப்பட்டது தகர்க்கப்பட்டால்), தனக்காக எக்காரியத்திலும் அவர்கள் பழிதீர்த்துக் கொண்டதில்லை. புனிதமாக்கப்பட்டது தகர்க்கப்பட்டால் அல்லாஹ்விற்காக அதற்குப் பழிதீர்த்துக் கொள்வார்கள் என ஆயிஷா ரளியல்லாஹு அன்ஹா அறிவித்துக் கூறுகிறார்கள்.

இதனை புகாரீ மற்றும் முஸ்லிம் பதிவு செய்துள்ளனர்.

13. எப்பொருளையும், எந்தப் பெண்ணையும், எந்தச் சேவகரையும் தன் கையினால் அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அடித்ததில்லை, அல்லாஹ்வின் பாதையில் அவர்கள் (ஜிஹாது செய்தாலே தவிர ஜிஹாது செய்கின்றபோது சொல்லால் மற்றும் செயலால் எதிரிகளிலிருந்து) எதையேனும் அடைந்தால் அதற்குரியவரிடமிருந்து அவர்கள் பழிதீர்த்துக் கொள்வார்கள், எனினும் அல்லாஹ்வினால் தடுக்கப் பட்டவற்றிலிருந்து ஏதேனும் தகர்க்கப்பட்டு விட்டால் அல்லாஹ்விற்காக அவர்கள் பழி தீர்த்துக் கொள்வார்கள் என்று ஆயிஷா ரளியல்லாஹு அன்ஹா அறிவித்துக் கூறுகிறார்கள்.

மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், யாசிப்பவர் அல்லது தேவையுடையவர் அவர்களிடம் வந்தால் "பரிந்துரையுங்கள் நற்கூலி நல்கப்படுவீர்கள்" மேலும், அல்லாஹ் தன்னுடைய தூதரின் நாவின் மூலம் அவன் நாடியதை முடிவு செய்வான் என்று கூறுபவர்களாகவும் இருந்தார்கள்.

புகாரீ மற்றும் முஸ்லிம் இதனைப் பதிவு செய்துள்ளனர்.

14. அனஸ் பின் மாலிக் ரளியல்லாஹு அன்ஹு அறிவித்துக் கூறுகிறார்கள்: அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் குணத்தால் மனிதர்களில் மிக்க அழகானவர்களாக இருந்தார்கள், ஒருநாள் ஒரு தேவைக்காக என்னை அவர்கள் அனுப்பினார்கள்; என் மனதில் அல்லாஹ்வின் நபி எதை எனக்குக் கட்டளையிட்டார்களோ அதுவகைக்குச் செல்வதாக இருந்தது (வெளியில்) அல்லாஹ்வின் மீது சத்தியமாக நான் செல்ல மாட்டேன் என்று நான் கூறிவிட்டேன், (நான் எண்ணியவாறு) புறப்பட்டு விட்டேன், முடிவாக, சில சிறார்களை நான் கடந்து சென்றேன். அவர்களோ கடைத்தெருவில் விளையாடிக் கொண்டிருந்தனர், அப்போது அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எனக்குப் பின்னால் என் பிரடிப்பக்கம் இருந்தனர் அப்போது அவர்கள்பால் நான் பார்த்தேன் அவர்களோ சிரித்தார்கள். தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்:

சின்ன அனஸே! நான் ஏவியவாறு சென்று விட்டீர்?

அனஸ் பின் மாலிக்: அல்லாஹ்வின் தூதர் அவர்களே! நானோ சென்று கொண்டிருக்கிறேன்.

அனஸ் கூறுகிறார்: அல்லாஹ்வின் மீது சத்தியமாக! ஒன்பது வருடங்கள் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களுக்கு நான் சேவை செய்துள்ளேன். நான் அதைச்செய்து விட்ட எதைப் பற்றியும் ஏன் இன்னின்னவாறு செய்தாய் என்று அவர்கள் கூறவில்லை, என்மீது எதற்காகவும் அறவே அவர்கள் குறை கூறவே இல்லை. அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அறவே சீ என்று கூட என்னிடம் அவர்கள் கூறியதே இல்லை.

முஸ்லிம் இதனைப் பதிவு செய்திருக்கிறார்கள்.

15. ஸுமாமா என்ற ஒரு தலைவரை நபித்தோழர்கள் கைது செய்து மஸ்ஜிதில் உள்ள தூணில் அவரைக் கட்டி விட்டனர், அப்போது அல்லாஹவின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் புறப்பட்டு வந்து; "ஸுமாமாவே! உம்மிடம் என்ன உண்டு? எனக் கேட்டார்கள்; அ(தற்க)வர் முஹம்மதே! என்னிடம் நன்மை உண்டு, நீர் கொன்றுவிட்டால் ஒரு கொலைகாரனையே கொல்லுவீர்; நீர் அருட்கொடை நல்கினாலோ, நன்றியுடைய ஒருவருக்கு அருட்கொடை நல்குவீர் நீர் செல்வத்தை நாடியவராக இருப்பின் நீர் கேட்பீராக அதிலிருந்து நீர் நாடியவாறு கொடுக்கப்படுவீர் என்று கூறினார். (அதைச் செவியேற்ற) அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி

வஸல்லம் அவர்கள் "ஸுமாமாவை அவிழ்த்து விடுங்கள்" என்று கூறினார்கள். (அவிழ்த்து விடப்பட்ட) ஸுமாமா (அங்கிருந்து) சென்று குளித்து விட்டுப் பின்னர் பள்ளயினுள் நுழைந்து, "அஷ்ஹது அன்லாஇலாஹ இல்லல்லாஹ் வஅஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வரசூலுஹு" என்று கூறிவிட்டு, முஹம்மதே! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இப்புவியின் மீது என்பால் உம்முடைய முகத்தை விட வேறு எந்த முகமும் மிக்க வெறுப்பானதாக இருந்ததே இல்லை, ஆனால் இப்போது உம்முடைய முகம் என்பால் முகங்களில் அவை அனைத்திலும் மிக்க விருப்பமானதாக ஆகிவிட்டது.

எந்த ஒரு மார்க்கமும் உம்முடைய மார்க்கத்தை விட எனக்கு மிகுந்த கோபத்திற்குரியதாக இருந்ததில்லை, (ஆனால் இப்போது) உம்முடைய மார்க்கம், மார்க்கங்கள் அனைத்திலும் எனக்கு மிக்க விருப்பமானதாக ஆகிவிட்டது அல்லாஹ்வின் மீது சத்தியமாக எந்த ஊரும் உமது ஊரைவிட எனக்கு மிகுந்த கோபத்திற்குரியதாக இருந்ததில்லை; (ஆனால் இப்போது) உம்முடைய ஊர், ஊர்களில் அவை அனைத்தையும் விட எனக்கு மிக்க விருப்பமானதாக ஆகிவிட்டது; என்று கூறினார் அவர் மக்காவை வந்தடைந்த போது, நீர் மதமாறிவிட்டீரா? என கேட்பவர் ஒருவர் கேட்டார். அ(தற்க)வர் இல்லை! என்றாலும் நான் இஸ்லாத்தைத் தழுவி விட்டேன்" என்று கூறினார்.

புகாரீ மற்றும் முஸ்லிம் ஒருமித்துப் பதிவு செய்துள்ளனர் வாக்கியம் சுருக்கமாக முஸ்லிமிற்குரியதாகும்.

## நற்குணங்கள் பற்றிய ஹதீஸ்கள்

1. ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:

"உங்களில் மிகச்சிறந்தவர், "குணங்களால் உங்களில் மிக்க அழகானவராவார்".

இதனை புகாரீ மற்றும் முஸ்லிம் பதிவு செய்துள்ளனர்

2. "என்பால் நிச்சயமாக உங்களில் மிக்க விருப்பமானவர் குணங்களால் உங்களில் மிக்க அழகானவராவார்".

இதனை புகாரீ பதிவு செய்துள்ளார்கள்.

3. விசுவாசங் கொண்டிருப்போரில் விசுவாசத்தால் மிக்க நிறைவானவர், அவர்களில் குணத்தால் மிக்க அழகானவராவார் இன்னும் உங்களில் மிகச் சிறந்தவர் தங்களுடைய மனைவியரிடம் குணத்தால் உங்களில் மிகச் சிறந்தவராவார்.

திர்மிதி இதனைப் பதிவு செய்து ஹஸன், ஸஹீஹ் எனும் தரத்தையுடையதாகும் என்றும் கூறினார்கள்.

4. "நிச்சயமாக ஒவ்வொரு மார்க்கத்திலும் ஒரு குணம் உண்டு நிச்சயமாக இஸ்லாத்தின் குணமோ வெட்கமாகும்".

ஹஸன் தரத்தையுடையதாகும், இதனை இப்னுமாஜா பதிவு செய்துள்ளார்கள்.

5. "நிச்சயமாக ஒரு விசுவாசி தனது அழகிய குணத்தால் நோன்பு நோற்று இரவில் வணங்கியவரின் பதவியை அடைந்து கொள்வார்".

இதனை அபூதாவூது பதிவு செய்துள்ளார்கள்.

6. "நிச்சயமாக விசுவாசங் கொண்டிருப்போரில் விசுவாசத்தால் மிக்க நிறைவானவர் குணங்களால் அவர்களில் மிக்க அழகானவர் மற்றும் தன் குடும்பத்தினருடன் (இதமாக) மிக்க கருணையானவராவார்".

இதனைத் திர்மிதி பதிவு செய்து ஹஸன் தரத்தையுடைதெனவும் கூறியுள்ளார்.

7. "மறுமை நாளில் ஒரு விசுவாசியின் அழகான குணத்தைவிட எப்பொருளும் தராசில் மிக கனமானதாக இருக்காது, இன்னும் நிச்சயமாக அல்லாஹ் வீணான, பேச்சுகள் பேசக்கூடிய கெட்டவனை வெறுக்கிறான்".

இதனை அபூதாவூது மற்றும் திர்மிதி பதிவு செய்துள்ளனர். ஹஸன் மற்றும் ஸஹீஹ் எனும் தரத்தையுடையதென திர்மிதி கூறியும் உள்ளார்கள்.

8. நிச்சயமாக உங்களில் என்பால் மிக்க விருப்பமானவர் மற்றும் மறுமை நாளில் உங்களில் அமருமிடத்தால் எனக்கு மிக நெருக்கமானவர், குணங்களால் உங்களில் மிக்க அழகானவராவார். மேலும், நிச்சயமாக உங்களில் எனக்கு மிக்க வெறுப்பானவர், அமருமிடத்தால் என்னை விட்டும் மிக்க தூரமானவர் சிரமப்பட்டு (தன்) பேச்சை அதிகமாக்குபவர்கள், தங்களின் பேச்சை உயர்வுபடுத்தி உயர்நடையிலும் பேசுபவர்கள்; பெருமையும் அடிக்கக் கூடியவர்கள் என்று கூறினார்கள்.

இதைத் திர்மிதீ பதிவு செய்து ஜாமிஉல் உஸூலின் ஆய்வாளர் அதன் கருத்தை உறுதிப்படுத்தும் இது போன்றவைகளை அடிப்படையாக வைத்து ஹஸன் தரத்தையுடைதெனக் கூறினார்.

9. "நன்மை என்பது அழகிய குணமாகும்"

இதை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

10. "எங்கிருப்பினும் அல்லாஹ்வை நீர் பயந்து (நடந்து) கொள்வீராக! தீயதை

நல்லதைக் கொண்டு தொடரச் செய்வீராக! (நல்லதான) அது, (தீயதான) அதை அழித்துவிடும், மனிதர்களோடு அழகான குணங்களைக் கொண்டு குணசாலியாகவும் இருப்பீராக!".,

இதைத் திர்மிதி பதிவு செய்து ஹஸன் தரத்தை அது உடையதெனக் கூறியும் உள்ளார்கள்.

11. "நிச்சயமாக நான் அனுப்பப்பட்டதெல்லாம் குணாதிசயங்களை நிறைவு செய்யத்தான்"

ஹாகிம் இதனை ஸஹீஹ் எனக் கூறி அதற்கு தஹபீ ஒப்புதல் தெரிவித்துள்ளார்கள்.

12. "நரகின் மீது (செல்லுவதிலிருந்து) தடுக்கப்படுபவர் அல்லது எவரின் மீது நரகம் தடுக்கப்பட்டு விடுமோ அவரைப் பற்றி உங்களுக்கு நான் தெரிவிக்க வேண்டாமா? நெருக்கமான, எளிதான, இதமான ஒவ்வொருவரின் மீதாகும்".

இதை அஹ்மது மற்றும் திர்மிதி பதிவு செய்துள்ளனர். அதன் கருத்தை உறுதிப்படுத்தும் இது போன்றவைகளை அடிப்படையாக வைத்து அதைச் ஸஹீஹ் என அல்பானீ கூறியுள்ளார்கள்.

13. "அல்லாஹ்வுடைய அடியார்களில், அல்லாஹ்வின்பால் மிக்க விருப்பமானவர் குணத்தால் அவர்களில் மிக்க அழகானவராவார்".

ஹாகிம் இதனைப் பதிவு செய்து அல்பானீ அதை சரியாதெனக் கூறியுள்ளார்.

14. "விசுவாசிகளில் விசுவாசத்தால் மிக்க நிறைவானவர் குணத்தால் அவர்களில் மிக்க அழகானவராவார், தங்களின் புஜங்களை மற்றவர்களுக்காக தாழ்த்தித் தருபவர்கள் - அவர்கள் எத்தகையோரென்றால், அரவணைப்பார்கள், அரவனைக்கப்படவும் செய்வார்கள், மேலும், அரவணைக்காத (மற்றவர்களால்) அரவணைக்கப்படாதவர்களில் நன்மையே இல்லை".

தப்ரானீ இதைப் பதிவு செய்து இன்னும் அல்பானீ அது ஹஸன் தரத்தையுடையதெனக் கூறினார்கள்.

15. மனிதர்கள் சுவனத்தில் பிரவேசிக்கச் செய்பவற்றில் மிக அதிகமானதைப் பற்றி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கேட்கப்பட்டார்கள்? அ(தற்க)வர்கள், "அல்லாஹ்வை பயந்து கொள்ளுதல் மற்றும் அழகான குணம்" என்று கூறினார்கள்.

இதை திர்மிதி பதிவு செய்துள்ளார்கள், ஜாமிஉல் உஸூலின் ஆய்வாளரிடம்

அதன் கருத்தை வலுப்படுத்தும் அநேக அறிவிப்புகளால் அது ஸஹீஹ் ஆகும்.

16. "விசுவாசியானவர் சங்கை மிக்க சிறப்புடையவர் கெட்டவனோ ஏமாற்றுக் காரன் மற்றும் அற்பன்"

இதனை அஹ்மது மற்றும் அவரல்லாதவர் பதிவு செய்துள்ளனர். அல்பானீ இதனை ஹஸன் தரத்தையுடையதெனக் கூறியுள்ளார்.

17. "விசுவாசங்கொண்டோர் மூக்கில் சங்கடம் ஏற்பட்டுவிட்ட ஒட்டகத்தைப் போன்று இலேசு செய்கிறவர்கள் இதமானவர்கள், அ(ந்த ஒட்டகமான)தை கட்டி வைக்கப்பட்டால் பணிந்துவிடும் அ(ந்த ஒட்டகமான)தை, கட்டவிழ்க்கப்பட்டு விட்டாலோ அவிழ்ந்துவிட்ட இடத்தில் நின்றுவிடும்".

திர்மிதி இதனைப்பதிவு செய்துள்ளார்கள் மேலும், அல்பானீ மிஷ்காத்தில் நிச்சயமாக அது ஹஸன் தரத்தையுடையதெனக் கூறுகிறார்கள்.

18. "மனிதர்களோடு கலந்து (உறவாடி அதன் மூலம் ஏற்படக்கூடிய) அவர்களின் சிரமங்களை (சகித்து)ப் பொறுத்தும் கொள்கிறாரே, அத்தகைய விசுவாசியானவர், மனிதர்களோடு கலந்துறவாடாது, அவர்களின் சிரமங்களின் மீது பொறுத்துக் கொள்ளாதும் இருக்கிறாரே, அவரைவிட மிகச்சிறந்தவராவர்".

இதனை அஹ்மது பதிவு செய்து, ஹாபிள் அவர்கள் ஃபத்ஹுவில் ஹஸன் எனவும் கூறியுள்ளார்கள்.

19. "உங்களில் சிறந்தவர்களைப் பற்றி உங்களுக்கு நான் தெரிவிக்க வேண்டாமா? (என்று கேட்டனர், அதற்கு நபித்தோழர்களான) அவர்கள் 'ஆம்' என்று கூறினார்கள். அ(தற்க)வர்கள் "உங்களில் சிறந்தவர்கள் உங்களில் நீண்டவயதை உடையவர்கள் மற்றும் குணங்களால் உங்களில் மிக்க அழகானவர்கள்".

அஹ்மது இதனைப் பதிவு செய்துள்ளார்கள் மற்றும் அல்பானீ இதன் தரம் ஹஸன் எனக் கூறினார்கள்.

20. "நான்கு (காரியங்கள்) அவை உன்னிலிருந்தால் இம்மையில் உன்னை விட்டுத் தப்பி (கிடைக்காது போய்) விட்டதைப் பற்றி உனக்கு எவ்வித பாதகமுமில்லை. பேச்சில் உண்மை, அமானிதத்தைக் காத்தல், அழகான குணம், உணவில் (ஹலாலான ரிஜிகைத் தேடி) உண்ணும் விஷயத்தில் பேணிக்கையாயிருத்தல், ஆகியவையாகும்.

அஹ்மது மற்றும் அவரல்லாதோர் பதிவு செய்து ஸில்ஸிலாவில் அல்பானீ

அவர்கள் அதனை ஸஹீஹ் எனக் கூறியுள்ளார்கள்.

21. "நிச்சயமாக அல்லாஹ் அவன் என்னை தவறிவிடுபவனாகவோ, (மற்றவர்களுக்கு) சிரமம் அளிப்பவனாகவோ அனுப்பவில்லை, எனினும் என்னை கற்றுக் கொடுப்பவராக மற்றும் இலேசு செய்பவராகவே அனுப்பி வைத்துள்ளான்".

இதனை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

22. "தர்க்கம் செய்வதை விட்டவருக்கு அவர் (அதில்) உண்மையானவராக இருப்பினும் சுவனத்தின் கீழ்ப்பகுதியிலுள்ள ஒரு வீட்டிற்கு தான் பொறுப்பாளன் பொய்யை விட்டவருக்கு அது கேளிக்கைக்காக இருப்பினும், சரியே- சுவனத்தின் நடுப்பகுதியிலுள்ள ஒரு வீட்டிற்கு நான் பொறுப்பாளன் எவருடைய குணம் அழகானதாக ஆகிவிட்டதோ அவருக்கு சுவனத்தின் மிக்க மேல் பகுதியிலுள்ள ஒரு வீட்டிற்கு நான் பொறுப்பாளன்".

இதனை அபூதாவூது பதிவு செய்து, ஸில்ஸிலாவில் அல்பானீ இதை ஹஸன் எனக் கூறியுள்ளார்கள். இது ரியாலுஸ்ஸாலிஹீனிலும் உள்ளது.

## நற்குணங்கள் பற்றி (அல்லாஹ்வின்) தூதர் ﷺ அவர்களுடைய பிரார்த்தனையிலிருந்து (சில)

1. யாஅல்லாஹ்! அழகான செயல்கள், அழகான குணங்கள் ஆகியவற்றுக்கு எனக்கு நீ நேர்வழி காட்டுவாயாக! அவற்றில் அழகானவற்றுக்கு உன்னையல்லாது மற்றெவரும் வழிகாட்ட மாட்டார், தீயசெயல்கள், தீயகுணங்கள் ஆகியவற்றை விட்டும் (அவற்றை நான் செய்வதிலிருந்து) என்னைக் காக்கவும் செய்வாயாக! அவற்றில் தீயவற்றை விட்டும் (அவற்றை நான் செய்வதிலிருந்து) உன்னையல்லாது மற்றெவரும் காக்க மாட்டார். (காக்க முடியாது)

நஸாயீ இதைப் பதிவு செய்து ஜாமிஉல் உஸூலில் அனாஊத் ஸஹீஹ் எனக் கூறியுள்ளார்.

2. யா அல்லாஹ்! நிச்சயமாக நான் வெறுக்கப்பட்ட குணங்கள், செயல்கள் மன ஆசைகள், நோய்கள் ஆகியவற்றிலிருந்து உன்னைக் கொண்டு நான் காவல் தேடுகிறேன்".

இதனைத் திர்மிதீ பதிவு செய்து, அல்பானீ ஸஹீஹ் எனக் கூறியுள்ளார்கள்.

3. யா அல்லாஹ்! எங்களுடைய இதயங்களுக்கிடையே நேசத்தை ஏற்படுத்துவாயாக! எங்களுக்குகிடையில் (எங்களுடைய நிலைகளை) சீராக்கியும் வைப்பாயாக!

இதனை புகாரீ பதிவு செய்துள்ளார்கள்.

4. யா அல்லாஹ்! நிச்சயமாக நான் மனிதனே தான்; முஸ்லிம்களில் யாரையாவது, அவரை நான் ஏசி அல்லது அவரை சபித்து இருப்பின் அதை அவருக்கு பரிசுத்தமாக மற்றும் நற்கூலியாக ஆக்கி அருள்வாயாக!

முஸலிம் இதனை பதிவு செய்துள்ளார்கள்.

5. யா அல்லாஹ்! எவரொருவர் என்னுடைய உம்மத்தினரின் காரியத்திலிருந்து ஏதேனும் ஒன்றுக்குப் பொறுப்பேற்றுக் கொண்டு அவர்களை சிரமப்படுத்துவாரானால் அவரை நீ சிரமப்படுத்துவாயாக! இன்னும் எவரொருவர் என்னுடைய உம்மத்தினரின் காரியத்திலிருந்து ஏதேனும் ஒன்றுக்குப் பொறுப்பேற்றுக் கொண்டு, அவர்களுடன் இரக்கம் காட்டுவாரானால், அவருடன் நீ இரக்கம் காட்டுவாயாக!.

இதனை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

6. யா அல்லாஹ்! பயனில்லாத கல்வியிலிருந்து நிச்சயமாக நான் உன்னைக் கொண்டு காவல் தேடுகிறேன்.

இதனை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

7. யா அல்லாஹ்! என்னுடைய தோற்றத்தை அழகாக்கியவாறே, என்னுடைய குணத்தை அழகானதாக ஆக்கியருள்வாயாக!

இதனை அஹ்மது பதிவு செய்துள்ளார்கள். மிஷ்காத்தில் 5099 இலக்கமிட்டு அல்பானீ ஸஹீஹ் எனக் கூறியுள்ளார்கள்.

## சண்டை சச்சரவின்போது மன்னித்து விடுதல்

1. நிச்சயமாக ஒரு மனிதர் அபூபக்ரு அவர்களை ஏசிக் கொண்டிருந்தார் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களோ, அதிசயமடைந்து புன்முறுவல் பூத்தவர்களாகவும் அமர்ந்திருந்தார்கள். (ஏசியவர்) அதிகப்படுத்திய போது (அபூபக்ரு) அவர்கள் அவர் கூறிய வார்த்தைகளில் சிலவற்றை அவருக்குத் திருப்பி கூறிவிட்டார்; (அதைக் கேட்ட) நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கோபமடைந்து எழுந்தும் விட்டார்கள்; (அப்போது) அபூபக்ரு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம்

வந்து. அல்லாஹ்வின் தூதர் அவர்களே! தாங்கள் உட்கார்ந்திருக்க அவர் என்னை ஏசிக் கொண்டிருந்தார். அவர் கூறிய வார்த்தைகளில் சிலவற்றை அவருக்கு நான் திருப்பிக் கூறிய பொழுது நீங்கள் கோபமுற்று எழுந்து விட்டீர்கள்!

தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் (நீர் அவருக்குப் பதில் சொல்லாதவரை) மலக்கு ஒருவர் உம்முடன் இருந்து அவருக்கு மறுப்புக் கூறிக்கொண்டிருந்தார், நீர் அவருக்கு மறுப்புக் கூறிய போது ஷைத்தான் (அங்கே) ஆஜராகி விட்டான் அபூபக்ரு அவர்களே! மூன்று (காரியங்கள்) அவை அனைத்தும் உண்மையானதாகும்; எந்த ஒரு அடியார் ஏதாவதொரு அநீதத்தைக் கொண்டு அநீதமிழைக்கப்பட்டு கண்ணியம் மற்றும் மகத்துவத் திற்குரிய - அல்லாஹ்விறகாக அவர் மன்னிப்பாரானால் அதன் மூலம் தன் உதவியினால் அவரை அல்லாஹ் கண்ணியப்படுதுகிறான் தவிர மற்றும் ஓர் ஆடவர் தருமத்தின் வாயிலை அதன் மூலம் (தன் சுற்றத்தாரை) சேர்த்துக் கொள்வதை நாடி திறப்பாரானால் அதனால் அல்லாஹ் அவருக்கு மிகுதியை அதிகப்படுத்துகிறான் மற்றும் ஓர் ஆடவர் யாசகம் கேட்பதன் வாயிலை அதன் மூலம் மிகுதியை நாடித் திறக்கிறார் அதனால் அவருக்கு அல்லாஹ் குறைவை அதிகப்படுத்துகிறான், (என்று கூறினார்கள்).

இதனை அஹ்மது பதிவு செய்து அல்பானீ மிஷ்காத்தில் (5102) இலக்கமிட்டு இதன் தரம் ஹஸன்தெனக் கூறியுள்ளார்கள்.

2. மேலும் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறுகிறார்கள்: ஏசிக் கொண்ட இருவர் அவ்விருவர் கூறியதாகும் ஆனால் அநீதமிழைப்பப்பட்டவர் விஷயத்தில் அவர் வரம்பு மீறாதவரை (அதற்குரிய) குற்றம் ஆரம்பம் செய்தவரின் மீதே உண்டு.

இதனை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

ஒரு மனிதருக்கு சிரமங்கொடுக்க அல்லது ஏச ஆரம்பித்தவருக்கு (பாதிக்கப் பட்டவர்) அதுபோன்ற அளவிற்கு பதிலுக்குபதில் (பகரமாகச்) செய்வது ஆகுமெனவும், நிச்சயமாக அதன் குற்றம் ஆரம்பித்தவரையே சாரும் என்று ஹதீஸ் தெரிவித்துக் கொண்டிருக்கிறது, (அது) ஏனெனில், பதில் கூறியவர் கூறிய ஒவ்வொன்றுக்கும் (ஆரம்பித்தவராகிய) அவர்தான் காரணமாவார். எனினும் பதிலுக்குக் கூறுபவர் தன் பேச்சின் மூலம் (பாதிப்பை ஏற்படுத்திய) அவருக்கு சங்கடத்தை ஏற்படுத்துவதில் வரம்பு மீறுவதானது. அவர் வரம்பு மீறியதன் குற்றம் அவரையே சாரும்.

உயர்ந்தோனாகிய அல்லாஹ் கூறுகிறான்:

وَجَزَاءُ سَيِّئَةٍ سَيِّئَةٌ مِّثْلُهَا فَمَنْ عَفَا وَأَصْلَحَ فَأَجْرُهُ عَلَى اللهِ إِنَّهُ لَا يُحِبُّ الظَّالِمِينَ

*"தீமைக்கும் கூலி(யாக) அதைப்போன்ற தீமையாகும்; ஆனால் எவரேனும் (பிறரின் அக்கிரமத்தை) மன்னித்து (அவருடன்) சமாதானம் செய்துகொண்டால் அவருடைய கூலி அல்லாஹ்வின் மீது (கடமையாக) இருக்கின்றது. நிச்சயமாக அவன் (இதற்கு மாறாக) அநியாயம் செய்வோரை நேசிக்கமாட்டான்."* (அஷ்ஷூரா அத்தியாயம் வசனம் 40)

அபூபக்ரு அவர்களுடைய ஹதீஸின் தொடக்கத்தில் இருப்பதைப்போன்று பதிலுக்கு பதில் பரிகாரம் தேடாதிருப்பதும், பொறுமையாக இருப்பதும், சகித்துக் கொள்வதும் மிகச் சிறப்புடையதாகும்.

3. "மனிதர்களில் அல்லாஹ்விற்கு மிக்க வெறுப்பானவர், கடுமையான வீண் தர்க்கம் செய்பவராவார்" எனவும் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

இதனை புகாரீ மற்றும் முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

(கடுமையான வீண் தர்க்கம் செய்பவர் என்ற) அதன் கருத்தாவது, தன்னுடனிருப்பவரோடு கடுமையான வீண் தர்க்கம் செய்கிறவனாக இருக்கின்றவனை நிச்சயமாக அல்லாஹ் வெறுக்கிறான் என்பதாகும்.

வீண் தர்க்கமென்பதன் உண்மை நிலை, மற்றவரின் பேச்சில் அதில் சோர்வை ஏற்படுத்துவதற்காகவும், அதைக் கூறியவரை இழிவுபடுத்தி அவரைவிட உன் தகுதியை நீ உயர்த்திக் காட்டுவதைத் தவிர வேறு நோக்கமின்றி நீர் குற்றம் கண்டுபிடிப்பதாகும்.

இது ஸன்ஆனீ அவர்களுடைய தெளிவுரையாகும்.

## அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களுடைய பணிவுகளிலிருந்து

1. உயர்ந்தோனாகிய அல்லாஹ் கூறுகிறான்:

وَاخْفِضْ جَنَاحَكَ لِمَنِ اتَّبَعَكَ مِنَ الْمُؤْمِنِينَ

*இன்னும் விசுவாசிகளில் உம்மைப்பின் பற்றியோருக்கு உம்முடைய (அன்பு காட்டுதல் எனும்) இறக்கையைத் தாழ்த்து வீராக!* (அஷ்ஷுஅரா அத்தியாயம் வசனம் 215)

2. அனஸ் பின் மாலிக் ரளியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவித்துக் கூறுகிறார்கள்

அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மனிதர்களில் குணத்தால் மிக்க அழகானவர்களாக இருந்தார்கள், மேலும் எனக்கொரு சகோதரன் இருந்தான் அவனுக்கு 'அபூஉமைர்', என பெயர் கூறப்படும் அவனோ பால் குடிப்பையனாக இருந்தான். எங்களிடம் அவர்கள் வந்தடைந்தால் அவன் வைத்து விளையாடும் சின்னக் குருவியைப் பற்றி அபூஉமைரே! (சிட்டுக் குருவிக்கொப்பான சிவப்பு நிறமுள்ள) சின்னக் குருவி என்ன செய்தது எனக் கேட்பார்கள்.

இதனை புகாரீ மற்றும் முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

3. அஸ்வது பின் யஜீது அந்நகயீ - அல்லாஹ் அவருக்கு அருள் செய்வானாக! அறிவித்துக் கூறுகிறார்:

அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், தங்களுடைய வீட்டில் செய்து வந்தவை பற்றி ஆயிஷா ரளியல்லாஹு அன்ஹாவிடம் நான் வினவினேன் அ(தற்க)வர்கள், "தங்களுடைய குடும்பத்தினரின் தேவைகளை நிறைவேற்றி அவர்களுக்கு உதவி செய்வதில் இருப்பார்கள்; (அது சமயம்) தொழுகை நேரம் வந்து விட்டால், 'உளூஉச்' செய்து விட்டு தொழுகைக்காக புறப்பட்டும் விடுவார்கள்" என்று கூறினார்கள்.

இதனை புகாரீ பதிவு செய்துள்ளார்கள்.

(ஒரு அடிமைப் பெண்ணுக்கு தேவை இருப்பின் அவள் அடிமைப் பெண்ணா யிற்றே என்று கூடப் பார்க்காது அவளின் சங்கடங்களை நிவர்த்தி செய்திட அவளுடன் அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் செல்வார்கள் அத்துனை பணிவுடையவராக அவர்கள் இருந்தார்கள்).

4. "ஒரு அடிமைப் பெண் (தன் சங்கடங்களை அவர்கள் தீர்த்து வைப்பதற்காக) அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் கையை அவள் பிடித்துக் கொண்டு, அவள் நாடிய இடத்திற்கு அவர்களைக் கொண்டு செல்வாள்" என அனஸ் பின் மாலிக் ரளியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவித்துக் கூறுகிறார்கள்.

இதனை புகாரீ பதிவு செய்துள்ளார்கள்.

5. நபித் தோழர்களான அவர்களுக்கு அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைவிட எந்த ஒரு மனிதரும் மிக்க விருப்ப மானவராக இருந்ததே இல்லை. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை அவர்கள் கண்டுவிடும் பொழுது அவர்களுக்காக அவர்கள் எழுந்து நிற்க மாட்டார்கள். ஏனெனில், அ(வ்வாறு எழுந்து நிற்பதான)தை அவர்கள் (விரும்ப மாட்டார்கள்) வெறுக்கிறார்கள் என்று அவர்கள் அறிந்திருந்திருந்தார்கள்.

இதனை அஹ்மது மற்றும் திர்மிதி ஸஹீஹ் தொடரில் பதிவு செய்துள்ளார்கள்.

6. "மர்யமுடைய மகனார் ஈஸாவை கிறிஸ்தவர்கள் அளவு கடந்து புகழ்ந்தது போன்று என்னை நீங்கள் அளவு கடந்து புகழாதீர்கள், ஏனெனில், நான் அடியானே தான், ஆகவே (என்னைப்பற்றி) அல்லாஹ்வின் அடியான் மற்றும் அவனுடைய தூதர் என்று கூறுங்கள்" என அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

இதனை புகாரீ பதிவு செய்துள்ளார்கள்.

7. அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், அன்ஸார்களை சந்திப்பவர்களாக அவர்களின் சிறார்களுக்கு ஸலாமும் கூறி அவர்களின் தலைகளை (அன்பாக)த் தடவுபவர்களாகவும் இருந்தார்கள்.

இது ஸஹீஹான தொடராகும். இதனை நஸாயீ பதிவு செய்துள்ளார்கள்.

8. எப்பொருளையும் (எவராலும்) அவர்கள் கேட்கப்படுவதில்லை அதை அவர்கள் கொடுத்தே தவிர, அல்லது வாய்மூடி மவுனமாக இருப்பார்கள்.

ஸஹீஹ் தொடரில் இதனை ஹாகிம் பதிவு செய்துள்ளார்கள்.

9. (அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள், முஸ்லிம்களில் சாதாரண நிலையுடையோரிடம் சென்று அவர்களைச் சந்தித்து அவர்களிலுள்ள நோயாளிகளை நலமும் விசாரித்து அவர்களில் இறப்பெய்தி விட்டவர்களுடைய ஜனாஸாவில் (ஆஜராகி) கலந்து கொள்பவர்களாகவும் இருந்தார்கள்.

இது ஸஹீஹ் ஆகும், இதனை அபூயஃலா பதிவு செய்துள்ளார்கள்.

10. பிரயாணத்தில் பலரும் செல்லும் பொழுது ஆகக்கடைசியில் இருந்து, பிந்திச் செல்பவரை அவருடைய குடும்பத்தினருடன் சேர்த்து வைக்க உடனிருந்து அவர்களுக்காக பிரார்த்தனையும் செய்வார்கள்.

இது ஸஹீஹ் ஆகும், இதனை அபூதாவூது பதிவு செய்துள்ளார்கள்.

11. அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், (அல்லாஹ்வை) நினைவு கூர்வதை அதிகமாக்குபவர்களாக, வீணானவற்றிலும் ஈடுபடாதவர்களாக தொழுகையையும் நீட்டிக் தொழுபவர்களாக, குத்பாப் பேருரையை குறைத்தும் கொள்பவர்களாக இருந்தார்கள் இன்னும், முகம் சுளிக்காதவர்களாக, கைம்பெண், வறியர், அடிமை ஆகியோருடன் அவர்களின் தேவைகளை அவர்கள் நிறைவேற்றும் வரை செல்வதற்காக பெருமை கொள்ளாதவர்களாகவும் இருந்தனர்.

12. (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் தரையின் மீது அமர்பவர் களாக, தரையில், இருந்து உண்ணுபவர்களாக, ஆட்டையும் மேய்த்துக் கட்டுபவர்களாக, கோதுமை ரொட்டிக்காக ஒரு அடிமையின் அழைப்பையும் ஏற்று(விருந்திற்கு)ச் செல்பவர்களாக இருந்தார்கள்.

இது ஸஹீஹான அறிவிப்பாகும். இதனை தப்ரானீ பதிவு செய்துள்ளார்கள்.

13. அவர்களுக்காக மற்ற மனிதர்கள் தள்ளப்படாதவர்களாக மற்றும் அவர்க ளுக்காக அடிக்கப்படாதவர்களாக (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் இருந்தனர்.

இதை தப்ரானீ பதிவு செய்துள்ளார்கள்.

14. (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் நறுமணத்தை மறுக்காத வர்களாக இருந்தார்கள்.

இதனை புகாரீ பதிவு செய்துள்ளார்கள்.

15. (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள், உம்முஸலமாவின் மகள் ஜைனபுவிற்கு விளையாட்டுக் காட்டக் கூடியவர்களாக மற்றும் (கொஞ்சும் மொழியில்) சின்ன ஜைனபு! சின்ன ஜைனபு! என்று பலமுறை கூறுபவர்களாக இருந்தார்கள்.

'ளியாஉ' இதனைப் பதிவு செய்துள்ளார்கள். இதன் தரம் ஸஹீஹ் ஆகும்.

16. அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மற்றும் அபூபக்ரு - அவ்விருவரும் நடந்தவர்களாக என்னிடம் வந்தனர் என்று ஜாபிர் ரளியல்லாஹு அன்ஹு அறிவித்துக் கூறுகிறார்கள்.

இதனை புகாரீ பதிவு செய்துள்ளார்கள்.

17. நிச்சயமாக அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்

அவர்கள், விளையாடிக் கொண்டிருக்கும் சிறார்களைக் கடந்து சென்றபோது அவர்களுக்கு ஸலாம் கூறுவார்கள் என்று அனஸ் ரளியல்லாஹு அன்ஹு அறிவிக்கிறார்கள்.

இதனை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

18. அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், தங்களுடைய காலணியைத் தைத்துக் கொள்பவர்களாக, தங்களுடைய ஆடையையும் தைத்துக் கொள்பவர்களாக, உங்களில் ஒருவர் தன் வீட்டில் வேலை செய்வதைப்போன்று தன் வீட்டிலும் வேலை செய்பவர்களாக அவர்கள் இருந்தார்கள் என்று ஆயிஷா ரளியல்லாஹு அன்ஹா அறிவித்துக் கூறுகிறார்கள்; மேலும் அவர்கள் கூறுகிறார்கள்; மனித இனத்திலுள்ள ஒரு மனிதராக, தன் ஆடையை தைத்தும் கொள்பவர்களாக, தன் ஆட்டில் பாலும் கறப்பவர்களாக தனக்குத்தானே சேவையும் செய்து கொள்பவர்களாக அவர்கள் இருந்தார்கள்.

இதனை திர்மிதி பதிவு செய்து அல்பானீ அதனைச் ஸஹீஹ் எனக் கூறினார்கள்.

19. “நான் எட்டு வயதுடையவனாக இருந்தபோது அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு சேவை செய்து கொண்டிருந்தேன், நான் பாழ்படுத்திய எப்பொருளைப் பற்றியும் அற்காக என்னை இழித்துக் கூறியதில்லை, அவர்களுடைய குடும்பத்தினரில் எவராவது என்னை இழித்துக் கூறினால், “அவரை விட்டுவிடுங்கள்” ஏனெனில் ஒரு பொருள் (அது அவ்வாறு தான் ஆக வேண்டுமென) நிர்ணயிக்கப்பட்டிருப்பின் அது ஏற்பட்டேதீரும்” என்று கூறுவார்கள்.

இதனை பைஹகீ பதிவு செய்து அல்பானீ இதனை ஸஹீஹ் எனக் கூறினார்கள்.

## பணிவு பற்றிய ஹதீஸ்கள்

1. “நீங்கள் பணிவாக நடந்து கொள்ளுங்கள், முடிவாக ஒருவர் மற்றவரின் மீது தற்பெருமை கொள்ளவேண்டாம்; இன்னும் ஒருவர் மற்றவரின் மீது வரம்பு மீற வேண்டாம்; என நிச்சயமாக அல்லாஹ் எனக்கு அறிவித்தான் என்று ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறுகிறார்கள்.

இதனை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

2. “தர்மத்தால் செல்வம் குறைந்து விடாது, ஒரு அடியானுக்கு மன்னிப்பின் மூலம் கண்ணியத்தை அல்லாது அல்லாஹ் அதிகப்படுத்துவதில்லை. எந்த

ஒருவரும் அல்லாஹ்விற்காக பணிவாக நடந்து கொள்வாரனால் அவரை அல்லாஹ் உயர்த்தி விடுகிறான்" என ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

இதனை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

3. மேலும் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்: "(ஆடு, மாடு ஆகியவற்றின்) கால் (பகுதியின்) இறைச்சி அல்லது (அவற்றின்) கைப்பகுதியின் இறைச்சி ஆகியவற்றின்பால் (விருந்தினனாக) நான் அழைக்கப்பட்டால் (அவ்விருந்திற்கு) நான் பதில் கூறுவேன், (ஆடு மாடு ஆகியவற்றின்) கை(ப் பகுதியின்) இறைச்சியோ அல்லது, (அவற்றின்) கால் இறைச்சியோ எனக்கு அன்பளிப்பாகக் கொடுக்கப்பட்டால் அதை நான் ஏற்றுக் கொள்வேன்".

இதனை புகாரீ பதிவு செய்துள்ளார்கள்.

4. (அல் அள்பாஉ, எனும்) அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய ஒட்டகம் முந்தப்படாததாக இருந்தது, அல்லது முந்தப்படாததற்கு சமீபமாக இருந்தது, (வெற்றி நடைபோட்டு மற்ற ஒட்டகங்களுக்கு முன்னால் ஓடிக் கொண்டிருந்தது) அப்போது, கிராமவாசி ஒருவர் தன் ஒட்டகத்தின் மீது (அமர்ந்து) அதை முந்திவிட்டார்; அது முஸ்லிம்களுக்குச் சிரமமாகத் தெரிந்தது; முடிவாக (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் அது பற்றித் தெரிந்து கொண்டனர், அப்போது, "இம்மையில் எப்பொருளும் தன்னை உயர்த்திக் கொள்வதில்லை, அதை அல்லாஹ் தாழ்த்தியே தவிர" என்பது அல்லாஹ்வின் மீது கடமையானதாகும் என தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

இதனை புகாரீ பதிவு செய்துள்ளார்கள்.

## பெருமையடித்துக் கொண்டிருந்தோரின் தீய முடிவு

1. உயர்ந்தோனாகிய அல்லாஹ் கூறுகிறான்:

وَلاَ تَمْشِ فِي الأَرْضِ مَرَحًا إِنَّكَ لَن تَخْرِقَ الأَرْضَ وَلَن تَبْلُغَ
الْجِبَالَ طُولاً كُلُّ ذَلِكَ كَانَ سَيِّئُهُ عِنْدَ رَبِّكَ مَكْرُوهًا

*மேலும், பூமியில் கர்வம் கொண்டு நீர் நடக்க வேண்டாம், (அவ்வாறு நீர் நடப்பதால்) நிச்சயமாக நீர் பூமியை (ஆழத்தால்)*

*பிளந்துவிடவே மாட்டீர்; இன்னும் உயரத்தால் மலைகளை அடைந்து விடவே மாட்டீர் (மேற்கூறப்பட்ட) அவை ஒவ்வொன்றும் அதன் தீமை உமதிரட்சகனிடத்தில் வெறுக்கப்ப பட்டதாக இருக்கின்றது.* (பனீ இஸ்ராயீல் அத்தியாயம், வசனம் 37,38)

2. மேலும், உயர்ந்தோனாகியவன் கூறுகிறான்:

وَلَا تُصَعِّرْ خَدَّكَ لِلنَّاسِ وَلَا تَمْشِ فِي الْأَرْضِ مَرَحًا إِنَّ اللَّهَ لَا يُحِبُّ كُلَّ مُخْتَالٍ فَخُورٍ وَاقْصِدْ فِي مَشْيِكَ وَاغْضُضْ مِن صَوْتِكَ إِنَّ أَنكَرَ الْأَصْوَاتِ لَصَوْتُ الْحَمِيرِ

*“அன்றியும் (பெருமைகொண்டு) உன்முகத்தை மனிதர்களை விட்டும் திருப்பிக் கொள்ளாதே! மேலும், பூமியில் கர்வமாக நடக்காதே; நிச்சயமாக அல்லாஹ் தற்பெருமைக்காரர் கர்வங் கொண்டோர் ஒவ்வொருவரையும் நேசிக்கமாட்டான்” மேலும், “உன் நடையில் மத்திய தரத்தை கடைபிடிப்பாயாக! உன் சப்தத்தையும் தாழ்த்திக் கொள்வாயாக! (ஏனென்றால்) சப்தங்களி லெல்லாம் வெறுக்கத்தக்கது கழுதைகளின் சப்தமே.”* (லுக்மான் அத்தியாயம், வசனம் 18,19)

3. “கண்ணியம் எனது கீழாடையாகும், பெருமையோ, எனது மேலாடையாகும்; ஆகவே, அவ்விரண்டில் ஏதாவதொன்றில் எவர் என்னோடு (கூட்டாகிப்) பிணங்கிக் கொள்கிறாரோ, அவரை நான் வேதனை செய்துவிடுவேன்” என கண்ணியம் மற்றும் மகத்துவத்திற்குரிய அல்லாஹ் கூறுகிறான் என்று ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறுகிறார்கள்.

இதை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

(எனது கீழாடை மற்றும் எனது மேலாடை என ஹதீஸில் வந்துள்ள வார்த்தை களுக்கு விளக்கம் வருமாறு)

கண்ணியத்தையும் பெருமையையும் மேலாடைக்கும் கீழாடைக்கும் ஒப்பிட்டுக் கூறியுள்ளான், ஏனெனில் அவ்விரண்டாலும் வர்ணிக்கப்பட்டவன் அவ்விரண்டும் அவனைச் சேர்ந்திருக்கும், மனிதனை கீழாடை மற்றும் மேலாடை சேர்ந்திருப்பது போன்று; அவன் அணிந்திருக்கும் கீழாடை மற்றும்

மேலாடையில் மற்றெவரும் அவனுடன் நிச்சயமாக கூட்டாகிக் கொள்ள முடியாது; அவ்வாறுதான் கண்ணியம் மற்றும் மகத்துவத்திற்குரிய அல்லாஹ்; கண்ணியம் மற்றும் பெருமை அவனுடைய கீழாடை மற்றும் மேலாடையாகும் அவ்விரண்டில் அவனுடன் மற்றெவரும் கூட்டாகவே கூடாது ஆகவே தான் அதற்கொரு உதாரணத்தை அவன் கூறியிருக்கிறான்.

ஜாமிஉல் உஸூலுவில் இப்னுல் அஸீர் இதைக் கூறியுள்ளார்கள்.

4. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியுள்ளார்கள்:

"எவருடைய உள்ளத்தில் அணு அளவு பெருமை இருந்ததோ, அவர் சுவனத்தில் பிரவேசிக்கமாட்டார்" என்று ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள், (அங்கிருந்த ஆடவர் ஒருவர், "நிச்சயமாக ஓர் ஆடவர், அவருடைய ஆடை அழகானதாக, அவருடைய காலணியும் அழகானதாக இருக்க வேண்டுமென்று விரும்புகிறார் (அது பெருமையாகக் கருதப்படுமா?) எனக் கேட்டார், அ(தற்க)வர்கள், "நிச்சயமாக அல்லாஹ் அழகானவன், அழகானதை அவன் விரும்புகிறான், (நீர் வினவிய) பெருமை; உண்மையை மறுத்து மற்ற மனிதர்களை இழிவாக் கருதுவதாகும்" என்று கூறினார்கள்.

இதனை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

மற்றுமொரு அறிவிப்பில்: "எவருடைய இதயத்தில் கடுகின் வித்தளவு ஈமான் இருந்ததோ, அவர் நரகில் பிரவேசிக்கமாட்டார், இன்னும் எவருடைய இதயத்தில் கடுகின் வித்தளவு பெருமை இருந்ததோ, அவர் சுவனத்தில் பிரவேசிக்க மாட்டார்".

இதை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

ஹதீஸின் கருத்து :

1. ஹதீஸில் இடம் பெற்றுள்ள 'பதருல்' ஹக்கி என்பதன் கருத்து; உண்மையை மறுத்தலாகும் 'கம்துன்னாஸ்' என்பதன் கருத்து, (மனிதர்களான) அவர்களை இழிவுபடுத்துதலாகும்.

2. ஸஹீஹ் முஸ்லிமின் தெளிவுரையில் இந்த ஹதீஸுக்கு இமாம் நவவீ அவர்கள் (கீழ்க்கண்டவாறு) விளக்கம் கூறுகிறார்கள்.

"எவருடைய இதயத்தில் அணுஅளவு பெருமை இருந்ததோ அவர் சுவனத்தில் பிரவேசிக்கமாட்டார், (என்பதன் கருத்து), முதலாவதாக (சுவனமான) அதில் பிரவேசம் செய்யும் பயபக்கதியாளர்களுடன் அவர் பிரவேசிக்க மாட்டார்;

முடிவாக அவர் விஷயத்தில் அல்லாஹ் உற்று நோக்கி (கவனித்து) ஒன்று அவருக்கு தண்டனை நல்குவான், மற்றொன்று அவரை மன்னித்து விட்டுவிடுவான்.

3. "எவருடைய இதயத்தில் கடுகின் வித்தளவு ஈமான் இருந்ததோ, அவர் நரகில் பிரவேசிக்க மாட்டார்" என்று (அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களின் கூற்றானது (அதன் கருத்து: நிரந்தரமாக மற்றும் காலங்காலமாக அதில் பிரவேசித்து இருந்து கொண்டிருப்பார் என்பதல்ல ஜாமிஉல் உஸூலில் இப்னுல் அஸீர் இதைக் கூறியுள்ளார்கள்).

4. மேலும், "(உலகத்தில் அகம்பாவம் மற்றும்) பெருமையடித்துக் கொண்டி ருந்தோர், ஆடவர்களின் தோற்றத்தில். அணுக்களைப்போன்று (உயிர் கொடுத்து) எழுப்பப்படுவர்; எல்லாப் பகுதியிலிருந்தும் இழிவு அவர்களைச் சூழ்ந்து கொள்ளும்; (போல்ஸ்) என அதற்குப் பெயர் கூறப்படும் நரகத் திலுள்ள சிறைச்சாலையின்பால் அவர்கள் இழுத்துச் செல்லப்படுவார்கள்; நெருப்புகளில் உள்ள நெருப்பானது அவர்களுக்கு மேலிருக்கும்; நரகவாசி களின் உடலிலிருந்து வடியும் சீழ்ச்சலத்திலிருந்து (பானமாக) அவர்கள் புகட் டப்படுவர்" என ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

இதை திர்மிதி பதிவு செய்து ஹஸன் எனக் கூறியுள்ளார்கள் ஜாமிஉல் உஸூலுவின் ஆய்வாளர் அதற்கு ஒப்புதல் தெரிவித்துள்ளார்.

5. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: "அறியாமைக் கால அகம்பாவம் மற்றும் மூதாதையர்களைப் பற்றி அ(க் காலகட்டத்)தில் வீண் பெருமையடித்து (பேசி)க் கொண்டிருந்ததை நிச்சயமாக அல்லாஹ் (நீக்கிப்) போக்கி விட்டான், பயபக்தியுள்ள விசுவாசி மற்றும் துர்பாக்கியனான கெட்டவன் (என்ற இருநிலையை மட்டுமே, நிலைப்படுத்தி விட்டான், ஏனெனில்); மனிதர்கள் (அனைவருமே) ஆதமுடைய மக்களாவர்; ஆதமோ மண்ணினால் படைக்கப்பட்டவராவார்கள்".

இதனைத் திர்மிதி பதிவு செய்து ஹஸன் தரத்தையுடையதென அதுபற்றிக் கூறியுள்ளார்கள், ஜாமிஉல் உஸூலுலின் ஆய்வாளர் அதற்கு ஒப்புதல் தெரிவித்துமுள்ளார்கள்.

6. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: ஒரு சமயத்தில் ஒரே நிறத்தில் கீழாடை மற்றும் மேலாடை அணிந்த ஓர் ஆடவர், அவர் மனம் அதைக் கவர்ந்தவராக இருக்க, தன் தலையைவாரியவராக தன் நடையில் அகம்பாவம் கொண்டவராக நடந்து செல்கிறார்; அந்நேரத்தில்

அவரை அல்லாஹ் பூமியில் அழுத்திவிடுகிறான், அவரோ மறுமைநாள்வரை பூமிக்குள் சென்று கொண்டேயிருக்கிறார்.

இதனை புகாரீ மற்றும் முஸ்லிம் பதிவு செய்துள்ளனர்.

## நபி ﷺ அவர்களுடைய சகிப்புத் தன்மையிலிருந்து (சில)

1. உயர்ந்தோனாகிய அல்லாஹ் கூறுகிறான்:

خُذِ الْعَفْوَ وَأْمُرْ بِالْعُرْفِ وَأَعْرِضْ عَنِ الْجَاهِلِينَ

"*(நபியே!) நீர் மன்னிப்பை எடுத்துக் கொள்வீராக! நன்மையை ஏவியும்வருவீராக! அறிவீனர்களைப் புறக்கணித்தும் விடுவீராக!*" (அல் அஃராஃப் அத்தியாயம் வசனம் 199)

2. அனஸ் பின் மாலிக் ரளியல்லாஹு அன்ஹு அறிவித்துக் கூறுகிறார்கள் நான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் நடந்து கொண்டிருந்தேன், ஓரம் கனமாக உள்ள நஜ்ரான் தேசத்தைச் சேர்ந்த மேலங்கி அவர்களின் மீதிருந்தது; அப்போது கிராமவாசி ஒருவர் அவர்களை அடைந்து அவர்களுடைய மேலங்கியோடு அவர்களைக் கடுமையாகப் பிடித்திழுத்து விட்டார்;

முடிவாக அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய கழுத்தின் மேல்பகுதியை உற்றுக் கவனித்தேன், அவர் கடுமையாக இழுத்ததன் காரணமாக மேலங்கியுடைய ஓரம் அதில் வடுவை ஏற்படுத்திவிட்டது. (இவ்வாறு செய்துவிட்ட) அவர், முஹம்மதே! உம்மிடமிருக்கிறதே அத்தகைய அல்லாஹ்வின் செல்வத்திலிருந்து எனக்காக (கொடுக்குமாறு) கட்டளை இடுவீராக! என்று கூறினார்.

(அதைச் செவியேற்ற) அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் திரும்பிப்பார்த்து விட்டுப் பின்னர் சிரிக்கிறார்கள், (அதன்) பின்னர் அவருக்கு அன்பளிப்பை நல்குமாறு கட்டளையிட்டார்கள்.

3. நிச்சயமாக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், அஷுஜ்ஜு அப்துல் கைஸியிடம், "நிச்சயமாக உம்மில் இரண்டு குணமுண்டு அவ்விரண்டை அல்லாஹ் நேசிக்கிறான்; சகிப்புத்தன்மை மற்றும் நிதான குணம்" என்று கூறினார்கள்.

இதை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள் அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ்

ரளியல்லாஹு அனஹுமா

4. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஒரு மரத்தின் கீழ் இறங்கி அதில் தங்களுடைய வாளைத் தொங்க விட்டார்கள் பின்னர் உறங்கினார்கள்; பின்னர் அவர்கள் விழித்தனர் (அதுசமயம்) அவர்களிடம் ஓர் ஆடவர் உள்ளார் அவர்களோ அவர் இருந்தது பற்றி உணர்ந்து கொள்ளவில்லை. (அதுபற்றி) நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "என்னுடைய வாளை அதன் உரையிலிருந்து அவன் உருவிக் கொண்டான், (பின்னர்) உம்மைத் தடு(த்துக் கா)ப்பவன் யார்? என்று கேட்டான், "அல்லாஹ்" என்று நான் கூறினேன் (இதைக்கேட்ட மாத்திரத்தில்) வாளை அதன் உரையில் போட்டுக் கொண்டான், அதன்பின் அந்த மனிதர் நபியின் அருகாமையில் உட்கார்ந்து கொண்டான் நபி அவர்கள் அவனை ஒன்றும் செய்யவில்லை.

புகாரீ மற்றும் முஸ்லிம் ஒருமித்துப்பதிவு செய்துள்ளார்கள் வாக்கியத்தொடர் சுருக்கமாக புகாரீ அவர்களுக்குரியதாகும்.

## கோபம் மற்றும் அதற்குரிய மருந்து

1. உயர்ந்தோனாகிய அல்லாஹ் கூறுகிறான்:

وَالَّذِينَ يَجْتَنِبُونَ كَبَائِرَ الْإِثْمِ وَالْفَوَاحِشَ
وَإِذَا مَا غَضِبُوا هُمْ يَغْفِرُونَ

***"அவர்கள் எத்தகையோரென்றால் பெரும் பாவங்களையும் மானக்கேடான விஷயங்களையும் தவிர்த்துக் கொள்வர் இன்னும் அவர்களுக்கு கோபம் ஏற்பட்டால் (பழி தீர்க்காது) மன்னித்து விடுவார்கள்".*** (அஷ்ஷூரா அத்தியாயம் வசனம் 37)

2. மேலும், உயர்ந்தோனாகிய அல்லாஹ் கூறுகிறான்:

الَّذِينَ يُنفِقُونَ فِي السَّرَّاءِ وَالضَّرَّاءِ وَالْكَاظِمِينَ الْغَيْظَ وَالْعَافِينَ
عَنِ النَّاسِ وَاللَّهُ يُحِبُّ الْمُحْسِنِينَ

*"அவர்கள் எத்தகையோரென்றால், செல்வ நிலையிலும் வறுமை நிலையிலும் செலவு செய்து கொண்டிருப்பார்கள்; கோபத்தையும்*

*அடக்கிக் கொள்ளக்கூடியவர்கள்; மனிதர்(களின் குற்றங்)களையும் மன்னித்து விடக்கூடியவர்கள்; அல்லாஹ்வோ (இத்தகைய) நன்மை செய்வோரை நேசிக்கிறான்".* (அத்தியாயம் ஆலு இம்ரான் வசனம் 134)

3. ஆயிஷா ரளியல்லாஹு அன்ஹா அவர்கள் அறிவித்துக் கூறுகிறார்கள்: "அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தங்களுக்காக (யாரையும்) பழிதீர்த்துக் கொண்டதே இல்லை, அல்லாஹ்வினால் தடுக்கப்பட்டவற்றை(ச் செய்வதன் மூலம் அதன் புனிதம்) தகர்க்கப்பட்டாலே தவிர. அப்போது அல்லாஹ்விற்காக அவற்றில் பழிதீர்த்துக் கொள்வார்கள்".

இதனை புகாரீ மற்றும் முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: எவர் கோபத்தை அதை அவர் செலுத்திவிட ஆற்றல் உள்ளவராக இருக்க அடக்கிக் கொள்கிறாரோ, அவரை, படைப்பினங்களுக் கெதிரில் மறுமை நாளில் அல்லாஹ் அழைத்து, முடிவாக சுவனத்துக் கண்ணழகிகளில் எவரை அவர் நாடுகிறாரோ, அவரைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள அவருக்கு விருப்பமளிக்கிறான்.

இதைத் திர்மிதீ, அபூதாவூது ஆகியோர் பதிவு செய்துள்ளனர்; மேலும், மிஷ்காத்தில் அல்பானீ ஹஸன் தரத்தையுடையதெனக் கூறியுள்ளார்கள்.

4. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:

"(மனிதர்களோடு) மல்யுத்தம் செய்பவர் பலசாலியல்ல, நிச்சயமாக பலசாலி என்பவர், கோபத்தின்போது தன்னை அடக்கிக் கொள்கிறாரோ அத்தகையவர்தான்".

இதனை புகாரீ மற்றும் முஸ்லிம் பதிவு செய்துள்ளனர்.

5. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் ஓர் ஆடவர் வந்து, "எனக்கு உபதேசியுங்கள், எனக்கு அதிமாகவும் கூறிவிட வேண்டாம் (குறைவாகக் கூறினால் அதை) நான் மனனம் செய்து கொள்வேன்" என்று கூறினார், (அதற்கு) அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "கோபம் கொள்ளாதீர்" என்று கூறினார்கள்.

இதை புகாரீ பதிவு செய்துள்ளார்கள்.

6. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் நாங்கள் அமர்ந்திருக்க அவர்களிடம் இரு ஆடவர்கள் ஏசிக்கொண்டனர், அவ்விருவரில்

ஒருவரோ, அவருடைய முகம் சிவந்திருக்க கோபம் கொண்டவராக ஏசுகிறார், (அவரை அந்நிலையில் கண்ட) நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்; நிச்சயமாக ஒரு வார்த்தையை நான் அறிவேன், அதை அவர் கூறினால் அவர் பெற்றிருப்ப(தான கோபமான)து அவரை விட்டும் போய்விடும், (அவ்வார்த்தையே) அஊது பில்லாஹி மினஷ்ஷைத்தானிர் ரஜீம். நபித்தோழர்கள் அந்த ஆடவரிடம்: நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறுவதை நீர் செவியேற்கவில்லையா? என்கின்றனர், கோபமடைந்திருந்த அந்த ஆடவர்: நிச்சயமாக நான் பைத்தியக்காரனல்ல.

இதனை புகாரி மற்றும் முஸ்லிம் பதிவு செய்துள்ளனர்.

7. "நன்மையும் தீமையும் சமமாகிவிடாது (ஆதலால் நபியே!) எது மிக அழகானதோ அதைக் கொண்டு (தீமையை) தடுத்துக் கொள்வீராக! அப்பொழுது எவருக்கும் உமக்குமிடையே பகைமை இருந்ததோ அவர், உம்முடைய உற்ற சிநேகிதரைப்போல் ஆகிவிடுவார்".

ஹாமீம் ஸஜ்தா - ஃபுஸ்ஸிலத் அத்தியாயம் வசனம் 34 உயர்ந்தோனாகிய அவனுடைய கூற்றின் விளக்கத்தில் இப்னு அப்பாஸ் ரளியல்லாஹு அன்ஹுமா கூறுகிறார்கள்.

கோபத்தின் போது பொறுமை கொள்ளுதல், தீங்கிழைக்குமிடத்து மன்னித்தும் விடுதலாகும் ஆகவே (அவ்வாறு) அவர்கள் செய்வார்களானால் அவர்களை அல்லாஹ் பாதுகாத்துக் கொள்கிறான். அவர்களுடைய பகைவர்களை நிச்சயமாக உற்ற சிநேகிதரைப் போன்று அவர்களுக்கு பணியவும் வைத்து விடுகிறான்.

இதை புகாரீ அவர்கள் தஅலீக்காகப் பதிவு செய்துள்ளார்கள்.

8. "நிச்சயமாக கோபம் ஷைத்தானிடமிருந்தாகும், ஷைத்தானோ நெருப்பினால் படைக்கப்பட்டுள்ளான் நிச்சயமாக நெருப்பை அணைப்பதெல்லாம் தண்ணீர் தான் ஆகவே, உங்களில் ஒருவர் கோபம் அடைந்து விட்டால், 'வுளூஉச்' செய்து கொள்ளவும்" என ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

அபூதாவூது இதைப் பதிவு செய்துள்ளார்கள் ஷரஹுஸ் ஸுன்னாவில் ஷுஐப் அர்னாஊத் இதன் தரத்தை ஹஸன்தெனக் கூறியுள்ளார்.

9. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். "உங்களில் ஒருவர் அவர் நின்றவராக இருக்க கோபம் அடைந்து விட்டால் அவர் அமர்ந்து விடவும் (அந்நிலையில்) அவரை விட்டும் கோபம் தணிந்து

விட்டால் (அது நல்லது) அவ்வாறு இல்லாவிட்டாலோ அவர் படுத்துக் கொள்ளவும்".

அபூதாவூது இதைப் பதிவு செய்துள்ளார்கள் ஷரஹுஸ் ஸுன்னாவில் ஷுஐப் அர்னாஊத் இதன் தரத்தை ஹஸன் எனக் கூறியுள்ளார்.

## அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களுடைய அற்புதங்களிலிருந்து (சில)

1. அப்துல்லாஹ் பின் மஸ்ஊது ரளியல்லாஹு அன்ஹு அறிவித்துக் கூறுகிறார்கள்: "அத்தாட்சிகளை நாங்கள் பரக்கத்தாக எண்ணிக் கொண்டிருந்தோம். நீங்களோ அவற்றை பயமுறுத்தலாக எண்ணுகிறீர்கள். ஒரு பயணத்தில் அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் நாங்கள் இருந்தோம். அப்போது தண்ணீர் (தட்டுப்பாடு) குறைவு ஏற்பட்டு விட்டது. (அல்லாஹ்வின்) தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்:

தண்ணீரிலிருந்து எஞ்சியுள்ளதை எனக்காகத் தேடுங்கள் நபித்தோழர்கள் குறைந்த தண்ணீருள்ள ஒரு பாத்திரத்தைக் கொண்டு வருகிறார்கள். (கொண்டு வரப்பட்ட) அப்பாத்திரத்தில் அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தங்களது கையை நுழைக்கிறார்கள்.

அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்:

அபிவருத்தி நல்கப்பட்ட பரிசுத்தமான (தண்ணீரின் பக்கம்) வாருங்கள், அபிவிருத்தியோ அல்லாஹ்விடமிருந்துள்ளதாகும்.

இப்னு மஸ்ஊது: அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய விரல்களுக்கிடையே ஊற்றுப் பெருக்கெடுத்து வரும் தண்ணீரை நிச்சயமாக நான் கண்டேன். இன்னும் உணவின் தஸ்பீஹை அதை உண்ணப்படுகின்ற நிலையில் நிச்சயமாக செவியேற்பவர்களாக நாங்கள் இருந்தோம்.

இதனை புகாரீ பதிவு செய்துள்ளார்கள்.

2. இம்ரான் பின் ஹுஸைன் ரளியல்லாஹு அன்ஹு அறிவித்துக் கூறுகிறார்கள்: ஒரு பயணத்தில் அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மற்றும் அவர்களின் தோழர்கள் இரவில் பிரயாணிக்கிறார்கள். அப்போது அவர்களுக்குக் கடுமையான தாகம்

ஏற்படுகின்றது. அதன் நிமித்தம் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தன்தோழர்களிலிருந்து இரு ஆடவரை அனுப்பி வைக்கிறார்கள் அலி மற்றும் ஜுபைரை அல்லது அவ்விருவரல்லாதவரை என நான் எண்ணுகிறேன்.

(அல்லாஹ்வின்) தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்:

இன்னின்னவாறு உள்ள இடத்தில் நிச்சயமாக நீங்களிருவரும் ஒரு பெண்ணை(க் காண)ப் பெறுவீர்கள் அவளுடன் ஒட்டகம் உண்டு. அதன் மீது இரு தோல் பைகள் உண்டு அவளை என்னிடம் நீங்களிருவரும் (அழைத்துக்) கொண்டு வாருங்கள். அந்த இரு நபித்தோழர்கள் (அவர்களுக்குச் சொல்லிக் காட்டப்பட்ட அந்த இடத்தில்) அப்பெண்ணிடம் வந்து, ஒட்டகத்தின் மீது இரு தோல் பைகளுக்கிடையில் நிச்சயமாக சவாரி செய்து கொண்டிருந்த அவளை (காண)ப் பெறுகிறார்கள்.

இரு நபித்தோழர்கள் அப்பெண்ணிடம்: (அல்லாஹ்வின்) தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு பதிலளிப்பீராக.

அப்பெண் (கேட்கிறாள்): அந்த ரஸூலுல்லாஹ் யாரோ? (தன்னுடைய மூதாதையரின் மார்க்கத்தை விட்டுவிட்ட) இந்த மதமாறியவரா?

இரு நபித்தேழர்கள்: நீர் நாடுகிறீரே அத்தகையவர் தான் அவரே உண்மையாக அல்லாஹ்வின் தூதர். (இதைச் செவியேற்ற) அப்பெண் தூதர் அவர்களிடம் வருகிறாள், அப்போது அவளுடைய இரு தோல் பைகளிலிருந்து (கொஞ்சம் தண்ணீர்) எடுக்கப்பட்டு ஒரு பாத்திரத்தில் வைக்கப்படுமாறு கட்டளையிடுகிறார்கள். (அவ்வாறே வைக்கப்பட்டதன்) பின்னர் அவர்கள் கூறவேண்டுமென அல்லாஹ் நாடியதை தண்ணீரில் அவர்கள் கூறுகிறார்கள். (அவ்வாறு அவர்கள் கூறிய) அத்தண்ணீரை இரு தோல்பைகளில் பின்னர் திருப்பி ஊற்றினார்கள்; (அதன்) பின்னர் அவ்விருதோல்பைகளை திறக்குமாறு அவர்கள் கட்டளையிட நாங்கள் (அவற்றைத்) திறந்தோம். பின்னர் மனிதர்களுக்கு (நிரப்பிக் கொள்ளுமாறு) கட்டளையிட்டார்கள், அவ்வாறே, தங்களுடைய பாத்திரங்கள் தோல்பைகள் ஆகியவற்றில் அவர்கள் நிரப்பிக் கொண்டனர், எந்தப்பாத்திரத்தையும் எந்த தோல்பையையும் நிரப்பாது அவர்கள் விடவில்லை.

இம்ரான் கூறுகிறார்: நிரப்புவதைத்தவிர நிச்சயமாக அது அதிகப்படுத்தவில்லை என்று காட்சியளிப்பதாகவே இருந்தது.

அப்பெண்ணிடமிருந்த துணியை விரிக்குமாறு தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கட்டளையிடுகிறார்கள் (அவ்வாறே விரிக்கப்படுகின்றது) பின்னர் தன் தோழர்களுக்கு அவர்களிடமுள்ள உணவுப் பொருளிலிருந்து எதையாவது ஆஜராக்குமாறு கட்டளையிட்டார்கள், முடிவாக அவளுக்காக (விரிக்கப்பட்ட) அவளுடைய துணியை நிரப்பிவிட்டனர்.

(அல்லாஹ்வின்) தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அப்பெண்ணிடம்: (இவற்றை எடுத்துக் கொண்டு) சென்றுவிடு, ஏனெனில் நிச்சயமாக நாங்கள் உன் தண்ணீரிலிருந்து எதையும் எடுத்துக் கொள்ளவில்லை. ஆனாலும் அல்லாஹ் எங்களுக்கு(த் தண்ணீர்)ப் புகட்டினான்.

அப்பெண், (அவர்கள் அன்பளிப்பாகக் கொடுத்த) உணவுப் பொருள், இரு தோல்பைகள் ஆகியவற்றை எடுத்துக் கொண்டு தன்னுடைய குடும்பத்தாரிடம் வந்தடைந்தாள்.

அப்பெண் தன்குடும்பத்தாரிடம் மனிதர்களில் மிகப்பெரிய சூனியக்காரரிட மிருந்து உங்களிடம் நான் வந்துள்ளேன், அல்லது நிச்சயமாக அவர்தான் அல்லாஹ்வின் உண்மையான தூதர் (இதைச் செவியேற்ற) அப்பகுதியைச் சேர்ந்தவர்கள் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்து அவர்களைனைவரும் இஸ்லாத்தை ஏற்றுவிடுகின்றனர்.

இதனைப் புகாரீ மற்றும் முஸ்லிம் பதிவு செய்துள்ளனர்.

(மேற்கூறிய) அற்புதத்திலிருந்து பெறப்படும் கருத்துக்கள்:

1. (அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களுடைய விரல்களுக்கிடையே இருந்து ஊற்றாகப் பெருக்கெடுத்தோடியதே அத்தகைய பரக்கத்துச் செய்யப்பட்ட தண்ணீர் அதன் பரக்கத்து, இந்த அற்புதத்தைப் படைத்தானே அந்த ஒருவனான அல்லாஹ்விடமிருந்து தான் உண்டானது என்பதின் பால் தங்களது தோழர்களின் கவனத்தை அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் திருப்புகிறார்கள்.

தன் சமூகத்தாரை ஏகத்துவத்தின் பால் திருப்பி அல்லாஹ்வை அவனைத் தனித்தவனாக ஏற்று அவனோடு மட்டும் அவர்களின் சம்மந்தம் இருக்க வேண்டும் என்று இதுவே, அல்லாஹ்வின் தூதர் அவர்களின் பேரவாவாகும். இதன் நிமித்தமே “பரக்கத் அல்லாஹ்விடமிருந்துள்ளது”. என்று கூறினார்கள்.

2. (தூய மற்றும் உயர்ந்தோனாகிய) அல்லாஹ் அவன் நாடும் போதும் அவசியம் ஏற்படும்போதும் மறைவானவற்றில் சிலதை தன் தூதருக்கு திண்ணமாக உதிக்கச் செய்கிறான். அ(வ்வாறு அவன் அறிவித்த)தனால்

தான், தண்ணீரைச் சுமந்து சென்ற அப்பெண்ணின் இடத்தைப்பற்றித் தன் தோழர்களுக்கு அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தெரிவித்தார்கள்.

3. இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டவரைப்பற்றி 'ஸாபியி' (அதாவது அல்லாஹ் வையின்றி அவ்லியாக்களை அழைத்து வந்தோரான தங்களது மூதாதையரின் மார்க்கத்தை விட்டுவிட்டவர்) என்று இணைவைத்துக் கொண்டிருந்தோர் கூறுபவர்களாக இருந்தனர், (அது) ஏனெனில், அவரை விட்டும் மனிதர்களைத் திருப்பி, அவரை பழிப்பதற்காக நம் காலத்திலும் கூட, எவர் ஏகத்துவத்தின்பால் (மனிதர்களை) அழைத்து அல்லாஹ்வை - அவனைத் தனித்தவனாக அழைக்கவேண்டுமெனவும் கட்டளையிட்டு, நபிமார்கள், அவ்லியாக்களிலிருந்துள்ள அல்லாஹ் அல்லாதோரை அழைப்பதை விட்டும் அல்லாஹ் மற்றும் அவனுடைய தூதரின் கட்டளைக் கிணங்க எச்சரிக்கையும் செய்கிறாரோ, அவரை அவருடைய பிரச்சாரத்திலிருந்து மனிதர்களை திசைதிருப்புவதற்காக மனிதர்கள் அவரைப்பற்றி 'வஹ்ஹாபீ', எனக்கூறுகிறார்கள் ஏனெனில் நிச்சயமாக அவர் அவர்களுடைய கண்ணோட்டத்தில் மூதாதையரின் மார்க்கத்தை விட்டுவிட்ட 'ஸாபியீ', போன்றவராவார், மேலும் 'வஹ்ஹாபீ' என்ற வார்த்தை 'அல்வஹ்ஹாப்', என்பதன் பால் இணைக்கப்பட்டதாக இருக்க வேண்டுமென அல்லாஹ் நாடிவிட்டான். அ(ல்வஹ்ஹாப் என்ற அ)துவே அவருக்கு தவ்ஹீதை அன்பளிப்புச் செய்தானே அத்தகையவனின் பெயர்களில் ஒரு பெயராகும்.

4. உபகாரத்திற்குத் தக்க சன்மானம்:

தண்ணீரிலிருந்து குறைவானதை அவர்களுக்கு வழங்கினாரே அப்பெண்ணுக்கு தக்க சன்மானத்தை நல்குமாறு அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கட்டளையிட்டார்கள். அதன் நிமித்தம் (அப்பெண்ணிடமிருந்து எடுத்த) தண்ணீரிலிருந்து அவர்கள் எதையும் குறைக்காது அதைத் திருப்பிக் கொடுத்துவிட்ட பிறகு உணவுப் பொருளால் அவளின் (விரிப்புத்) துணியை நிரப்பி விட்டார்கள் மேலும், அவளிடம் "ஆனாலும் அல்லாஹ்தான் எங்களுக்கு(த் தண்ணீரை)ப் புகட்டினான்" என்று கூறினார்கள்.

5. அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் மற்றும் அவர்களது தோழர்களிடமிருந்து அவள் சந்தித்துப் பெற்ற நல்ல அணுகு முறை மற்றும் இந்தநற்குணங்களால் அப்பெண் ஈர்க்கப்பட்டுப் பின்னர் தன் கூட்டத்தாரிடம் திரும்பிச் சென்று அவர்களிடம், "நிச்சயமாக அவர்

உண்மையான அல்லாஹ்வின் தூதர்தான்" என்று கூறினாள், அதன் விளைவே அவளின் குடும்பத்தாரும் அவர்களுடன் இருந்த அனைவரும் இஸ்லாத்தைத் தழுவி விட்டனர்.

6. ஏகத்துவத்தின் மீது இவ்வாறான பேராவல் மற்றும் இச்சிறந்த குணங்களால் முஸ்லிம்களுக்கு அல்லாஹ் வெற்றியை நல்கினான். இப்பிரபஞ்சத்தில் இஸ்லாமும் பரவியது. மேலும் முஸ்லிம்கள் ஏகத்துவம் மற்றும் இச்சிறந்த குணங்களை விட்டுவிட்ட போது இழிவும் தாழ்வும் அவர்களைப் பிடித்துக் கொண்டது தவ்ஹீது மற்றும் நற்குணங்களின்பால் திரும்பினால் அல்லாது அவர்களுக்கு கௌரவம் என்பது கிடைக்காது.

*"அவனுக்கு உதவி செய்வோருக்கு நிச்சயமாக அல்லாஹ் உதவி செய்கிறான். நிச்சயமாக அல்லாஹ் மிகுந்த பலமிக்கவன்; மிகைத்தவன்."* (அல்ஹஜ் அத்தியாயம் வசனம் 40)

## நபி ﷺ அவர்களுடைய பொறுமை(த் தன்மை)யிலிருந்து (சில)

உயர்ந்தோனாகிய அல்லாஹ் கூறுகிறான்:

وَاصْبِرْ وَمَا صَبْرُكَ إِلاَّ بِاللهِ وَلاَ تَحْزَنْ عَلَيْهِمْ وَلاَ تَكُ فِي ضَيْقٍ
مِّمَّا يَمْكُرُونَ إِنَّ اللهَ مَعَ الَّذِينَ اتَّقَواْ وَّالَّذِينَ هُم مُّحْسِنُونَ

*1. "இன்னும் (நபியே!) நீர் பொறுமையுடன் இருப்பீராக! இன்னும் உம்முடைய பொறுமை அல்லாஹ்வைக் கொண்டே தவிர இல்லை; அவர்களுக்காக நீர் கவலைப்படவும் வேண்டாம்; அவர்கள் செய்யும் சூழ்ச்சிகளைப்பற்றி நீர் இக்கட்டிலும் ஆகிவிடவேண்டாம் நிச்சயமாக அல்லாஹ் பயபக்தியுடையவர் களுடன் இருக்கிறார்களே அத்தகையோருடனும் நன்மைகள் செய்கிறார்களே அவர்களுடனும் இருக்கிறான்".* (அந்நஹ்ல் அத்தியாயம் வசனம் 127,128)

2. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் ஆயிஷா ரளியல்லாஹு அன்ஹா: உஹது நாளைவிட மிகக் கடினமான நாள் உங்களுக்கு வந்ததுண்டா?

தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்:

உம் கூட்டத்தாரிடமிருந்து நிச்சயமாக நான் சந்தித்தேன் அகபா நாளன்று அவர்களிடமிருந்து நான் சந்தித்தது மிகக் கடினமானதாக இருந்தது. இப்னு அப்து, யாலைல் பின் (கூட்டத்தினர்) மீது என்னை (என் கொள்கையை) எடுத்து வைத்தபோது, அவர்கள் (அதை ஏற்று) பதில் கூறவில்லை ஆகவே, என் முகத்தில் கவலை படிந்தவனாக நடந்து கொண்டிருந்தேன், (தாயிஃப் மற்றும் மக்காவிற்கிடையில் உள்ள மலையான) கர்னுஸ்ஸஆலிபில் நான் இருந்தபோதல்லாது நான் தெளிவு பெறவில்லை. அங்கு என் தலையை உயர்த்தினேன், அந்நேரத்தில் எனக்கு நிழலிட்டுவிட்ட மேகத்திற்குக்கீழே நான் இருக்கிறேன். அப்போது நான் பார்வையை செலுத்தினேன் அதுசமயம் அதில் ஜிப்ரீல் இருந்தார்கள்.

ஜிப்ரீல் (அழைக்கிறார்): உம்முடைய சமூகத்தார் உமக்குக் கூறியவற்றையும் உம்மை அவர்கள் திருப்பிவிட்டதையும் நிச்சயமாக அல்லாஹ், செவியேற்று விட்டான், நிச்சயமாக அல்லாஹ், மலைகளின் மலக்கை அவர்கள் விஷயத்தில் நீர் நாடியவாறு அவருக்கு கட்டளையிட உம்மிடம் அனுப்பியும் உள்ளான்.

மலைகளின் மலக்கு: (தூதருக்கு ஸலாம் கூறிவிட்டு மேலும் கூறுகிறார்) முஹம்மதே! நிச்சயமாக அல்லாஹ் உம்முடைய சமூகத்தார் உமக்குக் கூறியவற்றைச் செவியேற்றுவிட்டான், நான்தான் மலைகளின் மலக்கு, நீர் விரும்பியவாறு உமது காரியத்தில் எனக்கு நீர் கட்டளையிடுமாறு உம்மிடம் உமது இரட்சகன் என்னை அனுப்பி வைத்துள்ளான். நீர் நாடினால் (மக்காவிலுள்ள) இருமலைகளை அவர்களின் மீது நான் அழுத்தி விடுவேன்.

தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்: இல்லை! அல்லாஹ்வை அவன் தனித்தவனாக இருக்க - அவனுக்கு எவரையும் (எதையும்) இணையாக்காது வணங்குவோரை அவர்களுடைய முதுகந்தண்டுகளிலிருந்து (சந்ததிகளாக) அல்லாஹ் வெளிப்படுத்த வேண்டுமாறு நான் ஆதரவு வைக்கிறேன்.

இதனைப் புகாரீ மற்றும் முஸ்லிம் பதிவு செய்த ஹதீஸ்

3. இப்னு மஸ்ஊது அறிவித்துக் கூறுகிறார்கள்:

அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இரு பங்கீட்டை (தனது தோழர்களுக்கு மத்தியில்) பங்கீடு செய்கிறார்கள்.

ஒரு மனிதர் கூறுகிறார்: இ(வ்வாறு பங்கீடு செய்வ)தனால் அல்லாஹ்வின் முகம் நாடப்படவில்லை.

அந்த மனிதரின் பேச்சை அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி

வஸல்லம் அவர்களிடம் இப்னு மஸ்ஊது நினைவு கூறுகிறார்கள் (அதைக் கேட்ட ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களுடைய முகம் மாறிவிடுகிறது (அப்போது) (அல்லாஹ்வின்) தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்: (நபி) மூஸாவுக்கு அல்லாஹ் அருள் செய்வானாக! இதைவிட மிகக் கடுமையானவற்றால் நிச்சயமாக சங்கடப்படுத்தப்பட்டார், ஆயினும் அவர் பொறுத்துக் கொண்டார்.

இதனை புகாரீ மற்றும் முஸ்லிம் பதிவு செய்துள்ளனர்.

4. அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய கடைவாய்ப் பற்கள் உஹதுப்போரில் உடைக்கப்பட்டு, அவர்களுடைய தலையிலும் காயம் ஏற்படுத்தப்படுகிறது (அதனால்) வடிகின்ற இரத்தத்தை அவர்கள் துடைத்துக் கொண்டு, “அல்லாஹ்வின்பால் அவர்களை அவர் அழைப்பவராக இருக்க, தங்களுடைய நபியானவருக்குக் காயத்தை ஏற்படுத்தி, அவருடைய கடைவாய்ப் பற்களையும் உடைத்தெறிந்துவிட்ட ஒரு சமூகத்தார் எவ்வாறு வெற்றி பெறுவர்? என்றும் கூறுகிறார்கள் (அதையடுத்து) குர்ஆன் இறங்குகிறது:

لَيْسَ لَكَ مِنَ الأَمْرِ شَيْءٌ أَوْ يَتُوبَ عَلَيْهِمْ
أَوْ يُعَذِّبَهُمْ فَإِنَّهُمْ ظَالِمُونَ

“*(நபியே!) இக்காரியத்தில் (நாம் கட்டளையிட்டதைத் தவிர) உமக்கு யாதோர் அதிகாரமுமில்லை; ஒன்று அவன் அவர்களின் தவ்பாவை ஏற்றுக் கொள்ளலாம்; அல்லது அவர்களை வேதனையும் செய்யலாம் அதன் காரணம், நிச்சயமாக அவர்கள் அநியாயக் காரர்களாவர்*” (ஆலுஇம்ரான் அத்தியாயம் வசனம் 128)

இது முஸ்லிம் பதிவு செய்துள்ள ஹதீஸாகும்

5. அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம், கஃபாவின் நிழலில் தங்களது போர்வையை வைத்து அவர்கள் சாய்ந்து கொண்டிருக்க நாங்கள் முறையீடு செய்துவிட்டுப் பின்னர், “எங்களுக்காக (உதவியை நல்கிட) அல்லாஹ்விடம் பிரார்த்திக்க மாட்டீர்களா? எங்களுக்காக உதவியைக் கேட்கமாட்டீர்களா? என்று நாங்கள் கூறினோம்.

(அதைச் செவியேற்ற) அவர்களின் நிறம் சிவந்தவர்களாக அல்லது

அவர்களுடைய முகம் சிவந்தவர்களாக (எழுந்து) அமர்ந்து கொண்டு எங்களுக்குக் கூறினார்கள்:

“உங்களுக்கு முன்பு(ள்ள சமூகத்தில்) ஒரு மனிதர் பிடிக்கப்பட்டு, பூமியில் அவருக்காக (குழி) தோண்டப்பட்டுப் பின்னர் ரம்பம் கொண்டுவரப்பட்டு, அவரது தலைக்குமேல் வைத்து (அறுக்கப்பட்டு) இருபிளவாக அவர் ஆக்கப்படுபவராக இருந்தார். அது அவரை அவருடைய மார்க்கத்திலிருந்து திருப்பி விடவில்லை. எலும்பு மற்றும் நரம்பு ஆகியவற்றிலிருந்துள்ள இறைச்சிக்குக் கீழ்ப்பகுதிகளை இரும்புச்சீப்புகளால் சீவப்படும் (கீறிக் கிழிக்கப் படும்); அது அவரை அவருடைய மார்க்கத்திலிருந்து திருப்பி (மாற்றி)விடவில்லை, இந்த மார்க்கத்தை நிச்சயமாக அல்லாஹ் பூர்த்தியாக்கித் தருவான், இறுதியில் ‘ஸன்ஆவி’லிருந்து ‘ஹளரமவ்த்’ வரை உங்களிலுள்ள வாகனக்காரார் (எவ்வித பயமுமின்றி) பயணிப்பார் அல்லாஹ்வையன்றி வேறு எதையும் (எவரையும்) அவர் பயந்து கொள்ளமாட்டார்; ஆனாலும் நீங்கள் அவசரப்படுகிறீர்கள்.

இதை புகாரீ பதிவு செய்துள்ளார்கள்.

## அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களுடைய இரக்கத் தன்னையிலிருந்து (சில)

1. உயர்ந்தோனாகிய அல்லாஹ் கூறுகிறான் :

لَقَدْ جَاءَكُمْ رَسُولٌ مِّنْ أَنفُسِكُمْ عَزِيزٌ عَلَيْهِ مَا عَنِتُّمْ حَرِيصٌ عَلَيْكُم بِالْمُؤْمِنِينَ رَؤُوفٌ رَّحِيمٌ

“*(விசுவாசிகளே!) உங்களிலிருந்தே திட்டமாக ஒரு தூதர் உங்களிடம் வந்திருக்கின்றார், (உங்களுக்கு யாதொரு துன்பம் ஏற்பட்டு) நீங்கள் கஷ்டப்படுவது அவருக்கு மிகவருத்தமாக இருக்கும்; உங்கள் மீது மிக்க பேராசை கொண்டவர்; விசுவாசி களோடு மிக்க இரக்கமுள்ளவர்; மிகக் கிருபையுடையவர்.*” (அத்தவ்பா அத்தியாயம் வசனம் 128)

முதலாவது ஹதீஸ்: அனஸ் ரளியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவித்துக் கூறுகிறார்கள்: ஒரு சமயம் அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி

வஸல்லம் அவர்களுடன் நாங்கள் இருந்தோம், அப்போது கிராமத்துவாசி ஒருவர் வந்து பின்னர் பள்ளியில் சிறுநீர் கழிக்க ஆரம்பித்தார்.

நபித்தோழர்கள்: (சிறுநீர் கழிப்பதை) விட்டுவிடு! விட்டுவிடு! என்று அவரைப் பார்த்து சப்தமிடுகின்றனர்.

தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்: அவரை - அவர் சிறுநீர் கழிப்பதைத் துண்டித்து விடாதீர்கள் அவரை (சிறுநீர் கழிக்க) விட்டு விடுங்கள். (அதைச் செவியேற்ற) நபித்தோழர்கள் கிராமத்து வாசியை அவர் சிறுநீர் கழித்து முடிக்க விட்டுவிடுகின்றனர். (அதற்குப்)பின்னர் அல்லாஹ்வின் தூதர் அவர்கள் கிராமத்துவாசியை அழைக்கின்றனர்.

(அல்லாஹ்வின்) தூதர் (கிராமவாசியிடம்): “நிச்சயமாகப் பள்ளிகள், இம் மாதிரியாக சிறுநீர் மற்றும் அசிங்கமானவற்றுக்குரியதல்ல, அது உரிய தெல்லாம். அல்லாஹ்வை நினைவு கூருதல், தொழுதல், குர்ஆன் ஓதுதல் ஆகியவற்றுக்கே.

தூதர் (தன் தோழர்களிடம்): நீங்கள் அனுப்பப்பட்டதெல்லாம் இலேசு செய்பவர் களாகத்தான், சிரமம் கொடுக்கக் கூடியவர்களாக நீங்கள் அனுப்பப்பட்டவர் களுமல்லர், அவருடைய சிறுநீர் மீது தண்ணீரிலிருந்து ஒரு வாளியை ஊற்றி விடுங்கள்.

(இதைச் செவியேற்ற) கிராமத்துவாசி: யா அல்லாஹ்! எனக்கு மற்றும் முஹம்மதுக்கு (மட்டும்) நீ அருள் செய்வாயாக! எங்களுடன் (மற்ற) எந்த ஒருவருக்கும் நீ அருள் செய்யாதிருப்பாயாக!.

(அல்லாஹ்வின்) தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்: விசாலமான அ(ல்லாஹ்வின் அருளான)தை நெருக்கத்தில் ஆக்கி விட்டீர்.

இதனை புகாரீ மற்றும் முஸ்லிம் பதிவு செய்துள்ளனர்.

இரண்டாவது ஹதீஸ்: முஆவியா பின் அல்ஹகம் அஸ்ஸில்மிய்யு ரளியல்லாஹு அன்ஹு அறிவித்துக் கூறுகிறார்கள்: ஒரு சமயம் அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் நான் தொழுது கொண்டிருக்க (தொழுது கொண்டிருந்த) கூட்டத்தாரிலிருந்து ஒருவர் தும்மிவிட்டார்.

முஆவியா: (தும்மியவருக்கு) யர்ஹமுகல்லாஹ் (அல்லாஹ் உனக்கு அருள் செய்வானாக!) என்று கூறியதைக் கேட்ட தொழுது கொண்டிருந்தோர் (என் செயலை) மறுக்கக் கூடியவர்களாக என்பால் நோட்டமிடுகின்றனர்.

முஆவியா அவர்களைப் பார்த்துப் பேசுகிறார்: அவருக்குத் தந்தையில்லாது போக! உங்களின் காரியெமென்ன? என்பால் (ஏன் இவ்வாறு) உற்றுப் பார்க்கிறீர்கள்? தொழுது கொண்டிருப்போர் அவர் வாய்மூடுவதற்காக தங்களின் தொடைகளின் மீது அவர்களுடைய கைகளை அடிக்கின்றனர். அவரைவாய் மூடச் செய்யவே இவ்வாறு அவர்கள் செய்கிறார்கள் என்பதைக் கண்டு தொழுகை முடியும் வரை வாய் மூடிவிடுகிறார்.

முஆவியா: (அல்லாஹ்வின்) தூதர் அவர்களைப் புகழ்கிறார்: என் தந்தையான அவர் மற்றும் என் தாய் அர்ப்பணம்! அவர்களுக்கு முன்போ, அவர்களுக்குப் பிறகோ கற்றுத் தருவதில் அவர்களை விட மிக்க அழகானவரை நான் கண்டதில்லை அல்லாஹ்வின் மீது சத்தியமாக! என்னை அவர்கள் அடக்கவில்லை, என்னை அவர்கள் அடிக்கவுமில்லை, என்னை அவர்கள் ஏசவுமில்லை.

(அல்லாஹ்வின்) தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்: நிச்சயமாக இருந்த தொழுகையானது மனிதர்களுடைய பேச்சுகள் எதுவும் அதில் சரியல்ல. நிச்சயமாக (தொழுகை) என்பது துதித்தல், தக்பீர் கூறுதல், குர்ஆன் ஓதுதல் ஆகியவைதான்.

முஆவியா: அல்லாஹ்வின் தூதர் அவர்களே! அறியாமை காலத்துக்கு நிச்சயமாக நான் மிக்க சமீபத்தில் உள்ளவன் திட்டமாக இஸ்லாத்தை அல்லாஹ் கொண்டுவந்தான், இன்னும் எங்களில் சில மனிதர்கள் (மறைவானவற்றின் அறிவு தங்களுக்கு உண்டு என வாதிப்போரான) குறிசொல்பவர்களிடம் செல்கிறார்கள், (அவ்வாறு செல்லலாமா?)

(அல்லாஹ்வின்) தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்: அவர்களிடம் நீர் செல்லாதீர்.

முஆவியா: எங்களில் சில மனிதர்கள் துர்சகுணம் பார்க்கிறார்கள் (பார்க்கலாமா?)

(அல்லாஹ்வின்) தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்: அது ஒருகாரியம், அவர்களுடைய மனங்களில் அவர்கள் (காணப்) பெறுகிறார்கள்.

(அதாவது: அவர்களுடைய செயல்பாடுகளைவிட்டும் அது அவர்களைத் தடுத்து விடவேண்டாம், ஏனெனில் , நிச்சயமாக (துர்சகுணம் பார்க்கும்) அது எவ்விதப் பயனையோ, இடரையோ, உண்டாக்காது.)

இந்த ஹதீஸை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

மூன்றாவது ஹதீஸ்: ஆயிஷா ரளியல்லாஹு அன்ஹா அறிவித்துக் கூறுகிறார்கள் நிச்சயமாக யூதர்கள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்தனர்.

யூதர்கள்: அஸ்ஸாமு அலைக்க (மரணம் உங்களுக்கு உண்டாகட்டும்) அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்! வஅலைக்கும் (மரணம் உங்களுக்கும் சம்பவிக்கட்டும்.)

ஆயிஷா ரளியல்லாஹு அன்ஹா: அஸ்ஸாமு அலைக்கும் வலஅனக்கு முல்லாஹ், வகளிப அலைக்கும் (உங்களுக்கு மரணம் சம்பவிக்கட்டும், உங்களை அல்லாஹ் சபிக்கவும் செய்வானாக! உங்களின் மீது அவனின் கோபமும் உண்டாகட்டும்.)

(அல்லாஹ்வின்) தூதர் அவர்கள்: ஆயிஷாவே அமைதிகாக்க! இரக்கத் தன்மையைக் கடைப்பிடிப்பீராக! மூர்க்கத்தனத்தையும் கெட்டபேச்சையும் தவிர்க்குமாறு உம்மை நான் எச்சரிக்கிறேன்.

ஆயிஷா: அவர்கள் கூறியதை நீங்கள் கேட்கவில்லையா?

(அல்லாஹ்வின்) தூதர் அவர்கள்: நான் கூறியதை நீ கேட்கவில்லையா? (அவர்கள் கூறியதையே) அவர்களுக்கு திருப்பிக் கூறிவிட்டேன், எனக்கு (துஆ) அங்கீகரிக்கப்படும் என்னில் (என் விஷயத்தில்) அவர்களுக்கு (துஆ) அங்கீகரிக்கப்படாது.

இதனை புகாரீ பதிவு செய்துள்ளார்கள்.

முஸ்லிமுடைய அறிவிப்பில்: கெட்டதைச் செய்பவளாக (கெட்ட பேச்சுகள் உடையவளாக) நீ ஆகிவிடாதே! ஏனெனில் நிச்சயமாக அல்லாஹ், கெட்ட (பேச்சான)தையும் கெட்டதைச் செய்வதையும் விரும்பமாட்டான் (விரும்புவதில்லை.)

## இரக்கத் தன்மை பற்றிய ஹதீஸ்கள்

1. ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: "நிச்சயமாக அல்லாஹ் இரக்கத் தன்மையுடையவன் இரக்கத் தன்மையை அவன் விரும்புகிறான், மூர்க்கத் தனத்திற்கும் அதல்லாதவற்றுக்கும் அளிக்காதவற்றை இரக்கத் தன்மைக்கு (நன்மையாக) வழங்குகிறான்".

இதனை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

2. மேலும், ஆயிஷா ரளியல்லாஹு அன்ஹா அவர்களுக்கு அல்லாஹ்வின்

தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் “இரக்கத் தன்மையை கடைப்பிடிப்பீராக! மூர்க்கத் தனத்தையும் கெட்டபேச்சையும் தவிர்குமாறு உம்மை நான் எச்சரிக்கிறேன், நிச்சயமாக இரக்கத் தன்மை எதிலும் இருந்த தில்லை அதை அது (அலங்கரித்து) அழகாக்கியே தவிர எதிலிருந்தும் அது பறிக்கப்படுவதில்லை அதை அது கோரப்படுத்தியே தவிர” என்று கூறினார்கள்.

இதனை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

3. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் “ஆயிஷாவே! இரக்கம் காட்டுவீராக! ஏனெனில் நிச்சயமாக அல்லாஹ், ஒரு வீட்டாருக்கு நன்மையை நாடிவிட்டால் அவர்களில் இரக்கத் தன்மையை புகுத்தி விடுகிறான்” என்று கூறினார்கள்.

ஸஹீஹான தொடராகும் இதனை அஹ்மது பதிவு செய்துள்ளார்கள்.

4. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் “எவர் இரக்கத் தன்மையிலிருந்து நீக்கப்பட்டு விட்டாரோ, அவர் நன்மை அனைத்திலிருந்தும் நீக்கப்பட்டவராவார்” என்று கூறினார்கள்.

இதனை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

5. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: இரக்கத் தன்மையிலிருந்து தன்பங்கை எவர் கொடுக்கப்பட்டாரோ, அவர் திட்டமாக நன்மையான வற்றிலிருந்து தன்பங்கைக் கொடுக்கப்பட்டவராவார். இன்னும் எவர் இரக்கத் தன்மையிலிருந்து தன் பங்கைத் தடுக்கப்பட்டு விட்டாரோ, அவர் நன்மையிலிருந்து தன்பங்கைத் திட்டமாக தடுக்கப் பட்டவராவார்”.

அஹ்மது மற்றும் திர்மிதி இதனைப் பதிவு செய்து அர்னாஊத் இதனை ஹஸன் தரத்தை உடையதெனக் கூறியுள்ளார்.

6. அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தங்கள் காரியங்கள் சிலவற்றுக்காக தங்களுடைய தோழர்களில் எவரையாவது அனுப்பி வைக்கும் பொழுது அவர்கள் கூறுவார்கள் நற்செய்தி கூறுங்கள் வெறுப்பை உண்டாக்கி விடாதீர்கள்; இலகுவாக செய்யுங்கள்; சிரமப்படுத்தாதீர்கள்.

இதனை புகாரீ மற்றும் முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

7. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:

"நிச்சயமாக நான் தொழுகையில் நுழைகிறேன் அதை நீட்டவே நான் நாடுகிறேன் அப்போது குழந்தையின் அழுகை சப்தத்தை நான் செவியேற்கிறேன், அ(க்குழந்தையான)து அழுவதால் அதன் தாயி(க்கு ஏற்படுவத)ன் கவலையைப் பற்றி நான் அறிந்திருப்பதால் என் தொழுகையை நீட்டாது (சுருக்கி)க் கொள்கிறேன்.

புகாரீ மற்றும் முஸ்லிம் ஒருமித்துப் பதிவு செய்துள்ளனர்.

## அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களுடைய வீரத் தன்மையிலிருந்து (சில)

1. உயர்ந்தோனாகிய அல்லாஹ் கூறுகிறான்:

فَقَاتِلْ فِي سَبِيلِ اللهِ لاَ تُكَلَّفُ إِلاَّ نَفْسَكَ وَحَرِّضِ الْمُؤْمِنِينَ

***"எனவே, (நபியே!) நீர் அல்லாஹ்வுடைய பாதையில் போர் செய்வீராக! நீர் உம்மைத்தவிர (வேறெவரும்) கட்டாயப்படுவதற் கில்லை; இன்னும், விசுவாசிகளை (போர் செய்ய)த் தூண்டுவீராக!***

(அந்நிஸாஉ அத்தியாயம் வசனம் 84)

2. அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், மனிதர்களில் முகத்தால் மிக்க அழகானவர்களாக மனிதர்களில் அள்ளி வழங்குவதில் மிகுதியானவர்களாக மனிதர்களில் வீரமிக்கவர்களாக இருந்தார்கள், ஒருநாள் இரவு நேரத்தில் மதீனா வாசிகள் (ஒரு சப்தத்தைக் கேட்டுவிட்டு) திண்ணமாக திடுக்கமடைந்து அச்சப்தம் வந்த பகுதிக்கு ஜனங்கள் செல்லத் தொடங்கினார்கள்,

அப்போது அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், அவர்களுக்கு முன்னதாக சப்தம் வந்த பகுதிக்கு முந்திச் சென்று விட்டு திரும்பிக் கொண்டிருந்த நிலையில் அவர்களைச் சந்திக்கிறார்கள்.

மற்றுமொரு அறிவிப்பில்: அவர்களோ செய்தியைத் தெரிந்து அதற்கு பரிகாரம் செய்துவிட்டு அபூதல்ஹாவின் குதிரையின் மீது அது அமருமிடத்தில் எதுவும் விரிக்கப்படாத நிலையில் இருக்க அவர்கள் இருந்தவாறு "அச்சமற்றுத் திரும்பிச் செல்லுங்கள்! (அச்சமற்று திரும்பிச் செல்லுங்கள்!) என்று கூறினார்கள் (அறிவிப்பாளராகிய) அவர் "அக்குதிரை மிகுந்து விரைந்து செல்லக்கூடியதாக நாங்கள் பெற்றோம், அல்லது நிச்சயமாக அது

விரைவுடையதாக இருந்தது, (ஆனால் அதற்கு முன்பு அது) நிதானமாக செல்லக்கூடியதாக இருந்தது" என்று கூறுகிறார்.

3. பராஉ என்பவரிடம் ஒர் ஆடவர் வந்து, "அபூ இமாராவே! ஹுனைன் நாளின் போது நீங்கள் (எதிரிகளைக் கண்டுவிட்டு பின்வாங்கி) புறமுதுகிட்டுச் செல்பவர்களாக இருந்தீர்களா? என்று கேட்டார், அ(தற்க)வர் அல்லாஹ்வின் தூதர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் புறமுதுகிட்டுச் செல்லவில்லை என்று அவர்களைப் பற்றி நான் சாட்சி கூறுகிறேன், என்றாலும் மனிதர்களில் துரிதமாகச் செல்லக்கூடியவர்கள் சென்று கொண்டிருந்தனர், ஹவாஜின் கூட்டத்தைச் சேர்ந்த இவ்வகையினருக்கு கைசேதத்தை ஏற்படுத்தி விட்டனர், இவர்களோ, அம்பெறியும் கூட்டத்தினராக இருந்தனர், ஆகவே அதிகமான வெட்டுக் கிளிகள் (ஒரே சமயத்தில்) புறப்பட்டு வருதைப் போன்று கூட்டாக அம்புகளால் அவர்கள் எய்தார்கள்; ஆயினும் அவர்கள் தோற்றுவிட்டார்கள்,

பின்னர் அக்கூட்டத்தினர் அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்தடைந்தனர், அபூஸுஃப்யான் பின் அல்ஹாரிஸ் என்பவரோ, அவர்களின் கோவேறு கழுதையின் கடிவாளத்தை பிடித்துக் கொண்டிருந்தார், பின்னர் அவர்கள் வாகனத்திலிருந்து கீழே இறங்கி, பிரார்த்தனையும் செய்து (அல்லாஹ்விடம்) உதவியையும் வேண்டிவிட்டு "நானே, நபி, பொய் இல்லை! நான் அப்துல் முத்தலிபின் மகனாராவேன், யா அல்லாஹ்! உனது உதவியை இறக்குவாயாக! என்றும் அவர்கள் சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

இதனை புகாரீ மற்றும் முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

அல்லாஹ்வின் மீது சத்தியமாக! போர் உச்சமடைந்து விடும் பொழுது (நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களைக் கொண்டு பாதுகாத்துக் கொள்பவர்களாக நாங்கள் இருந்தோம், நிச்சயமாக அன்றைய தினத்தில் ஸஹாபாக்கள் அனைவரையும்விட நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்தான் மிகப்பெரிய வீரராக இருந்தார்கள் என்று பராஉ கூறுகிறார்.

புகாரீ மற்றும் முஸ்லிம் இதனைப் பதிவு செய்துள்ளனர்.

4. அலி ரளியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவித்துக் கூறுகிறார்கள்: பத்ரு நாளன்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைக் கொண்டு (எங்களை) நாங்கள் காத்துக் கொள்பவர்களாக என்னை நான் கண்டேன், அவர்கள் தான் எங்களில் எதிரிகளுக்கு மிகச் சமீபமாக இருந்தனர், அந்நாளின் போது போர் செய்வதில் மனிதர்களிலெல்லாம் மிகக்

கடுமையானவர்களாகவும் அவர்கள் இருந்தனர்.

இதன் அறிவிப்புத்தொடர் ஹஸன் தரத்தையுடையதாகும் என ஷரஹுஸ் ஸுன்னாவின் ஆய்வாளர் கூறினார்.

5. ஜாபிர் ரளியல்லாஹு அன்ஹுமா அறிவித்துக் கூறுகிறார்கள்: நிச்சயமாக நாங்கள் பள்ளம் பறித்துக் கொண்டிருந்தோம், பலம் வாய்ந்த பாறை ஒன்று குறுக்கிட்டது (எங்களால் அதை உடைக்க முடியாது, அங்கிருந்தவர்கள்) நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்தடைந்தனர்.

நபித்தோழர்கள் அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் பலம் வாய்ந்த பாறை எங்களுக்குக் குறுக்கிட்டுவிட்டது.

அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்: நான் இறங்குகிறேன். அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எழுந்து நிற்கிறார்கள், அவர்களின் வயிரோ பசிக் கொடுமையால் கல்லால் கட்டப்பட்டதாக இருந்தது (அந்நிலையில்) அவர்கள் சம்மட்டியை எடுத்து பாறையின் மீது அடிக்கிறார்கள், அது தூள் தூளாகிவிடுகிறது.

இச்சம்பவம் முழுவதும் புகாரீ மற்றும் முஸ்லிமில் உள்ளது.

## அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களின் கருணை

1. உயர்ந்தோனாகிய அல்லாஹ் கூறுகிறான் :

وَمَا أَرْسَلْنَاكَ إِلَّا رَحْمَةً لِّلْعَالَمِينَ

*“அகிலத்தாருக்கு அருளாகவே அன்றி உம்மை நாம் அனுப்ப வில்லை.”* (அல்அன்பியா அத்தியாயம் வசனம் 107)

2. மேலும், “அருளாக நான் அனுப்பப்பட்டுள்ளேன்” என ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

இதனை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

3. மேலும், “நிச்சயமாக நான் அன்பளிப்புச் செய்யப்பட்ட அருளேதான்” என ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

4. மேலும், “மனிதர்களுக்கு இரக்கம் - கருணை செய்யாதவருக்கு அல்லாஹ்

அருள் செய்யமாட்டான்" என ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

புகாரீ மற்றும் முஸ்லிம் இதனைப் பதிவு செய்துள்ளனர்.

5. மேலும், "துர்பாக்கியனிடமிருந்தல்லாது அருள் பறிக்கப்படமாட்டாது" என ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

திர்மிதி மற்றும் அவரல்லாதோர் இதனைப் பதிவு செய்து அர்னாஊத் அதை ஹஸன் தரத்தை உடையதெனக் கூறினார்.

6. அருள் செய்பவர்கள் அவர்களுக்கு பரகத்துகளை நல்குபவன் மற்றும் உயர்ந்தோனாகிய அளவற்ற அருளாளன் அருள் செய்வான், பூமியிலுள் ளோருக்கு நீங்கள் கருணை செய்யுங்கள், வானத்தின் மீதிருப்பவன் (அவனே அல்லாஹ்) உங்களுக்கு அருள் செய்வான்.

அஹ்மது மற்றும் அவரல்லாதோர் இதனைப் பதிவு செய்து அல்பானீ மற்றும் அர்னாஊத் இதனை ஸஹீஹ் எனத் தெளிவு செய்துள்ளனர்.

7. அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் அக்ர:ஃபின் ஹாபிஸ் அத்தமீமீ இருக்க அவர்கள் ஹஸன் பின் அலியை முத்தமிட்டனர், அப்போது அக்ர:ஃ, "நிச்சயமாக என்னிடம் பத்து மக்கள் இருக்கிறார்கள் அவர்களிலிருந்து எந்த ஒருவரையும் நான் முத்தமிட்டதில்லை என்று கூறினார். (அதைக் கேட்டுவிட்ட) அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், அவரின்பால் பார்த்துவிட்டு பின்னர் "அருள் செய்யாதவர் அருள் செய்யப்படமாட்டார்" என்று கூறினார்கள் என்று அபூஹுரைரா ரளியல்லாஹு அன்ஹு அறிவித்துக் கூறுகிறார்கள்.

புகாரீ மற்றும் முஸ்லிம் இதனைப் பதிவு செய்துள்ளார்கள்.

8. கிராமத்துவாசி ஒருவர் அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்தடைந்து "நிச்சயமாக நீங்கள் சிறார்களை முத்தமிடுகிறீர்கள், நாங்களோ முத்தமிடுவதில்லை!" என்று கூறினார், அதற்கு அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "உம்முடைய இதயத்திலிருந்து அருளை அல்லாஹ் பிடிங்கிக் கொண்டதற்கு (அதை உம் இதயத்தில் உருவாக்க) நான் சக்தி பெறமாட்டேன்" என்று கூறினார்கள் என ஆயிஷா ரளியல்லாஹு அன்ஹா அவர்கள் அறிவித்துக் கூறுகிறார்கள்.

9. ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கிருபையுடையவர்களாக

இருந்தார்கள், அவர்கள் வாக்களித்த எந்த ஒருவரும் அவர்களிடம் வருவதில்லை, அவர்களிடம் அவர்கள் வாக்களித்தது இருக்குமானால் அதை அவர்கள் அவருக்கு நிறைவேற்றி வைத்தே தவிர.

ஹஸன் தரத்தையுடையதாகும் அதபுல் முப்ரதில் புகாரீ இதனைப் பதிவு செய்துள்ளார்கள்.

10. அனஸ் பின் மாலிக் ரளியல்லாஹு அன்ஹு அறிவித்துக் கூறுகிறார்கள் குடும்பத்திலுள்ள சிறாருடன் மிக்க (இரக்கம்) கொண்ட கிருபையுடையவர்களாக அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை விட மற்ற எவரையும் நான் கண்டதில்லை.

இதனை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

## மிருகங்கள் மீது அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களுடைய இரக்கம்

1. அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அதன் வயிறு முதுகோடு ஒட்டிவிட்ட ஒரு ஒட்டகத்திற்கருகில் சென்றனர், அப்போது, "வாய்பேசாத இம்மிருகங்களின் விஷயத்தில் அல்லாஹ்வை நீங்கள் பயந்து கொள்ளுங்கள்; சீரானவையாக இருக்க அவற்றின் மீது சவாரி செய்யுங்கள் அவை சீரானவையாக இருக்க அவற்றை உண்ணுங்கள்" என்று கூறினார்கள் என ஸுஹைல் பின் ஹன்ழலா அறிவித்துக் கூறுகிறார்.

அபூதாவூது இதனைப் பதிவு செய்து அதன் அறிவிப்புத்தொடர் ஹஸன் என அரனாஊத் கூறியும் உள்ளார்.

2. அப்துல்லாஹ் தன் தந்தை தனக்கு அறிவித்ததாக அறிவித்துக் கூறுகிறார்: அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் ஒரு பயணத்தில் நாங்கள் இருந்தோம், அப்போது அவர்கள் தங்களை தேவைக்காகச் சென்றிருந்தார்கள் சிட்டுக் குருவிக்கு ஒப்பான ஒரு பறவையை அதனுடன் இரு குஞ்சுகள் இருக்க நாங்கள் கண்டு விட்டோம்;

அப்போதே அதனுடைய இரு குஞ்சுகளையும் நாங்கள் (பிடித்து) எடுத்துக் கொண்டோம்; சிட்டுக் குருவிக்கு ஒப்பான அப்பறவை வந்து (வட்டமிட்டுப்) பறக்கத் தொடங்கியது; பின்னர் அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் (திரும்பி) வந்தடைந்தபோது "இதை இதன் (குஞ்சுகளான) பிள்ளைகள் மூலம் வேதனைப்படுத்தியவர் யார்? அதன் பிள்ளை(குஞ்சு)களை அதற்குத் திருப்பிக் கொடுத்து விடுங்கள்" என்று கூறினார்கள்.

இன்னும், "நாங்கள் நெருப்பால் அதை கரித்துவிட்ட எறும்புகளின் ஊரை அவர்கள் கண்டுவிட்டு, இதை(ப் பொசுக்கி)க் கரித்து விட்டவர் யார்? என்று கேட்டார்கள், (அதற்கு) நாங்கள்தான் என்று கூறினோம் அ(தற்க) வர்களை "நெருப்பால் தண்டனை செய்வது நெருப்பின் இரட்சகனுக்கல்லாது (மற்றொருவருக்கும்) தகுமானதல்ல (செய்யக்கூடாது)" என்று கூறினார்கள்.

இதை அஹ்மது மற்றும் அவரல்லாதோர் பதிவு செய்து அர்னாஊத், அதன் அறிவிப்புத் தொடர் ஸஹீஹ் எனக் கூறியுள்ளார்.

3. ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பூனைக்கு (அது தண்ணீர் அருந்துவதற்காக) பாத்திரத்தைச் சாய்த்துக் கொடுப்பார்கள், அப்போது, அது குடிக்கும்; பின்னர், (அது வாய்வைத்துக் குடித்த) அதன் மிச்சத்தைக் கொண்டு வுளூஉ செய்வார்கள்.

இது ஸஹீஹ் ஹதீஸாகும், தப்ரானீ இதனைப் பதிவு செய்துள்ளார்கள்.

4. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: நிச்சயமாக அல்லாஹ் ஒவ்வொரு வஸ்துவின் மீதும் கிருபை செய்வதை எழுதி இருக்கிறான், ஆகவே (மார்க்கச் சட்டத்தின் படி பழிக்குப்பழி வாங்க எவரையாவது) நீங்கள் கொலை செய்ய நேரிட்டால் கொல்லப்படுவோருக்கு கிருபை செய்யுங்கள், இன்னும் (உங்களுக்கு உண்ண அனுமதிக்கப்பட்ட எந்தப் பிராணியையாவது) நீங்கள் அறுத்தால் அறுக்கப்படுவதற்கு (அதைச் சித்தரவதை செய்யாது கத்தியை கூர்மையாக்கிக் கொண்டு முறையாக அறுத்து) கிருபை செய்யுங்கள், (உங்களில் ஒருவர் அறுப்பதற்கு முன்பு) அவருடைய (கத்தியான) அறுக்கும் சாதனத்தை நன்றாகத் தீட்டிக் கொள்ளவும், (அறுத்தபின்) அவரால் அறுக்கப்பட்டதை (நன்றாக உயிர் பிரயும் வரை) ஓய்வு பெறச்செய்யவும்.

இதனை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

5. "தன் காலை ஒரு ஆட்டின் மேல் பகுதியின் மீது வைத்துக் கொண்டவராக அவர் தன் கத்தியை தீட்டிக் கொண்டிருந்த ஒரு மனிதருக்கு அருகாமையில் அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கடந்தார்கள் அ(ந்த ஆடான)து தன் பார்வையால் அவரை கவனித்துக் கொண்டிருந்தது, அப்போது (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள், அதற்கு இரு மரணங்களை மரணிக்கச் செய்ய நாடுகிறீரா? அதை நீர் படுக்க வைக்குமுன் உம்முடைய கத்தியை நன்கு தீட்டிக் கொண்டிருக்கக் கூடாதா? என்று கூறினார்கள்.

அறிவிப்பவர் இப்னு அப்பாஸ் ரளியல்லாஹு அன்ஹுமா

ஹாகிம் இதனைப் பதிவு செய்து, புகாரீ மற்றும் முஸ்லிம் அவர்களின் நிபந்தனைக்கொப்ப ஸஹீஹ் ஆகும் என்றும் கூறினார்கள், அதற்கு தஹபீ ஒப்புதல் தெரிவித்துள்ளார்கள்.

6. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: ஒரு பூனையில் அது இறப்பெய்தும் வரை அடைத்து வைத்திருந்த ஒரு பெண்ணானவள் தண்டிக்கப்பட்டாள் அதன் காரணமாக அவள் நரகில் நுழைந்தாள் அதை அவள் அடைத்திருந்தபோது அவள் அதற்கு உண்ணவோ பருகவோ கொடுக்கவில்லை, பூமியிலுள்ள பூச்சிகளை அது தின்னுவதற்காக அதை அவள் (அவிழ்த்து) விடவுமில்லை.

இதனை புகாரீ பதிவு செய்துள்ளார்கள்.

## அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களுடைய நீதியிலிருந்து

1. உயர்ந்தோனாகிய அல்லாஹ் கூறுகிறான்:

إِنَّ اللهَ يَأْمُرُ بِالْعَدْلِ وَالإِحْسَانِ

*“நிச்சயமாக அல்லாஹ், நீதி செலுத்துமாறும் நன்மை செய்யுமாறும் கட்டளையிடுகிறான்.”*

அந்நஹ்ல் அத்தியாயம் 90வது வசனத்தின் ஒரு பகுதி

2. மேலும், உயர்ந்தோனாகிய அல்லாஹ் கூறுகிறான்:

وَأُمِرْتُ لِأَعْدِلَ بَيْنَكُمُ

*“உங்களுக்கிடையில் நீதமாகவே தீர்ப்பளிக்குமாறு நான் கட்டளையிடப்பட்டுள்ளேன்.”*

அஷ்ஷூரா அத்தியாயம் 15வது வசனத்திலிருந்து ஒரு பகுதி.

3. ஆயிஷா ரளியல்லாஹு அன்ஹா அவர்கள் அறிவித்துக் கூறுகிறார்கள்: நிச்சயமாக குறைஷியர்கள் மக்ஜூமிய்யாவைச் சேர்ந்த திருடிவிட்ட ஒரு பெண்ணின் காரியம் அவர்களுக்கு மிக முக்கியமானதாக ஆகிவிட்டது “அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம்

அவள் விஷயத்தில் பேசுபவர் எவர்? எனக் கேட்டார்கள், (அதற்கவர்களில் சிலர்) "அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மிகுந்த விருப்பத்திற்குரியவரான உஸாமா பின் ஜைதைத் தவிர மற்றெவர் துணிச்சலுடையவர்? எனக் கூறினார்கள், (அதன்படி உஸாமா பின் ஜைதுவிடம் பேசுமாறு வேண்டினர்)

ஆகவே, அவர்களிடம் (இதுபற்றி) உஸாமா பேசினார்கள், (அதைச் செவியேற்ற) அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "அல்லாஹ்வின் தண்டனைகளிலுள்ள ஒரு தண்டனையில் பரிந்துரைக்கிறீரா? என்று கூறிவிட்டுப் பின்னர் எழுந்து பிரசங்கம் செய்யத் தொடங்கிப் பின்னர், "உங்களுக்கு முன்னிருந்தோர் அழிந்தெல்லாம் நிச்சயமாக அவர்கள் அவர்களில் கவுரவமானவர் திருடிவிடும் பொழுது அவரை அவர்கள் விட்டுவிடுவார்கள், இன்னும் அவர்களில் கவ்ரவமில் லாதவர் திருடிவிடும் பொழுது அவருக்குத் தண்டனையை நிறைவேற்றி விடுவார்கள். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! முஹம்மதின் மகள் பாத்திமா திருடிவிட்டாலும் திண்ணமாக அவருடைய கையை நான் துண்டித்து விடுவேன்" என்று கூறினார்கள்,

(அதன்) பின்னர் (அவள் கையைத் துண்டித்துவிடுமாறு) அவர்கள் கட்டளையிட்டார்கள், அவளின் கை துண்டிக்கப்பட்டு விட்டது ஆயிஷா ரளியல்லாஹு அன்ஹா அவர்கள் கூறுகிறார்கள்: (அதன்) பிறகு அ(ப் பெண்ணான)வர் தன்னுடைய தவ்பாவை அழகானதாக ஆக்கிக் கொண்டார் (செய்த குற்றத்தின்பால் அவர் திரும்பவே இல்லை) திருமணமும் செய்து கொண்டார் அதற்குப் பிறகும் (என்னிடம்) வருபவராக இருந்தார். அவரின் தேவைபற்றி அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் உயர்த்துபவளாக (எடுத்துச் சொல்பவளாக) இருந்தேன்.

இதனை புகாரீ மற்றும் முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

## நபி ﷺ அவர்களுடைய ஈகைத் தன்மையிலிருந்து சில

1. நன்மைகளை அள்ளி வழங்கும் மனிதராக அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இருந்தார்கள், ரமளான் மாதத்தில் அது முடியும் வரை மிகுந்த கொடை வள்ளலாகவும் இருந்தார்கள், (அம்மாதத்தில்) ஜிப்ரீல் (மலக்கு) அவர்களிடம் வந்தடைந்து குர்ஆனை அவர்களுக்கு(த் திரும்பத் திரும்ப ஓதுமாறு) எடுத்துக் காட்டுபவராக இருந்தார் ஜிப்ரீல் அவர்களைச் சந்தித்துவிடும் பொழுது தொடர்ந்து வீசும் காற்றைவிட

நன்மையானவற்றில் வள்ளலாக அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் இருப்பார்கள்.

இதனை புகாரீ பதிவு செய்துள்ளார்கள்.

2. அனஸ் ரளியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவித்துக் கூறுகிறார்கள்: நிச்சயமாக அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், இஸ்லாத்தின் அடிப்படையில் (எவராலும்) எதையும் அவர்களிடம் கேட்கப்படுவதில்லை அதை அவர்கள் கொடுத்தே தவிர, (அறிவிப்பாளராகிய) அவர் கூறுகிறார்: (ஒரு சமயம்) ஓர் ஆடவர் அவர்களிடம் வந்தடைந்து (கேட்டார்) தர்ம ஆடுகளிலிருந்து இரு மலைகளுக்கிடையே இருந்த அனேக ஆடுகளை(க் கொடுக்குமாறு அவரின் வேண்டுகோளுக் கிணங்க) அவர் வகைக்கு கட்டளையிட்டார்கள் (அறிவிப்பாளராகிய) அவர் கூறுகிறார்: (அதைப் பெற்றுக் கொண்ட) அவர் தன் கூட்டத்தாரிடம் திரும்பிச் சென்று, "என் கூட்டத்தாரே! இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ளுங்கள்! ஏனெனில் நிச்சயமாக முஹம்மது (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள், வறுமையை பயந்து கொள்ளாதவரின் அன்பளிப்பாக (ஆடுகளை) வழங்குகிறார்" என்று கூறினார்.

இதனை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

3. அனஸ் ரளியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள்.

நிச்சயமாக ஓர் ஆடவர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் (தன் தேவையைச் சொல்லிக்) கேட்டார். இருமலைகளுக் கிடையில் இருந்த ஆடுகளை அவருக்கு அவர்கள் வழங்கினார்கள். (அதைப் பெற்றுக் கொண்ட) அவர் தன் கூட்டத்தாரிடம் வந்தடைந்து, "என் கூட்டத்தாரே! இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ளுங்கள், ஏனெனில் நிச்சயமாக முஹம்மது (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் வறுமையை அவர் பயந்து கொள்ளாதவராக அன்பளிப்பை வழங்குகிறார்" என்று கூறினார் இவ்வுலக (ஆதாய)த்தை (விரும்பி) ஓர் மனிதர் அவர்களிடம் வருபவராக இருப்பினும் மாலைப் பொழுதை அவர் அடைவதற்கு முன்பாக (நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களுடைய மார்க்கம் அவருக்கு மிக்க விருப்பமானதாக, இவ்வுலகம் மற்றும் இவ்வுலகத்தில் உள்ளவற்றை விட விலை மதிக்க முடியாததாக ஆகிவிடும்.

இதனை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்

4. இப்னு ஷிஹாப் அறிவித்துக் கூறுகிறார்

அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வெற்றிப் போரை நடத்தி மக்காவை வெற்றி கண்டுவிட்டுப் பின்னர், அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் முஸ்லிம்களில் தங்களுடனிருந்தவர்களோடு புறப்பட்டு (ஹுனைனை அடைந்து) ஹுனைனில் அவர்கள் போர் செய்தார்கள். அல்லாஹ் தன்னுடைய மார்க்கம் மற்றும் முஸ்லிம்களுக்கு வெற்றியை நல்கினான். அந்நாளின் போது அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஸஃப்வான் பின் உமய்யா என்பவருக்கு கால்நடையிலிருந்து நூறை, பின்னர் நூறை, பின்னர் நூறை வழங்கினார்கள், இப்னு ஷிஹாப் கூறுகிறார்: "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எனக்குக் கொடுக்க இருந்ததை எனக்குக் கொடுத்துக் கொண்டேயிருந்தார்கள். இன்னும் நிச்சயமாக அவர்கள், மனிதர்களில் மிக்க வெறுப்புடையவர்களாக எனக்கு இருந்தார்கள். (ஆனால்) தொடர்ந்து அவர்கள் எனக்குக் கொடுத்துக் கொண்டேயிருக்க முடிவாக நிச்சயமாக அவர்கள் மனிதர்களில் எனக்கு மிக்க விருப்பமானவர்களாயினர்" என்று நிச்சயமாக ஸஃப்வான் கூறினார் என்று ஸயீது பின் அல்முஸய்யிப் எனக்குத் தெரிவித்தார்.

5. ஹுனைன் போரிலிருந்து அல்லாஹவின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், திரும்பிக் கொண்டிருந்தபொழுது கிராம வாசிகள் அவர்களிடம் கேட்டுக் கொண்டே தொடர்ந்தனர், (இவர்களின் நெருக் கடியினால்) அவர்களை ஒரு கிளையுள்ள முள்ளு மரத்தின்பால் ஒதுங்கச் செய்துவிட்டனர். அவர்களுடைய வாகனத்தின் மீது அவர்கள் இருக்கவே அவர்களுடைய மேலங்கியை உராய்ந்து எடுத்தும் கொள்கின்றனர். அ(ப்போத)வர்கள், என் மேலங்கியை எனக்குத் திருப்பிக் கொடுத்து விடுங்கள்! என் மீது கருமித் தனத்தை நீங்கள் அஞ்சுகிறீர்களா? இந்த முள்ளு மரத்தின் எண்ணிக்கை அளவு என்னிடம் கால்நடையிருப்பின் அதை உங்களுக்கு மத்தியில் பங்கீடு செய்து விடுவேன் (அதன்) பின்னர் கஞ்சனாகவோ, கோழையாகவோ, பொய்யனாகவோ என்னை நீங்கள் (காணப்) பெறமாட்டீர்கள்" என்று கூறினார்கள்.

புகாரீ இதனைப் பதிவு செய்துள்ளார்கள்.

6. ஜாபிர் பின் அப்துல்லாஹ்விடம் பிரயாணத்தில் களைத்து விட்ட அவருக் கிருந்த ஒரு ஒட்டகத்தை அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வாங்கி விடுகிறார்கள். இன்னின்னாவறுள்ள வெள்ளிக் காசுக்கு அதை அவர்களுக்கு அவர் விற்றுவிடுகிறார், (பயணத்திலிருந்து

திரும்பி) அதன் கிரயத்தை கேட்டு வாங்க அவர் வந்த போது, அவருக்கு அவர்கள் கிரயத்தையும் ஒட்டகத்தையும் சேர்த்துக் கொடுத்து விட்டார்கள்.

புகாரீ மற்றும் முஸ்லிம் இதனை ஒருமித்துப் பதிவு செய்துள்ளார்கள்.

## அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களிடத்தில் வெட்கத் தன்மை

1. உயர்ந்தோனாகிய அல்லாஹ் கூறுகிறான்:

يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا لَا تَدْخُلُوا بُيُوتَ النَّبِيِّ إِلَّا أَن يُؤْذَنَ لَكُمْ إِلَى طَعَامٍ غَيْرَ نَاظِرِينَ إِنَاهُ وَلَكِنْ إِذَا دُعِيتُمْ فَادْخُلُوا فَإِذَا طَعِمْتُمْ فَانتَشِرُوا وَلَا مُسْتَأْنِسِينَ لِحَدِيثٍ إِنَّ ذَلِكُمْ كَانَ يُؤْذِي النَّبِيَّ فَيَسْتَحْيِي مِنكُمْ وَاللَّهُ لَا يَسْتَحْيِي مِنَ الْحَقِّ

*“விசுவாசங் கொண்டோரே! உணவின் பால் (அதை) உண்ண உங்களுக்கு அனுமதியளிக்கப் பட்டாலே தவிர அது தயாராவதை எதிர்பார்த்தவர்களாக (முன்னதாகவே) நபியுடைய வீடுகளில் பிரவேசிக்காதீர்கள், எனினும் நீங்கள் அழைக்கப்பட்டால் அப்பொழுது, பிரவேசியுங்கள்; பின்னர் நீங்கள் உணவைப் புசித்து விட்டால் (அங்கிருந்து கொண்டே) பேசுவதில் விருப்பம் கொண்ட வர்களாகவும் ஆகிவிடாது கலைந்து சென்றுவிடுங்கள. நிச்சயமாக இது நபியை நோவினை செய்வதாக இருந்தது; (இதனை உங்களிடம் கூற) அவர் வெட்கப்படுகிறார்; உண்மையைச் சொல்ல அல்லாஹ் வெட்கப்படவும் மாட்டான்”.*

அல்அஹ்ஜாப் அத்தியாயம் வசனம் 53

2. “வீட்டோரத்தில் அமைக்கப்பட்ட அவளுடைய மறைவிடத்தில் உள்ள கன்னிப் பெண்ணை விட அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மிகுந்த வெட்கமுடையவர்களாக இருந்தார்கள். மேலும், அவர்கள் ஒன்றை வெறுப்பார்களானால் அதுபற்றி அவர்களுடைய முகத்தில் நாங்கள் அறிந்து கொள்வோம்”.

இதனை புகாரீ மற்றும் முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

3. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: "வெட்கம் ஈமானில் உள்ளதாகும்" "வெட்கம் அது அனைத்தும் நன்மையாகும்".

இதை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

4. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: வெட்கம் ஈமானில் உள்ளதாகும், ஈமானோ சுவனத்தில் (சேர்க்கக் கூடியதாகும்). கெட்டவையோ, வெறுக்கப்பட்டதில் உள்ளதாகும். வெறுக்கப் பட்டவை நரகத்தில் சேர்க்கும்.

இதனைத் திர்மிதி மற்றும் அவரல்லாதோர் பதிவு செய்து ஹஸன், ஸஹீஹ் ஹதீஸ் எனவும் கூறியுள்ளார்கள்.

5. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: வெட்கம் மற்றும் ஈமான் இவை இரண்டும் முற்றிலும் இணைக்கப்பட்டவையாகும், அவ்விரண்டில் ஒன்று உயர்த்தப்பட்டு விட்டால் மற்றது உயர்ந்து விடும் (இல்லாது போய்விடும்).

இதை ஹாகிம் மற்றும் பைஹகீ பதிவு செய்து அல்பானீ இதன் தரம் ஸஹீஹ் எனக் கூறியுள்ளார்கள்.

6. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: "வெட்கம் நன்மையை அல்லாது மற்றெதையும் கொண்டுவராது.

இதனை புகாரீ மற்றும் முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

7. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள், வெட்கம் மற்றும் அழிவை ஏற்படுத்தும் பேச்சுகளிலிருந்து தூரமாகி இருப்பது ஈமானில் உள்ள இரு கிளைகளாகும். கெட்ட பேச்சும், கபடத்தனமான பேச்சில் மூழ்கிவிடுவதும் வேஷதாரித் தனத்தில் உள்ள இரு கிளைகளாகும் (இதன் கருத்து: வெட்கமும், குறைந்த பேச்சும் ஈமானின் கிளைகளில் உள்ளதாகும், கெட்டதும், பேச்சில் கபடத்தனமாகப் பேசுவதும் வேஷதாரித் தனத்தின் கிளைகளில் உள்ளதாகும்).

இதை அஹ்மது மற்றும் அவரல்லாதவர் பதிவு செய்துள்ளனர். தஹபீ மற்றும் அல்பானீ ஸஹிஹுல் ஜாமிஇல் இதை ஸஹீஹ் தரத்தையுடையதெனக் கூறியுள்ளனர்.

8. யஃலாபின் உமய்யா அறிவித்துக் கூறுகிறார்கள்:

நிச்சயமாக அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்

அவர்கள் திறந்த வெளியில் குளித்துக் கொண்டிருந்த ஓர் ஆடவரைக் கண்டுவிட்டு மிம்பரின் மீது ஏறி அல்லாஹ்வை அவர்கள் புகழ்ந்து மற்றும் போற்றிவிட்டுப் பின்னர், "நிச்சயமாக அல்லாஹ் வெட்கமுடையவன் (மனிதர்களின் குற்றங்களை) மறைக்கின்றவன், வெட்கப்படுவதை மற்றும் மறைத்துக் கொள்வதை விரும்புகிறான்; ஆகவே உங்களில் ஒருவர் குளிக்கும் பொழுது (தன்னுடைய மர்மஸதானத்தை) மறைத்துக் கொள்ளட்டும்" என்று கூறினார்கள்.

அஹ்மது மற்றும் அவரல்லாதவர் இதைப் பதிவு செய்துள்ளனர். மிஷ்காத்தில் அதன் அறிவிப்புத் தொடரை அல்பானீ ஹஸன் எனக் கூறியுள்ளார்கள்.

9. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: "நிச்சயமாக ஒவ்வொரு மார்க்கத்திற்கும் ஒரு குணமுண்டு, இஸ்லாத்தின் நற்குணமோ வெட்கமாகும்".

ஹஸன் தரத்தையுடையதாகும், இப்னுமாஜா இதனைப் பதிவு செய்துள்ளார்கள்.

10. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: "முந்திய நபித்துவ பேச்சுக்களிலிருந்து மனிதர்கள் அடைந்து கொண்டவற்றில் நிச்சயமாக (எஞ்சி) உள்ளதுதான் "நீ வெட்கமில்லாதவனாக இருப்பின் நீ நாடியதை செய்து கொள்!" என்பது

இதை புகாரீ பதிவு செய்துள்ளார்கள்

11. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: "ஈமான் என்பது எழுபதுக்கும் மேற்பட்ட அல்லது அறுபது சொச்சம் கிளை களாகும். ஆகவே அவற்றில் மிகச் சிறந்தது "லா இலாஹ இல்லல்லாஹ்" எனும் கூற்றாகும்; அவற்றில் மிகத் தாழ்ந்தது பாதையிலிருந்து. (மனிதர்களுக்கு இடரு தருபவற்றை) நீக்குவதாகும்; வெட்கமோ, ஈமானில் உள்ள ஒரு கிளையாகும்".

இதை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

12. சாலிம் பின் அப்துல்லாஹ் தன் தந்தை அறிவித்ததாக கூறுகிறார் வெட்கப்படும் விஷயத்தில் தன் சகோதரனை வெட்கம் உனக்கு பெரும் இடரை ஏற்படுத்தி விட்டது என்று கண்டித்து சொல்லக்கூடிய ஒரு ஆடவரை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கடந்து சென்றார்கள் இதை கேட்ட ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அவரை நீ விட்டுவிடு நிச்சயமாக வெட்கம் என்பது ஈமானில் உள்ளதாகும் என்று சொல்லிக் கொண்டிருந்தார்.

இதை புகாரீ மற்றும் முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

13. எந்த விஷயத்தில் கேட்டது சேர்வதில்லை அதன் தரத்தை அது குறைத்தது தவிர எந்த ஒரு காரியத்தில் வெட்கம் இருப்பின் அது அழகானதாகவே இல்லாது இல்லை.

திர்மிதியும் மற்றவர்களும் இதை பதிவு செய்துள்ளார்கள் ஸரக்கு ஸன்னாவில் பரிசிலனையாளர் இதனையும் அறிவிப்புத் தொடர் சரியனதாகும் எனக் கூறியுள்ளார்கள்.

## அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களுடைய ஒழுக்கங்களிலிருந்து (சில)

1. ஒரு சமூகத்தாரின் (வீட்டு) வாயிலை அவர்கள் வந்தடைந்தால் தங்களுடைய முகத்தினால் வாயிலை முன்னோக்க மாட்டார்கள் (வாயிலுக்கு நேராக நிற்கமாட்டார்கள்) எனினும் அதன் வலப்பக்கம் அல்லது இடப்பக்கம் (நிற்பார்கள்). மேலும், அஸ்ஸலாமு அலைக்கும், அஸ்ஸலாமு அலைக்கும் என்று கூறுவார்கள்.

ஸஹீஹான தரத்தையுடைய ஹதீஸாகும் இதை அஹ்மது பதிவு செய்துள்ளார்கள்.

2. தங்களுடைய காரியங்களில் சிலவற்றுக்காக தன் தோழர்களிலிருந்து எவரை யாவது அனுப்பி வைத்தார்களானால், "நற்செய்தி கூறுங்கள்; வெறுப்படையச் செய்யாதீர்கள், எளிதாக்குங்கள்; சிரமப்படுத்தி விடாதீர்கள்" என்று கூறுவார்கள்.

ஸஹீஹான தரத்தை உடையதாகும் அபூதாவூதுத் இதனைப் பதிவு செய்துள்ளார்கள்.

3. அன்பளிப்பை ஏற்பவர்களாக, அதற்குத் தகுந்த வெகுமதியை வழங்குபவர் களாக இருந்தார்கள்.

இதை புகாரீ பதிவு செய்துள்ளார்கள்.

4. "அழகில்லாத பெயரை மாற்றக் கூடியவர்களாக இருந்தார்கள்" ஸஹீஹான தரத்தை உடையதாகும்.

இதனை புகாரீ பதிவு செய்துள்ளார்கள்.

5. நோயாளியை விசாரிக்கச் சென்று அவரிடம் நுழைந்தால், "பரவாயில்லை! அல்லாஹ் நாடினால் (பாவங்களுக்குப்) பரிசுத்தமாகும்" என்று கூறுவார்கள்.

இதை புகாரீ பதிவு செய்துள்ளார்கள்.

6. "அவர்கள் குடித்தால் மூன்று முறை மூச்சு விடுவார்கள்" மேலும், "அது எளிதானதாக, சங்கடத்தை தராததாக, (ஏற்பட இருக்கும் சங்கடத்தை) நீக்கக் கூடியதாக" இருக்கட்டும் என்று கூறுவார்கள்.

ஸஹீஹான தரத்தை உடையதாகும். இதனை இப்னுமாஜா பதிவு செய்துள்ளார்கள்.

7. அவர்கள் நடந்து செல்வார்களானால், அவர்களின் தோழர்கள் அவர்களுக்கு முன்னால் நடந்து செல்வார்கள் அவர்களின் முதுகுப் பகுதியை மலக்குகளுக்காக விட்டு விடுவார்கள்.

(இது) ஸஹீஹான தரத்தையுடையதாகும், இதை இப்னுமாஜா பதிவு செய்துள்ளார்கள்.

8. பைஅத்தில் (மற்றும் அதல்லாதவற்றில்) பெண்களோடு கைலாகு செய்யாத வர்களாக அவர்கள் இருந்தனர்.

(இதன்) தரம் ஹஸன் ஆகும். இதனை அஹ்மது பதிவு செய்துள்ளார்கள்.

9. (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்) தங்களுடைய வலக் கையை, அவர்களுடைய உண்ணுதல் அவர்களுடைய பருகுதல், அவர்களுடைய உளூஉ, அவர்களுடைய ஆடைகள், அவர்களுடைய எடுத்தல், அவர்களுடைய கொடுத்தல் ஆகியவற்றுக்காக, இன்னும் தங்களுடைய இட(க் கையான)தை அவையல்லாதவற்றுக்காக (உபயோகிக்க) ஆக்குபவர்களாக இருந்தார்கள்.

ஸஹீஹான தரத்தையுடையதாகும், இதனை அஹ்மது பதிவு செய்துள்ளார்கள்.

10. (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்) தங்களுடைய குடும்பத் திலுள்ளவர்களில் எவராவது ஒருவர் ஒரு பொய்யைக் கூறிவிட்டதைக் கண்டு பிடித்து விட்டால், அவர் தவ்பா செய்யும்வரை அவரைப் புறக்கணிப்பவர் களாகவே இருந்தனர்.

ஸஹீஹான தரத்தையுடையதாகும் இதனை அஹ்மது பதிவு செய்துள்ளார்கள்.

11. ஆயிஷா ரளியல்லாஹு அன்ஹா அவர்கள் அறிவித்துக் கூறுகிறார்கள்: நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் உள்ளே வர ஓர் மனிதர் அனுமதி கோரினார், "அவருக்கு அனுமதியளியுங்கள் (என்று கூறி விட்டுப் பின்னர்) குடும்பத்தார்களின் மகனில் அவர் கெட்டவர் அல்லது குடும்பத்தார்களின் சகோதரரில் அவர் கெட்டவர்" என்று கூறினார்கள், (பின்னர்) அவர் உள்ளே பிரவேசித்தபோது அவருடன் இதமாகப் பேசினார்கள்.

(அதன் பிறகு) அல்லாஹ்வின் தூதர் அவர்களே! (அவர் உள்ளே வருமுன் அவரைப் பற்றி) நீங்கள் கூறியதையெல்லாம் கூறிவிட்டு (அவரை நேரில் பார்த்தபோது) அவரிடம் இதமாகப் பேசினீர்கள்! என்று அவர்களிடம் நான் கேட்டேன், அ(தற்க)வர்கள், "அல்லாஹ்விடம் தரத்தால் மிகக் கெட்டவன்,

அவனின் கெட்டதை (தீமையை) பயந்து மனிதர்கள் (அவனை) விட்டு விடுகிறார்கள் அல்லது அவனை (முழுமையாக) கைவிட்டு விடுகிறார்களே அவன் தான்" எனக் கூறினார்கள். (அவரைப் பற்றி அவர் அங்கில்லாதிருந்த போது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியதையும் அவர் எதிரில் இருந்தபோது அவருடன் அவர்கள் இதமாகப் பேசியதையும் பற்றி, அவருடைய கூட்டத்தார் இஸ்லாத்தை ஏற்றுக்கொள்ள ஒரு அறிமுகத் தையும் பிணைப்பையும் ஏற்படுத்தச் செய்யும் என்பதற்காக என அறிஞர் பெருமக்கள் கூறுகிறார்கள்).

## அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களுடைய வழிகாட்டல்களிலிருந்து (சில)

1. அவர்களை மகிழ்விக்கும் காரியம் அவர்களை வந்தடைந்தால் "அல்ஹம்து லில்லாஹில்லதீ ஃபி நிஃமதிஹீ ததிம்முஸ் ஸாலிஹாத்" என்று கூறுவார்கள். மேலும், அவர்களுக்கு மகிழ்வைத் தராத காரியம் அவர்களை வந்தடைந்தால் "அல்ஹம்து லில்லாஹி அலா குல்லி ஹால்" என்று கூறுவார்கள்.

இதன் அறிவிப்புத் தொடர் ஸஹீஹ் ஆகும். ஹாகிம் இதனைப் பதிவு செய்துள்ளார்கள்.

2. (உடலில் எங்காவது) சங்கடமிருப்பின் முஆவ்விதாத் (குல்ஹுவல்லாஹு அஹது, குல்அஊது பிரப்பில் பலக், குல்அஊது பிரப்பின்னாஸ் ஆகிய அத்தியாயங்)களை தனக்காக (ஓதி) அதை தங்களின் கையில் ஊதிக் தேய்த்துக் கொள்பவர்களாகவும் இருந்தார்கள்.

இதனை புகாரீ மற்றும் முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

3. அவர்களை மகிழ்விக்கும் ஒரு காரியம் (ஏதாவதொரு செய்தி) அவர்களை வந்தடைந்தால், உயர்ந்தோனாகிய அல்லாஹ்வுக்கு நன்றி செலுத்தும் நிமித்தம் 'ஸஜ்தா'ச் செய்தவர்களாக அவர்கள் பணிந்து விடுவார்கள்.

இதனை அபூதாவூது பதிவு செய்துள்ளார்கள்.

4. ஒரு கூட்டத்தாரைப் பற்றி பயந்தவர்களாக அவர்கள் இருப்பின், "அல்லாஹும்ம இன்னா நஜ்அலுக்க ஃபீ நுஹுரிஹிம், வநஊதுபிக்க மின் ஷுரூரிஹிம்" எனக் கூறுவார்கள்.

ஸஹீஹ் தரத்தையுடையதாகும். அஹ்மது இதனைப் பதிவு செய்துள்ளார்கள்.

5. ஏதாவதொன்று அவர்களுக்கு மனதிடுக்கத்தை ஏற்படுத்தினால் அல்லாஹு

ரப்பீ, அல்லாஹு ரப்பீ லாஷரீக்கலஹு என்று கூறுவார்கள்.

6. ஒரு காரியம் அவர்களை இக்கட்டான நிலைக்கு ஆளாக்கிவிட்டால், யாஹய்யு, "யாகய்யூமு, பிரஹ்மதிக்க அஸ்தகீஸ்" என்று கூறுவார்கள். அறிவிப்புத் தொடர் ஹஸன் ஆகும்.

இதனைத் திர்மிதி பதிவு செய்துள்ளார்கள்.

7. (குல்அஊது பிரப்பில்ஃபலக், குல்அவூது பிரப்பின்னாஸ் ஆகிய) முஅவ்விதத்தான் (அல்லாஹ்விடமிருந்து) இறங்கும் வரை (அவை இரண்டல்லாதவற்றை ஓதி) ஜின் மற்றும் மனிதனின் கண்ணேறுகளிலிருந்து (அல்லாஹ்விடம்) காக்கத் தேடுபவர்களாக இருந்தனர். அவை இறங்கிய பொழுது அவ்விரண்டை எடுத்துக் கொண்டு அவ்விரண்டல்லாதவற்றை விட்டும் விட்டனர்.

8. "அல்லாஹும்ம இன்னீ அஊதுபிக்க மின் ஜஹ்தில் பலாயி, வதர்க்கிஷ் ஷிகாயி, வஸூஇல்களாயி, வஷமாதத்தில் அஃதாயி" என்று கூறி பாதுகாப்பு தேடுபவர்களாக இருந்தார்கள்.

புகாரீ மற்றும் முஸ்லிம் இதைப் பதிவு செய்துள்ளார்கள்.

9. காஃப் அத்தியாயத்தை ஜும்ஆ நாளன்று ஓதுபவர்களாக இருந்தார்கள்.

ஸஹீஹ் அறிவிப்புத் தொடரில் அபூதாவூது இதைப் பதிவு செய்துள்ளார்கள்.

10. போர் செய்தால், "அல்லாஹும்ம அன்த அள்தீ, வ அன்த்த நஸீரி, பிக்க அஹூலு, வபிக்க அஸூலு, வபிக்க உகாத்திலு" எனக் கூறுபவர்களாக இருந்தார்கள்.

ஸஹீஹ் தரத்தையுடையதாகும். இதனை அஹ்மது பதிவு செய்துள்ளார்கள்.

11. "ஸுப்கானக் கல்லாஹும்ம ரப்பீ வபிஹம்திக்க லாஇலாஹ இல்லா அன்த்த அஸ்தக்ஃபிருக்க வஅதூபு இலைக்க" என்று கூறாது தங்களுடைய அமர்விலிருந்து அவர்கள் எழுந்திருக்காதவர்களாக இருந்தனர், மேலும் "எந்த ஒருவரும் தன்னுடைய அமர்விலிருந்து எழுந்திருக்கும் சமயம் அவற்றைக் கூறுவதில்லை, அந்த அமர்வில் அவரிடமிருந்து ஏற்பட்டு விட்டவை பொருத்தருளப்பட்டே தவிர"

ஸஹீஹ் தரத்தையுடையதாகும். ஹாக்கிம் இதனைப் பதிவு செய்துள்ளார்கள்.

12. அநேக ஆடம்பரங்களை விட்டும் எங்களைத் தடுப்பவர்களாக அவர்கள் இருந்தார்கள். அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், சில சமயங்களில் காலணி இல்லாது நடக்குமாறு எங்களுக்குக்

கட்டளையிடுவார்கள்.

இதனை அபூதாவூது பதிவு செய்து, மிஷ்காத்தில் அல்பானீ ஸஹீஹ் தரத்தையுடையதெனவும் கூறியுள்ளார்கள்.

13. எதைக் கூறி அவர்கள் பிரார்த்தனை செய்வார்களோ அதில் "அல்லாஹும்ம ரப்பனா ஆத்தினா ஃபித்துன்யா ஹஸனத்தன், வஃபில் ஆகிரத்தி ஹஸனத்தன் வகினா அதாபன்னார்" என்பது மிக்க அதிகமாக இருந்தது

இதை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

## அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் நகைச் சுவையாகப் பேசியவற்றிலிருந்து (சில)

1. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எங்களுடன் கலந்திருப்பவர்களாக இருந்தார்கள், முடிவாக (ஒருநாள்) என்னுடைய சகோதரனிடம், அவன் விளையாடி வந்த (சிட்டுக் குருவிக்கு ஒப்பான) சிவந்த சுண்டுள்ள குருவிப் பறவை அவனிடமிருந்து, இறபெய்தி விட்டது. (அதன் பிறகு அவர்கள்) அபாஉமைரே! சிவந்த சுண்டுள்ள குருவிப் பறவை என்ன செய்தது? என்று கேட்பார்கள் என அனஸ் ரளியல்லாஹு அவர்கள் அறிவித்துக் கூறுகிறார்கள்.

இதனை புகாரீ மற்றும் முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

2. அபூஹுரைரா ரளியல்லாஹு அன்ஹு அவர்கள் அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களே! நிச்சயமாக நீங்கள் எங்களோடு கேலி பேசி சிரிக்க வைக்கிறீர்கள் என்று கூறினார், அ(தற்க)வர்கள் "(கேலியாக இருப்பினும்) உண்மையல்லாததை நிச்சயமாக நான் கூறமாட்டேன்" என்று கூறினார்கள்.

ஹஸன், இதனை திர்மிதி அவர்கள் பதிவு செய்துள்ளார்கள்.

3. நிச்சயமாக ஓர் மனிதர் தன் வாகனத்தின் மீது ஏற்றிவிடுமாறு அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வேண்டினார், அ(தற்க)வர்கள் "நிச்சயமாக நான் ஒட்டகக் குட்டியின் மீது ஏற்றிவிடுவேன்" என்று கூறினார்கள். அ(தற்க)வர், "ஒட்டகக் குட்டியை வைத்துக் கொண்டு நான் என்ன செய்வேன் என்று கேட்டார்?" (அதற்கு) அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "ஒட்டகம் ஒட்டகக்குட்டியை அல்லாது ஈன்றுவதில்லை" என்று கூறினார்கள்.

அறிவிப்பவர் அனஸ் ரளியல்லாஹு அன்ஹு

அபூதாவூது மற்றும் திர்மிதி இதனை ஸஹீஹான அறிவிப்புத் தொடரில் பதிவு செய்துள்ளார்கள்.

4. நிச்சயமாக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தன்னை "இரு காதுகள் உடையவரே" எனக் கூறுவார்கள் என அனஸ் ரளியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள்.

5. கிராமப்பகுதியிலுள்ள ஓர் ஆடவர் - ஜாஹிர் பின் ஹராம் என அவருக்குப் பெயர் இருந்தது. கிராமத்திலிருந்து நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு அன்பளிப்புகளை கொடுப்பவராகவும் இருந்தார், அவர் (எங்காவது) புறப்பட்டுச் செல்ல இருக்கும் பொழுது அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அவரை தயார் செய்து அனுப்புவார்கள். (அது சமயம்) நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "நிச்சயமாக ஜாஹிர் நம்முடைய கிராமத்தவர், நாமோ, அதன் நகர்புறத்தவர்கள்" என்று கூறுவார்கள். அழகில்லாத தோற்றமுடையவராக அவர் இருக்கவே, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அவரை விரும்புபவர்களாக இருந்தார்கள். ஒரு நாளன்று அவர் தன்னுடைய சாதனங்களை விற்றுக் கொணடிருக்க, அவர் பார்க்காதவாறு அவருக்குப் பின்னாலிருந்து அவரைக் கட்டி அணைத்துக் கொண்டார்கள்.

ஜாஹிர் பின் ஹராம்: யார் இவர்? என்னை விட்டுவிடுங்கள்.

அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்: இந்த அடிமையை வாங்குபவர் எவரோ?

ஜாஹிர்பின் ஹராம் அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம்: அப்படியென்றால் அல்லாஹ்வின் மீது சத்தியமாக! என்னை விலையில்லாதவராகப் பெறுவீர்கள் (என்னை எவரும் விலை கொடுத்து வாங்க மாட்டார்கள்).

அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்: என்றாலும் அல்லாஹ்விடம் நீர் விலை மதிப்பில்லாதவரல்லர், அல்லது 'என்றாலும் அல்லாஹ்விடம் நீர் மிகுந்த விலை உள்ளவர்', என்று கூறினார்கள்.

அஹ்மது மற்றும் திர்மிதி இதனைப் பதிவு செய்துள்ளார்கள், இஸாபாவில் அல்ஹாபிள் அவர்கள் ஸஹீஹ் தரத்தையுடையதெனக் கூறியுள்ளார்கள்.

மற்றவரின் தரத்தைக் குறைத்து விடாமலோ, அல்லது அவரை இழிவிற்கு

ஆளாக்காமலோ, அவரை மகிழ்விப்பதற்குப் பெயரே, மார்க்கத்தில் அனுமதிக் கப்பட்ட நகைச் சுவையாகும். இதற்கு மாறாக பொய்யாகவோ, அல்லது அளவுக்கு மீறியோ, அல்லது எப்போதும் மற்றவரோடு நகைச் சுவையாகப் பேசுவது மார்க்கத்தில் தடை செய்யப்பட்டதாகும். ஏனெனில் எப்போதும் ஒருவரோடு அவ்வாறு செய்வது அளவுக்கு அதிகமான சிரிப்பு மற்றும் இதயத்தில் இரக்கமற்ற தன்மையை ஏற்படுத்தி, மனதில் குரோதங்களையும் உருவாக்கி மதிப்பு மரியாதையைக் கெடுக்கவும் செய்கிறது.

நகைச்சுவையின் விளக்கம் பற்றி: "முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் குணாதிசயங்கள்" என்ற நூலின் ஆய்வாளர் அஜ்ஜஅபீ இதனைக் கூறியுள்ளார்கள்.

## அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறிய கவிதை

1. உயர்ந்தோனாகிய அல்லாஹ் கூறுகிறான்:

وَمَا عَلَّمْنَاهُ الشِّعْرَ وَمَا يَنبَغِي لَهُ

***"(நம்முடைய தூதராகிய) அவருக்கு நாம் கவிதையை (இயற்ற)க் கற்றுக்கொடுக்கவில்லை; அது அவருக்கு அவசியமானதுமல்ல."***

(யாசீன் அத்தியாயம் வசனம் 69ல் ஒருபகுதி)

2. அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், கவிதையிலிருந்து எதையாவது எடுத்துக் கூறுபவர்களாக இருந்தார்களா? என்று ஆயிஷா ரளியல்லாஹு அன்ஹா அவர்களிடம் நான் கேட்டேன், அ(தற்க)வர்கள், "இப்னு ரவாஹா என்பவருடைய கவியை எடுத்துக் கூறுபவர்களாக இருந்தார்கள், "உம்மிடமில்லாத செய்திகளை உமக்குக் கொண்டுவரும்" என்ற கூற்றை அநேகமாகக் கூறுவார்கள்" எனக் கூறினார்கள் என்று ஷுரைஹ் அறிவித்துக் கூறுகிறார்.

இதனைத் திர்மிதி அவர்கள் பதிவு செய்து ஹஸன் ஸஹீஹ் தரத்தையுடைய ஹதீஸ் எனவும் கூறியுள்ளார்கள்.

3. அபூஹுரைரா ரளியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவித்துக் கூறுகிறார்கள்: நிச்சயமாக மிக்க உண்மையான வார்த்தை லபீது எனும் கவிஞர் அதைக் கூறிவிட்ட வார்த்தையாகும்: "அல்லாஹ்வைத் தவிர உள்ள அனைத்துப் பொருட்களும் அழிந்துவிடக் கூடியதாகும்" (இதைச் செவியேற்ற

மாத்திரத்தில்) உமய்யா பின் அஸ்ஸலித் என்பவர் இஸ்லாத்தைத் தழுவ எத்தனித்து விட்டார்.

இதனை புகாரீ மற்றும் முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

4. ஜுன்துப்பின் ஸுஃப்யான் அல்பஜலீ ரளியல்லாஹு அன்ஹு அறிவித்துக் கூறுகிறார்கள் அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய விரலை கல் ஒன்று தாக்கி அது காயமடைந்து விட்டது அ(ப்போத)வர்கள், (இப்னு ரவாஹா என்பவருக்குரிய இக்கவிதையைக்) கூறினார்கள்:

“நீ காயமடைந்து விட்ட விரலல்லாது வேறு எதுவுமில்லை நீ சந்தித்தது (உனக்கு ஏற்பட்டது)வோ, அல்லாஹ்வின் பாதையிலாகும்.

5. அல்பராஉ பின்ஆஜிப் ரளியல்லாஹு அன்ஹு அறிவித்துக்கூறுகிறார்கள்: அபூ இமாராவே, அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை(த் தன்னந்தனியே ஹுனைன் போரில்) விட்டுவிட்டு நீங்கள் வெருண்டு ஓடிவிட்டீர்களா? என்று நான் கேட்டேன், அ(ப்போத)வர் இல்லை! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் புறமுதுகிட்டுச் செல்லவில்லை, என்றாலும் ஹவாஜின்கள் அம்புகளால் எய்து கொண்டிருந்தனர் (அந்நிலையில் மற்ற) மனிதர்கள் விரைந்து பின் சென்றனர் அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களோ, தங்களுடைய கோவேறு கழுதையின் மீது இருந்தனர், அபூஸுஃப்யான் பின் அல்ஹாரிஸ் பின் அப்துல் முத்தலிப் என்பவர் அதன் கடிவாளத்தைப் பிடித்திருந்தார்; இன்னும் அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், “நானே நபி, பொய் இல்லை! நானே அப்துல் முத்தலிபின் மகனாராவேன்” என்று கூறினார்கள்.

புகாரீ மற்றும் முஸ்லிம் ஒருமித்துப் பதிவு செய்துள்ளார்கள்.

6. பராஉ அவர்கள் அறிவித்துக் கூறுகிறார்கள்: கன்தக் (போர்) நாளன்று மண்ணைச் சுமந்து கொண்டு செல்பவர்களாக அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இருந்தனர், முடிவாக அவர்களின் வயிற்றில் புழுதி படிந்து விட்டது, (அப்போது) அவர்கள்,

அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அல்லாஹ் இல்லையானால் நாம் நேர்வழி பெற்றிருக்க மாட்டோம் தர்மமும் செய்திருக்க மாட்டோம், தொழுதிருக்கவும் மாட்டோம் எங்களின் மீது அமைதியை இறக்கியருள்வாயாக! நாங்கள் (எதிரிகளை) சந்தித்துவிடும் பொழுது (எங்களுடைய) பாதங்களை ஸ்திரப்

படுத்தி வைப்பாயாக! இணைவைத்துக் கொண்டிருப்போரோ, திண்ணாக எங்கள் மீது அநீதம் செய்துவிட்டனர், (ஆனால்) எங்களைக் குழப்ப அவர்கள் நாடிவிட்டால் நாங்கள் (அதைத்) தடுப்போம்" என்று கூறிக் கொண்டிருந்தார்கள்.

நாங்கள் (அதைத்) தடுப்போம்! நாங்கள் (அதைத்) தடுப்போம்! என்று கூறும் போது தங்களுடைய சப்தத்தை அவர்கள் உயர்த்தினார்கள்.

7. முஹாஜிர்கள் மற்றும் அன்ஸார்கள் அகழைத்தோண்டிக் கொண்டு (அதன்) மண்ணைச் சுமந்து கொண்டு செல்பவர்களாகவும் இருந்தனர், இன்னும் அவர்கள், "நாங்கள் (உயிர்வாழ்ந்து) எஞ்சியிருக்கும் காலமெல்லாம் (தொய்வின்றி) எப்போதும் அறப்போர் செய்வதற்கு (தயாராக உள்ளோம் என) உடன்படிக்கை செய்துவிட்டோரே, நாங்கள்" என்று கூறிக்கொண்டிருந்தனர்; (அப்போது) நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், அவர்களை மிகுந்து நேசிப்பவர்களாக இருந்ததோடு,

"யா அல்லாஹ்! மறுமையின் வாழ்க்கையல்லாது (எங்களுக்கு) வேறு வாழ்க்கை இல்லை! ஆகவே, (இவ்வாறு உன் மார்க்கத்திற்காக அறப்போர் செய்ய தங்களைத் தயாராக்கி இருக்கும்) அன்ஸார்கள் மற்றும் முஹாஜிர்களுக்கு பாவம் பொருத்தருள்வாயாக!" என்று கூறினார்கள்.

புகாரீ மற்றும் முஸ்லிம் இதனை பதிவு செய்துள்ளார்கள்.

## முஸ்லிமான ஆடவரின் ஆடை

وَثِيَابَكَ فَطَهِّرْ

***1. "உம்முடைய ஆடையையும் சுத்தப்படுத்திக் கொள்வீராக!" என உயர்ந்தோனாகிய அல்லாஹ் கூறுகிறான்.***

அல்முத்தஸ்ஸிர் அத்தியாயம் வசனம் 4

(ஆடையான அதைத் தண்ணீரால் கழுவுவீராக! உம்முடைய மனதை பாவங்கள் மற்றும் மாறு செய்யப்படுபவைகளலிருந்து சுத்தப்படுத்திக் கொள்ளவும் செய்வீராக!).

2. உம்முஸலமா அவர்கள் அறிவித்துக் கூறுகிறார்கள்:

"அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு

ஆடைகளில் மிக்க விருப்பமுடையது கமீஸாக இருந்தது”

திர்மிதி இதைப்பதிவு செய்து அது ஹஸன் தரத்தை உடையதெனக் கூறினார்கள்.

(கமீஸ்: அவர்களது கெண்டைக்காலின் பாதிவரை உள்ள நீண்ட ஆடையாகும்.)

3. மேலும், நிச்சயமாக அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், “எவர் தன் ஆடையை அகம்பாவமாக (கரண்டைக் காலுக்குக் கீழ்) இழுக்கச் செய்கிறாரோ, அவர்பால் மறுமைநாளில் அல்லாஹ் உற்று நோக்க மாட்டான்”.

அறிவிப்பவர் இப்னு உமர் ரளியல்லாஹு அன்ஹு

புகாரீ மற்றும் முஸ்லிம் இதனை ஒருமித்துப் பதிவு செய்துள்ளனர்.

4. “கீழாடையில் இரு கரண்டை மொளிகளுக்குக் கீழே உள்ளது நரகத்திலாகும்” என அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

அறிவித்துக் கூறுபவர் அபூஹுரைரா ரளியல்லாஹு அன்ஹு

5. “அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், தலைப்பாகை அணிந்தால் தங்களுடைய இரு தோள்பட்டைகளுக் கிடையில் தங்களின் தலைப்பாகையை தொங்க விடுவார்கள்” என அறிவித்துக் கூறுபவர் இப்னு உமர் ரளியல்லாஹு அன்ஹுமா

இதனைத் திர்மிதி பதிவு செய்து ஹஸன் தரத்தையுடையதென அதுபற்றிக் கூறினார்கள்.

6. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பற்றி ஸாலிம் தன் தந்தை தனக்கு அறிவித்ததாக அறிவித்துக் கூறுகிறார்: “தொங்கவிடுதல் என்பது கீழாடை, கமீஸ், தலைபாகை ஆகியவற்றிலிருக்கும், அவற்றிலிருந்து எதையாவது எவர் தற்பெருமையாக இழுக்கச் செய்கிறாரோ, அவர்பால் மறுமைநாளில் அல்லாஹ் உற்று நோக்கமாட்டான்”.

அபூதாவூது மற்றும் நஸாயீ இதைப்பதிவு செய்து இதன் அறிவிப்புத் தொடர் ஸஹீஹ் என அல்பானீ கூறியுள்ளார்கள்.

7. மேலும், அபூஸயீது அல்குத்ரீ ரளியல்லாஹு அன்ஹு அறிவித்துக் கூறுகிறார்கள்: விசுவாசியின் கீழாடையானது அவருடைய இரு கெண்டைக்

கால்களின் பாதிவரையாகும், மேலும், (கெண்டைக் காலான) அதற்கும் இரு கரண்டை மொளிகளுக்கு மிடையில் இருப்பது குற்றமல்ல, அதைவிடக் கீழே உள்ளது நரகத்திலாகும்; இதை மும்முறை கூறினார்கள். இன்னும் பெருமைக்காக தன் கீழாடையை இழுக்கச் செய்தவர்பால் மறுமைநாளில் அல்லாஹ் உற்று நோக்கமாட்டான்.

இதனை அபூதாவூத் மற்றும் இப்னுமாஜா பதிவு செய்து அதன் அறிவிப்புத் தொடரை அல்பானீ ஸஹீஹ் எனக் கூறியுள்ளார்.

8. மேலும், அப்துல்லாஹ் பின் உமர் ரளியல்லாஹு அன்ஹுமா அவர்கள் அறிவித்துக் கூறுகிறார்கள்:

“அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைக் கடந்து சென்றேன், என் கீழாடையில் தொய்வும் இருந்தது (அதைப் பார்த்த) அவர்கள், அப்துல்லாஹ்வே! உமது கீழாடையை உயர்த்துவீராக! எனக் கூறினார்கள், (அதற்கிணங்க) அதை நான் உயர்த்திவிட்டேன், பின்னர், அதிகப்படுத்துவீராக! எனக் கூறினார்கள் (அதற்கிணங்க) நான் அதிகப்படுத்தி னேன் (அதன்) பிறகு அதன்படியே நான் (இருக்க) முயற்சி செய்பவனாக இருந்தேன் (அங்கிருந்த) கூட்டத்தினரில் சிலர் எதுவரை எனக்கேட்டார்கள், அ(தற்க)வர்கள், இரு கெண்டைக் கால்களின் பாதிகள் வரை எனக் கூறினார்கள்.

இதை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

9. “வெண்மையான ஆடைகளை அணியுங்கள், ஏனெனில் நிச்சயமாக அவை மிகப் பரிசுத்தமானது மற்றும் மிக்க நல்லதாகும், உங்களில் இறப்பெய்தியவர்களை அதிலேயே கபனிடச் செய்யுங்கள்” என நிச்சயமாக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர் ஸமுரா பின் ஜுன்துப் ரளியல்லாஹு அன்ஹு

இதை அஹ்மது மற்றும் அவரல்லாதவர் செய்துள்ளனர், அதன் அறிவிப்புத் தொடர் ஸஹீஹ் ஆகும்.

10. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: “இம்மையில் பிரபல்யத்திற்கான ஆடையை எவர் அணிந்தாரோ, மறுமைநாளில் இழிவின் ஆடையை அல்லாஹ் அவருக்கு அணிவிப்பான்”.

இதை அஹ்மது பதிவு செய்துள்ளார்கள், மேலும் அல்பானீ அதன் அறிவிப்புத் தொடர் ஹஸன் எனக் கூறியுள்ளார்கள்.

11. மேலும், அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: நீர் நாடியதை உண்ணுவீராக! நீர் நாடியதை அணிந்தும் கொள்வீராக! இரண்டு (காரியங்கள்) உன்னைத் தவறு செய்யச் செய்து விடவேண்டாம்; (வீண்) விரயம், தற்பெருமை"

இதை புகாரீ பதிவு செய்துள்ளார்கள்.

(கருத்து: உண்ணுதல், ஆடை ஆணிதல் ஆகியவற்றில் விரயம் மற்றும் தற்பெருமையைத் தவிர்ப்பீராக!)

(முன் கூறப்பட்டவற்றின்) சாரம்

ஆடை அணிவது பற்றிய ஹதீஸ்களைக் கூறிய பிறகு அவற்றின் சாரத்தை இமாம் நவவீ அவர்கள் கூறுகிறார்கள்:

(கைலி, கால் சட்டை, பைஜாமா ஆகியவை போன்ற) கீழாடை, சட்டை, தலைப்பாகை, அரபிச் சட்டை ஆகியவை (கரண்டை மொளிகளுக்கு) கீழே இறங்கியதாக இருப்பதாகிறது (அது பற்றிய மார்க்க விளக்கத்தைத் தருகிறோம்) தற்பெருமைக்காக இரு கரண்டை மொளிகளுக்குக் கீழே அதை இறக்குவது நிச்சயமாகக் கூடாது. (தற்பெருமையான) அது அல்லாததற்காக அவ்வாறு இருப்பின், அது (மார்க்கத்தில்) வெறுக்கப்பட்ட (நிலையுடைய) தாகும். ஆகவே, (மார்க்கத்தில்) விருப்பமாக்கபட்ட (நிலையான)து. இரு கெண்டைக்கால்களின் பாதிவரையாகும் வெறுப்பின்றி ஆகுமாக்கப்பட்டதோ, இரு மொளிகள் வரையாகும். ஆகவே இரு கரண்டை மொளிகளை விட்டும் கீழே இறங்கியது (மார்க்கத்தில்) தடுக்கப்பட்டதாகும்.

12. இரு கரண்டை மொளிகளுக்கு கீழே ஆடையில் இறங்கியுள்ளது ஆகுமானதல்ல என்ற தன் கருத்தை பத்ஹுவில் இப்னு ஹஜர் அவர்கள் நிச்சயமாக எடுத்துக் கூறிவிட்டு "பெண்களுக்கின்றி ஆண்களில் பங்கில் நிச்சயமாக அது தடுக்கப்பட்டுள்ளது என்ற கருத்தின் மீது இஜ்மாஉ (மார்க்க அறிஞர்களின் ஒருமித்த கருத்து) உள்ளது என காளீ இயாள் நகல் செய்துள்ளனர்" என்பதையும் கூறிவிட்டுப் பின்னர்.

இன்னும் அதன் கருத்து நிச்சயமாக ஆடவர்களுக்கு இருநிலை உண்டு 1. விருப்பமான நிலை; கீழாடையை அரைக் கெண்டைக்கால்வரை ஆக்கிக் கொள்வதாகும். 2. அனுமதிக்கப்பட்ட நிலை; அதுவே இரு கரண்டை மொளிகள் வரையாகும். மேலும், கீழாடையை (இரு கரண்டை மொளிகளுக்குக் கீழே) நீட்டுவதானது அனுமதிக்கப்படாததாகும், அது போன்றவையே, அரபிச் சட்டை, கால்சட்டை, சாதாரண கால் சட்டை ஆகியவையும் என்பதே

அவருடைய பேச்சிலிருந்து விளங்கப்படுகிறது.

13. மேலும், அப்துல்லாஹ்பின் உமர் ரளியல்லாஹு அன்ஹு அறிவிக்கிறார்கள்: "நிச்சயமாக அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தன்மீது காவிச்சாயம் தோய்க்கப்பட்ட இரு ஆடைகள் இருக்கக் கண்டுவிட்டு, "நிச்சயமாக இவை காஃபிர்களின் ஆடைகளில் உள்ளனவாகும், ஆகவே இவை இரண்டை நீர் அணியாதீர்" என்று கூறினார்கள்.

இதை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

ஹதீஸிருந்து பெறப்படும் கருத்துக்கள்:

1. "ஒரு சமூகத்தாருக்கு எவர் ஒப்பாகுகிறாரோ அவர் அவர்களில் உள்ளவராவார்" என்ற ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் கூற்றிற்கிணங்க காஃபிர்களின் ஆடைகளை அணிந்து கொள்வதும், (அவர்களுக்கு ஒப்பாக) அவர்கள் அணிவது போன்று ஆடைகளை அணிவதும் முஸ்லிமானவருக்கு ஆகுமானதல்ல (கூடாது).

இது ஸஹீஹான தரத்தையுடையதாகும். இதை அபூதாவூது பதிவு செய்துள்ளார்கள்.

(கூபே,) அல்லது ஷார்லஸ்தோன் இன்னும் அவ்விரண்டல்லாததைப் போன்ற பெயர்களைக் கூறுகிறார்களே அவ்வாறான நெருக்கமான கால்சட்டைகள் அணிவதைப்போன்ற காஃபிர்களுக்கு ஒப்பாகிக் கொள்ளுதல் இஸ்லாமான நாடுகளில் அநேகமானவற்றில் திண்ணமாக பரவியுள்ளது.

மேலும், நெருக்கமான கால்சட்டையை அணிவது பற்றி இளைஞர் ஒருவர் கேட்டகேள்விக்கு (அதை அணிவது) 'ஹராம்' என்று பதில் கூற மார்க்க அறிஞர்களில் ஒருவரிடமிருந்து நான் செவியேற்றேன்; ஏனெனில் அ(வ்வாறு நெருக்கமான கால்சட்டையை அணிவ)து மறைக்கப்பட வேண்டிய இடத்தை வடிவமைத்துக் காட்டுகிறது. காஃபிர்களுக்கு, ஒப்பாகுதலும் அதில் உள்ளது.

2. ஆகவே தலையில் அணிந்து கொளவதானது, அதுவே சமூகத்தார்களை அடையாளம் காட்டுபவற்றில் உள்ளதாகும் முஸ்லிம்களில் சிலர் (மற்றவர்களுக்கு) ஒப்பாகி பெர்ணீட்டாவை அணியத் தொடங்கினர் 'குப்ஆ' எனவும் அதற்குப் பெயர் கூறப்படும், (அவ்வாறான தொப்பிகளை அணிவதை) பட்டாளத்தினருக்கு கட்டாயமாக்கப்பட்டது, ஆகவே, அவற்றை காஃபிர்கள் அணிந்து கொள்கிறார்களே அத்தகைய 'குப்ஆ'வை அவர்களுக்கு அணிவித்தார்கள். (ஆனாலும்) செல்வந்தர்கள் மற்றும் பணியாட்களில் சிலரும், சூரியவெப்பத்திலிருந்து தலையை மறைத்துக் கொள்கிறோம் என்று கூறி

அவற்றை அணிந்து கொள்கின்றனர். (ஆனால்) அவர்கள் தொப்பி அல்லது தலைப்பாகையினால் அல்லது கைக்குட்டையினால் தலையை மறைத்துக் கொள்வார்களானால் அவர்களின் தலைகளுக்கு அது மிகச்சரியானதாக (அதே சமயம்) காஃபிர்களுக்கு ஒப்பாகுதலிலிருந்து மிக்க தூரமானதாகவுமிருக்கும். இவ்வாறு ஒப்பாகுதல் அதில் நிச்சயமாக மார்க்க ரீதியான முரண்பாடு உண்டு என்பதைக்கூட உணரமுடியாத அளவிற்கு இவ்வாறு ஒப்பாகி நடந்து வருதல் வெகுவாகப் பரவி வருகிறது. இன்னாலில்லாஹி வஇன்னா இலைஹிராஜிஊன் அவர்களுடைய ஆடைகளிலும் அவர்களுடைய பழக்கவழக்கங்களிலும் ஒப்பாக நடக்கும் நாம் காபிர்களோடு எவ்வாறு போர் செய்யப் போகிறோம்? ஆகாய விமானம் (போர் செய்வதற்குரிய போர்ச் சாதனங்களான) டாங்குகள், பீரங்கிகள்; ஆகியவற்றை உற்பத்தி செய்வதில் அவர்களைப் போன்று நாமிருக்க வேண்டும் அதனால் நம்முடைய மார்க்கம் நம்முடைய பூமி ஆகியவற்றைப்பாதுகாக்க நமக்கு மிகுந்த உதவியாக இருக்கும்!!

## ஒரு முஸ்லிமான பெண்ணின் ஆடை
## (எவ்வாறு இருக்க வேண்டுமென்பது பற்றிய தெளிவு)

1. உயர்ந்தோனாகிய அல்லாஹ் கூறுகிறான்:

يَا أَيُّهَا النَّبِيُّ قُل لِّأَزْوَاجِكَ وَبَنَاتِكَ وَنِسَاء الْـمُؤْمِنِينَ يُدْنِينَ عَلَيْهِنَّ مِن جَلَابِيبِهِنَّ ذَلِكَ أَدْنَى أَن يُعْرَفْنَ فَلَا يُؤْذَيْنَ وَكَانَ اللهُ غَفُورًا رَّحِيمًا

*“நபியே! உம்முடைய மனைவியருக்கும், உம்முடைய புதல்விகளுக்கும் விசுவாசிகளின் பெண்களுக்கும், அவர்கள் தங்கள் தலை முந்தானைகளைத் தாழ்த்திக் கொள்ளுமாறு நீர் கூறுவீராக! அதனால் அவர்கள் (சுதந்திரமானவர்களென) அறியப்படுவதற்கு இதுமிக நெருக்கமானதாகும் அப்போது அவர்கள் (பிறரால்) நோவினை செய்யப்படமாட்டார்கள்; இன்னும் அல்லாஹ் மிக்க மன்னிப்பவனாக, மிக்க கிருபையுடையவனாக இருக்கிறான்.”*

(அல் அஹ்ஜாப் அத்தியாயம் வசனம் 59)

2. மேலும், "தற்பெருமை கொண்டு தன் ஆடையை (கரண்டை மொளிக்குக் கீழே) இழுத்தவரின்பால் மறுமை நாளின்போது அல்லாஹ் உற்று நோக்க மாட்டான்" என ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள், அதைச் செவியேற்ற உம்முஸலமா ரளியல்லாஹு அன்ஹா "பெண்கள் அவர்களுடைய (ஆடைகளின்) கீழ்ப் பகுதிகளை எவ்வாறு செய்துகொள்ள வேண்டும் என்று கேட்கின்றனர் அ(தற்க)வர்கள், "ஒரு அடி தாழ்த்திக் கொள்வர்" என்று கூறினார்கள்.

அ(தற்க)வர்கள், அவர்களுடைய பாதங்கள் அப்போது வெளிப்பட்டுவிடுமே என்று கேட்டார்கள் (அதற்க)வர்கள், "அப்போது ஒரு முழம் தாழ்த்திக் கொள்வார்கள் அதைவிட அவர்கள் அதிகப்படுத்திக் கொள்ளமாட்டார்கள்" என்று கூறினார்கள்.

இதைத் திர்மிதி பதிவு செய்துள்ளார்கள் மேலும், ஹஸன் ஸஹீஹ் தரத்தில் உள்ளதெனக் கூறினார்கள்.

(மேற்கூறப்பட) வசனம் மற்றும் ஹதீஸிலிருந்து பெறப்படும் கருத்துக்கள்:

1. மேலாடையை அரைக் கெண்டைக் கால் வரை (ஆக்கி) சுருக்கிக் கொள்ள வேண்டும் இரு கரண்டை மொளிகளுக்குக் கீழ் அதிகமாக்கவே கூடாது என ஆடவர்களாகிய அவர்களுக்கு தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கட்டளையிட்டதற்கு மாறாக ஒரு (முஸ்லிமான) பெண்ணின் ஆடையானது, (அவளின்) இரு பாதங்களை மறைக்கக் கூடிய மிக நீண்டதாக இருப்பது கடமையாகும். (ஆனால்) நம்முடைய (இக்)காலகட்டத்தில் காரியம் தலைகீழாகி விட்டது. ஆடவர்கள் அவர்களின் ஆடைகளை இரு கரண்டை மொளிகளுக்குக் கீழ் ஆக்குபவர்களாக ஆகிவிட்டனர். நரகத்திற்கு பிரவேசிக்கவும் எடுத்துக் காட்டுகின்றனர். பெண்களோ முட்டுக்கால் வரை அல்லது அதற்கும் மேல் ஆக்கிக் குறைத்துக் கொள்பவர்களாக ஆகி அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அதுபற்றித் தங்களுடைய கூற்றின் மூலம் தெரிவித்திருப்பது போன்று அவர்கள் சுவனம் பிரவேசிப்பதிலிருந்து தடுக்கப்படுவதன்பால் எடுத்துக் காட்டப்படுகின்றனர்.

ஆடை அணிந்த (எத்தனையோ) பெண்கள் நிர்வாணிகளாவர், (மற்ற ஆடவர்களின் பார்வைகளை) திருப்பக் கூடியவர்கள்; (அங்குமிங்கும்) சாய்ந்து கொள்பவர்கள்; அவர்களுடைய தலைகள் ஒட்டகத் திமிழ் போன்று

சாய்ந்து கொண்டிருக்கும் (இத்தகுதிகளையுடைய) அவர்கள் சுவனம் பிரவேசிக்க மாட்டார்கள், அதன் வாடையையும் (கூடப்) பெறமாட்டார்கள். இன்னும் அ(ச்சுவனமான) தன் வாடையானது இன்னின்னவாறுள்ள தொலை தூரத்திலிருந்து பெறப்படும்.

இதை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

(இதன் கருத்தாவது: தன்னுடைய கெண்டைக்காலை அல்லது தன் உடலில் உள்ள ஒரு பகுதியை வெளிப்படுத்தி தன் நடையில் அங்குமிங்கும் சாய்ந்தவளாக (குலுங்கிய நடையுடையவளாக) அவளின் தலையோ, ஒட்டகத்தின் திமில் போன்று அவளுடைய முடிகளால் உயர்த்தப்பட்டதாக இருக்கிறாளே அத்தகைய பெண்ணானவள், அவளுக்குரிய தண்டனையை (அனுபவித்து)ப் பெறும் வரை சுவனம் புகமாட்டாள்).

2. ஒரு பெண்ணின் பாதம் அதை வெளிப்படுத்துவது ஆகாது என்றிருப்பின் அவளின் முகம் (மறைக்கப்படுவதற்கு) மிக்க முன்னுரிமையுடையதாகும். ஏனெனில் அதனால் தான் நிச்சயமாக அவள் அறியப்படுகிறாள், அதிலே தான் குழப்பம் என்பது மிகுதியாக உள்ளது பெண் (தன்னை மறைத்துக் கொள்ளாது) வெளிக்காட்டுவது காஃபிர்களையும் மற்றவர்களையும் (காப்பி அடித்து) பின்பற்றுதலாகும் அவர்களுக்கு ஒப்பாகுதலுமாகும் ஹதீஸில் வந்துள்ளது. ஒரு கூட்டத்தாருக்கு எவர் ஒப்பானாரோ அவர் அவர்களில் உள்ளவராவார்.

ஸஹீஹான தரத்தையுடையதாகும். இதை அபூதாவூது பதிவு செய்துள்ளார்கள்.

நீர் மூழ்கி கப்பல்கள் மற்றும் அவையல்லாதவற்றைச் செய்வது போன்று நமக்குப் பயன்தரும் பயனுள்ள புதிய கண்டுபிடிப்புகளில் அவர்களை நாம் கண்மூடித்தனமாக பின்பற்றிச் சென்றிருக்கலாமே! எனினும் (நாம்).

மேற்கத்தியரை கண்மூடித்தனமாக அவர்கள் பின்பற்றி விட்டனர். எனினும் பாவங்களில் விதையை (உள்ளே இருப்பதை) விட்டுவிட்டு (அவற்றின்) தொலிகளை பகரமாக எடுத்துக் கொண்டனர்". என்று ஒரு கவிஞர் கூறியதைப் போன்று (ஆகிவிட்டோம்).

3. பொறுப்பாளர், அவர் தான் தந்தை, கணவன், சகோதரர் ஆகியோராவர் ஒவ்வொரு பொறுப்பாளரும் பெண்களை கவனிப்பர்.

"உங்களில் ஒவ்வொருவரும் பொறுப்பாளர் உங்களில் ஒவ்வொருவரும் தன் பொறுப்பு பற்றி (மறுமையில்) கேட்கப்படுவர்" என ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

இதனை புகாரீ மற்றும் முஸ்லிம் பதிவு செய்துள்ளனர்.

## தங்கம் மற்றும் மோதிரம் அணிவது பற்றிய தெளிவுகள்

1. அனஸ் ரளியல்லாஹு அன்ஹு அறிவித்துக் கூறுகிறார்கள்:

“நிச்சயமாக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வெள்ளியினால் மோதிரத்தைச் செய்து எடுத்துக் கொண்டிருந்தார்கள். அதில் “முஹம்மது ரசூலுல்லாஹ்” என வடிவமைக்கப்பட்டிருந்தது,

இதை புகாரீ மற்றும் முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

2. நிச்சயமாக அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தங்க மோதிரத்தை (ஆடவர் அணிவதிலிருந்து) தடை செய்துள்ளார்கள்” என அபூஹுரைரா ரளியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள்.

புகாரீ மற்றும் முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

3. மேலும், அப்துல்லாஹ் பின் அப்பாஸ் ரளியல்லாஹு அன்ஹு அறிவிக்கிறார்கள்:

நிச்சயமாக அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஓர் ஆடவரின் கையில் தங்க மோதிரத்தைக் கண்டு விட்டு, அதை அவர்கள் கழற்றி எறிந்தும் விட்டார், “நெருப்புக் கங்கின் பால் உங்களில் ஒருவர் நாட்டங் கொண்டு அதை தன் கையில் போட்டுக் கொள்கிறார்” என்றும் அவர்கள் கூறினார். (இவ்வாறு கூறிவிட்டு அங்கிருந்து) அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சென்றுவிட்ட பிறகு அந்த ஆடவரிடம், “உம்முடைய மோதிரத்தை நீர் எடுத்து அதனால் பயனடைந்து கொள்வீராக! என்று கூறப்பட்டது, அ(தற்க)வர் “அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இல்லை நான் ஒரு போதும் அதை எடுக்கவே மாட்டேன் அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களோ அதைத் திண்ணமாக எறிந்து விட்டனர்” என்று கூறினார்.

இதை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

4. மேலும், அலி பின் அபீதாலிப் ரளியல்லாஹு அன்ஹு அறிவித்துக் கூறுகிறார்கள்:

“இதில் அல்லது இதை அடுத்துள்ள (விரலான)தில் என்னுடைய மோதிரத்தை நான் அணிந்து கொள்வதை விட்டு என்னை, அல்லாஹ்வின் தூதர்

ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தடுத்துள்ளார்கள் என்று கூறிவிட்டு நடுவிரல் மற்றும் அதையடுத்துள்ள (ஆட்காட்டி விரலைதான்) பால் சைக்கினையும் செய்து காட்டினார்கள்.

இதை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

நஸாயீயின் அறிவிப்பில் ஆட்காட்டி விரல் மற்றும் நடுவிரலில் மோதிரம் அணிவதை விட்டும் அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் என்னைத் தடுத்துள்ளார்கள் (எனப் பதிவாகியுள்ளது).

5. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:

"அல்லாஹ்வையும், மறுமை நாளையும் விசுவாசம் கொண்டவராக எவர் இருக்கிறாரோ, அவர் பட்டு மற்றும் தங்கத்தை அணிய வேண்டாம்"

இதை ஹாகிம் பதிவு செய்து, ஸஹீஹ் எனக் கூறியுள்ளார்கள்; அதற்கு தஹபீயும் ஒப்புதல் தெரிவித்துள்ளார்கள்.

6. மேலும், தங்கம் மற்றும் பட்டு பற்றி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "(தங்கம், பட்டு ஆகிய இவ்விரண்டானது, என்னுடைய சமூகத்தாரின் ஆடவர்கள் மீது ஹராம் (தடுக்கப்பட்டது) ஆகும். அ(ச்சமூகத்தாரின)தன் பெண்களுக்கு ஹலால் (ஆகுமாக்கப்பட்டது) ஆகும்" என்று கூறினார்கள்.

இதை அபூதாவூது, நஸாயீ ஆகியோர் பதிவு செய்துள்ளார்கள். இன்னும், அதன் கருத்தை உறுதிப்படுத்தும் ஹதீஸ்களின் நிமித்தம் அது ஸஹீஹ் தரத்தையுடையதெனவும் அல்பானீ கூறியுள்ளார். (ஹதீஸில் வந்துள்ள 'பட்டு' என்பதன் கருத்து, பட்டுப்பூச்சிகளிலிருந்து எடுக்கப்பட்ட அசல் பட்டாகும் இப்போது கடைத்தெருவில் உள்ள செயற்கைப் பட்டல்ல).

7. மேலும், நிச்சயமாக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தங்களுடைய தோழர்களின் சிலரின் மீது தங்க மோதிரத்தைக் கண்டு விட்டு அவரை விட்டும் புறக்கணித்தனர். இன்னும் அவர் இரும்பினால் ஒரு மோதிரத்தை(த் தயாரித்து) எடுத்துக் கொண்டார். அப்போது இது தீயதாகும். இது நரகவாசிகளின் அணிகலனாகும் என்று கூறினார்கள் (அதைச் செவியேற்ற) அவர் அ(ம்மோதிரத்)தை எறிந்து விட்டார். அதன் பின்னர், வெள்ளியினால் ஒரு மோதிரத்தை(த் தயாரித்து) எடுத்துக் கொண்டார் (அதைப் பார்த்து) விட்டு அவர்கள் அதுபற்றி மவுனமாக இருந்து விட்டனர்.

இதை அஹ்மது பதிவு செய்துள்ளார்கள். மேலும், அதன் கருத்தை உறுதிப்படுத்தும் ஹதீஸ்களின் நிமித்தம் அல்பானீ அதை ஸஹீஹ் எனக்

ஆதாபுஜ்ஜிஃபாஃப் என்ற நூலில் கூறியுள்ளார்.

8. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: “என்னுடைய சமூகத்தாரில் எவர் தங்கத்தை அணிந்து, அதை அணிந்து கொண்டவராகவே மரணித்து விடுகிறாரோ அவரின் மீது சுவனத்திலுள்ள தங்கத்தை அல்லாஹ் ஹராமாக்கி(த் தடுத்து) விடுகிறான்”.

ஸஹீஹ் அறிவிப்புத் தொடரில் அஹ்மது இதனைப் பதிவு செய்துள்ளார்கள்.

ஹதீஸிலிருந்து பெறப்படும் கருத்துக்கள்

1. நிச்சயமாக தங்கம் ஆடவர்களுக்கு தடுக்கப்பட்டதும் பெண்களுக்கு (ஹலாலான) அனுமதிக்கப்பட்டதுமாகும் முஸ்லிம் என்பவர் அல்லாஹ் மற்றும் அவனுடைய தூதரின் கட்டளைகளுக்கு (தன்னை முற்றிலுமாக ஒப்படைத்து) கீழ்ப் படிந்து நடப்பவரே ஆவார்.

2. திருமண மோதிரம் என அதற்குப் பெயர் கூறி திருமணத்தின் நிமித்தம் ஓர் ஆடவர் தங்க மோதிரத்தை அணிந்து கொள்வரானால், அது பெரும் பாவங்களிலுள்ள தடுக்கப்பட்டதாகும் ஏனெனில் (அவ்வாறு அதை அணிந்து கொள்பவர்) தன் மார்க்கக் கட்டளையைப் புறக்கணித்தவராவார் இன்னும் அவர் திருமணத்தின் பெயரால் மோதிரத்தை உருவாக்கியோரான நிராகரிப்போரையும் கிறிஸ்தவர்களையும் கண்மூடிப் பின்பற்றுபவர் ஆவார். மேலும் எவர் ஒரு சமூகத்தாருக்கு ஒப்பாகுகிறாரோ, அவர், அவர்களில் உள்ளவராவார், தங்க மோதிரத்தை அணிந்து கொள்வதில் பெண்களுக்கு ஒப்பாகுதலும் உண்டு இன்னும் ஹதீஸில்: “ஆடவர்களில் பெண்களுக்கு (அவர்களுடைய செயல்களில்) ஒப்பானவர்களை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சபித்துள்ளார்கள் திருமண மோதிரமாக அது இல்லாதிருப்பின் காஃபிர்களுக்கு ஒப்பாகுவதைத் தவிர்ப்பதற்காக வெள்ளி மோதிரத்தை ஆடவர்கள் அணிந்து கொள்வது ஆகுமாக்கப்பட்டதாகும்.

## ஆடையில் அலங்காரம்

1. உயர்ந்தோனாகிய அல்லாஹ் கூறுகிறான்:

وَثِيَابَكَ فَطَهِّرْ

*மேலும், உமது ஆடைகளைத் தூய்மையாக வைத்துக் கொள்வீராக!* (அல்முத்தஸ்ஸிர் அத்தியாயம் வசனம் - 4)

இப்னு கஸீர் இவ்வசனத்தின் விளக்க உரையில் அதன் கருத்தை கூறுகிறார்கள்.

(ஆடையான) அதை கழுவிக் கொள்வீராக! பாவங்கள் (அல்லாஹ் மற்றும் அவனின் தூதரின் கட்டளைக்கு) மாறுசெய்பவை ஆகியவற்றிலிருந்தும் இவ்விரண்டல்லாத (மனதை அழுக்கடையச் செய்ப)வற்றிலிருந்தும் உம்மனதை தூய்மையாக்கிக் கொள்வீராக!

2. மேலும், உயர்ந்தோனாகிய அல்லாஹ் கூறுகிறான்:

يَا بَنِي آدَمَ خُذُواْ زِينَتَكُمْ عِندَ كُلِّ مَسْجِدٍ

***"ஆதமுடைய மக்களே! ஒவ்வொரு மஸ்ஜிதிலும் (ஆடைகளினால்) உங்களுடைய அலங்காரத்தை எடுத்துக் கொள்ளுங்கள்.***

(அல் அஃராஃப் அத்தியாயம் வசனம் 31)

சில ஆடவர்கள் (அல்லாஹ்வின்) வீட்டை நிர்வாணமாக சுற்றிவந்து கொண்டிருந்தனர் ஆகவே (ஆடை அணிந்து தங்களை) அலங்காரம் செய்துகொள்ள வேண்டுமென அவர்களுக்கு அல்லாஹ் கட்டளையிட்டான் அலங்காரம் என்பதன் கருத்து: மர்மஸ்தானத்தை மறைத்துக் கொள்ளுமள விற்கு ஆடையணிந்து கொள்தாகும். அதல்லாத (மேல் மிச்சமாக அணிந்து கொள்ளப்படுவதான)து சிறந்த ஆடைகள் அணிந்து கொள்வதில் உள்ள நிறைவாகும் ஆகவேதான் ஒவ்வொரு பள்ளியிலும் (தொழுகையின்போது) அவர்களது ஆடை அலங்காரத்தை எடுத்துக் கொள்ளுமாறு (அவரவரிட முள்ள சுத்தமான ஆடைகளை அணிந்து வருமாறு அல்லாஹ்விடமிருந்து) கட்டளையிடப்பட்டார்கள் என இப்னு அப்பாஸ் ரளியல்லாஹு அன்ஹுமா அறிவித்துக் கூறினார்கள் என்று இவ்வசனத்தின் தெளிவுரையில் இப்னு கஸீர் அவர்கள் கூறிவிட்டுப் பின்னர், "இவ்வசனம் மற்றும் இதன் கருத்தில் நபிவழியில் வந்துள்ளவற்றின் தெளிவுகளுக்காக தொழுகையின் போது குறிப்பாக ஜும்ஆ நாள் மற்றும் ஈத் பெருநாளின் போது அலங்காரம் செய்து கொள்வதும் (அவ்வாறே) நறுமணம் உபயோகிப்பதும் விருப்பமாக்கப்பட்டதாகும். ஏனெனில் நிச்சயமாக அதுவும் அலங்காரத்தில் உள்ளதே (அவ்வாறே) பல்துலக்கி மிஸ்வாக்குச் செய்வதும் ஏனெனில் அது அவை அனைத்தையும் நிறைவு செய்வதில் உள்ளதாகும் இன்னும் மிகச்சிறந்த ஆடை வெண்மையானதாகும் என இப்னு கஸீர் அவர்கள் கூறினார்கள்.

3. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: "வெண்மையான ஆடைகளை அணிந்து கொள்ளுங்கள், ஏனெனில்

நிச்சயமாக அவை மிக்ப் பரிசுத்தம் மற்றும் மிக்க நல்லதாகும், உங்களில் இறப்பெய்தி விட்டோரை (வெண்மையான) அதிலேயே கபனிடுங்கள்".

அஹ்மது மற்றும் அவரல்லாதவர் இதைப் பதிவு செய்துள்ளனர். ஹதீஸ் கலை அறிஞர்களிடம் இதன் அறிவிப்புத் தொடர் ஸஹீஹ் ஆகும்.

4. "அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், விகாரமான நெட்டையானவர்களாகவோ மிகக்குள்ளமானவர்களாகவோ இல்லாது நடுமையானவர்களாக இருந்தார்கள், சிவப்பு நிற கீழாடை மற்றும் மேலாடையில் திண்ணமாக அவர்களை நான் கண்டேன் (ஆனால் அல்லாஹ்வினால் படைக்கப்பட்ட) எப்பொருளையும் அவர்களை விட மிக்க அழகுடையதாக நான் கண்டதில்லை என அல்பராஉபின் ஆஜிப் ரளியல்லாஹு அன்ஹு அறிவித்துக் கூறுகிறார்கள்.

இதனை புகாரீ மற்றும் முஸ்லிம் பதிவு செய்துள்ளனர்.

5. மேலும், "ஒரு வித்தளவு எவருடைய இதயத்தில் பெருமை இருந்ததோ, அவர் சுவனத்தில் பிரவேசிக்க மாட்டார்" என ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள் (அப்போது) ஓர் ஆடவர் "நிச்சயமாக ஓர் ஆடவர், அவருடைய ஆடை அழகானதாக, அவருடைய காலணி அழகானதாக இருப்பதை விரும்புகிறார்? (அது பெருமையாகக் கருதப்படுமா?) எனக் கேட்டார், அ(தற்க)வர்கள், "நிச்சயமாக அல்லாஹ் அழகானவன், அழகானதை விரும்புகிறான், பெருமை (என்பது) உண்மையை மறுத்து மனிதர்களை கேவலமாகக் கருதுவதாகும்" என்று கூறினார்கள்.

இதனை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

6. மேலும், அபுல் அஹ்வஸ் தன் தந்தை அறிவித்ததாக அறிவித்துக் கூறுகிறார்:

என்மீது கீழ்த்தரமான ஆடையிருக்க நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் நான் வந்தேன்.

தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உன்னிடம் செல்வம் உண்டா?

(வந்திருந்த) ஆடவர்: 'ஆம்'

தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்: எவ்வகையான செல்வம்?

வந்திருந்த ஆடவர்: ஒட்டகம், மாடு, ஆடு, குதிரை, அடிமை ஆகியவை.

தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அல்லாஹ் உனக்கு செல்வத்தை வழங்கியிருந்தால் அல்லாஹ்வினுடைய அருட்கொடை மற்றும் அவனின் சங்கையின் பிரதிபலிப்பு உன்மீது காணப்பட வேண்டும்.

அஹ்மது இதனைப் பதிவு செய்துள்ளார்கள். ஜாமிஉல் உஸூலின் ஓரத்தில் எழுதப்பட்டிருப்பது போன்று இதன் அறிவிப்புத் தொடர் ஸஹீஹ் ஆகும்.

7. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்:

“எவரின் மீதாவது ஒரு அருட்கொடையை அல்லாஹ் அருட்செய்திருப்பின் (அதன் தொடரில்) நிச்சயமாக அல்லாஹ் தன்னுடைய அடியானின் மீது அவனுடைய அருட்கொடையின் பிரதிபலிப்பைக் காண அவன் விரும்புகிறான்”.

இதை அஹ்மது பதிவு செய்து மிஷ்காத்தில் அல்பானீ இதை ஸஹீஹ் எனக் கூறியுள்ளார்கள்.

## தொழுகை மற்றும் மனிதர்களுக்காக (ஒருவர் - தன்னை) அலங்காரம் செய்தல் பற்றிய பாடம்

1. உங்களில் ஒருவர் (வசதியைப்) பெற்றிருப்பின் அவருக்கென்ன? அல்லது நீங்கள் (வசதியைப்) பெற்றிருப்பின் அவருடைய வேலைக்காக உள்ள இரு ஆடைகள் தவிர ஜும்ஆ நாளைக்காக இரண்டு ஆடைகளை எடுத்துக் கொள்வதற்கென்ன? என்று அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

இதனை அபூதாவூது பதிவு செய்து ஜாமிஉல் உஸூலின் ஆய்வாளர் இதனுடைய அறிவிப்புத் தொடர் ஸஹீஹ் எனக் கூறியுள்ளார்கள்

2. ஜாபிர் பின் அப்துல்லாஹ் ரளியல்லாஹு அன்ஹுமா அறிவித்துக் கூறுகிறார்கள்:

பனீ அன்மார் போரின் நிமித்தம் அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அந்நேரத்தில் அங்கே இருந்தனர், (அவர்கள் நிழலுக்கு வெளியில் இருந்ததால்).

ஜாபிர்: அல்லாஹ்வின் தூதர் அவர்களே! நிழலுக்கு வாருங்கள்! அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் (வாகனத்திலிருந்து) இறங்கி வந்து ஸலாமும் கூறுகின்றனர். (பின்னர்) ஜாபிர், வெள்ளரிப்

பிஞ்சுகளைக் கொண்டுவந்து, அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு சமீபத்தில் வைக்கிறார்.

அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இது எங்கிருந்து கிடைத்தது

ஜாபிர்: மதீனாவிலிருந்து அதை எடுத்துக் கொண்டு புறப்பட்டு வந்தோம், (இதனிடையே) ஜாபிருடைய (கால்நடை) மேய்ப்பாளர் (நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கெதிரில்) வருகிறார், அவரை அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நோட்டமிடுகிறார்கள்.

அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்: இவ்விரண்டு ஆடைகளல்லாது வேறு இரு ஆடைகள் அவருக்கில்லையா?

ஜாபிர்: ஆம்! அவருக்கு இரு ஆடைகள் பெட்டியில் உள்ளன அவை இரண்டையும் பெருநாளைக்காக அவருக்கு நான் அணிவித்தேன்.

அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்: அவரை அழைப்பீராக! (அவர் சென்று) அவ்விரண்டையும் அணிந்து கொள்ளட்டும்.

மேய்ப்பாளர்: (எடுத்துக் கொண்டு) வந்து இரு ஆடைகளையும் அணிந்து கொண்டு சென்று விடுகிறார்.

அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்: அவருக்கென்ன? அல்லாஹ் அவர் கழுத்தை வெட்டுவானாக! இது அவருக்குச் சிறந்ததாக இல்லையா?

சென்று கொண்டிருந்த மேய்ப்பாளர் அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய பேச்சை செவியேற்கிறார்.

மேய்ப்பாளர் நற்சகுணமாகக் கருதி: அல்லாஹ்வின் தூதர் அவர்களே! (என் கழுத்தை அல்லாஹ் வெட்டுவானாக என்று கூறினீர்களே அது) அல்லாஹ்வின் பாதையில் (தானே).

அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்: (ஆம்) அல்லாஹ்வின் பாதையில் (தான்).

இந்த ஆடவர் அல்லாஹ்வின் பாதையில் (கொல்லப்படுவார்).

இமாம் மாலிக் மற்றும் ஹாகிம் இதனைப் பதிவு செய்துள்ளார்கள் ஜாமிஉல் உஸூலின் ஆய்வாளர் இதன் அறிவிப்புத் தொடர் ஹஸன் எனக் கூறினார்.

## சுத்தம் இஸ்லாத்தில் உள்ளதாகும்

1. ஜாபிர் பின் அப்துல்லாஹ் அறிவித்துக் கூறுகிறார்கள்:

(எங்களைச்) சந்திப்பதற்காக எங்கள் வீட்டிற்கு அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வந்தடைந்தார்கள், அப்போது, அவருடைய முடி கலைந்திருந்த தலைவிரி கோலத்தில் இருந்த ஓர் ஆடவரை அவர்கள் கண்டு விட்டு தன்னுடைய முடியை அமைதிப்படுத்தும் (தலைவாரிக் கொள்ளும் சாதனம்) எதையாவது அவர் பெற்றிருக்கவில்லையா? மற்றோர் ஆடவரையும் அவர்கள் காண்கிறார்கள் அவரின் மீதோ அழுக்கடைந்த ஆடையிருந்தது அ(ப்போத)வர்கள் தன் ஆடையை கழுவிக் கொள்வதற்குரிய தண்ணீரை அவர் பெற்றிருக்கவில்லையா? என்று கேட்டார்கள்.

இதனை அஹ்மது மற்றும் அவரல்லாதவர் பதிவு செய்து ஹாகிம் அதை ஸஹீஹ் எனக் கூறியுள்ளார்கள், தஹபீயும் ஒப்பதுல் தெரிவித்துள்ளார்கள்.

2. மேலும், "எவருக்கு முடியிருக்குமோ, அவர் (சீவி) அதை கவுரவிக்கவும்" என்று அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

அபூதாவூது இதனைப் பதிவு செய்து, பத்ஹுல்வில் அல்ஹாபிள் அவர்கள் ஹஸன் தரத்தையுடையதெனக் கூறினார்கள்.

3. மேலும், (காரியங்களில்) பத்து மார்க்கத்தில் உள்ளனவாகும்:

மீசையைக் குறைத்தல், தாடியை நிறைவாக வைத்தல், மிஸ்வாக்குச் செய்தல், மூக்கினுள் தண்ணீர் செலுத்(தி சுத்தப்படுத்)துதல், நகங்களை வெட்டுதல், விரலின் இடுக்குகளைக் கழுவுதல், அக்குள் முடியை பிடுங்குதல் (நீக்குதல்) தொப்புளுக்குக் கீழே இன உறுப்பிற்கு மேல்பகுதி மற்றும் அதைச் சுற்றியுள்ள முடியை நீக்குதல், தண்ணீரால் சுத்தம் செய்தல், வாய் கொப்பளித்தல் ஆகியவை, என அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

இதனை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

4. மேலும், (காரியங்களில்) ஐந்து மார்க்கத்தில் உள்ளனவாகும், ஆண் உறுப்பின் முன் பகுதியிலிருந்து தோலை(த் துண்டித்து) நீக்கி விடுதல் கத்னா செய்தல் ஆண் மற்றும் பெண்ணின் இன உறுப்பின் மேல்பகுதி மற்றும் அதைச் சுற்றியுள்ள பகுதியிலிருக்கும் முடியை நீக்குதல் நகங்களை வெட்டுதல், அக்குள் முடியைப் பிடுங்குதல், (நீக்குதல்) மீசையைக் குறைத்தல்

ஆகியவை என அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.

புகாரீ மற்றும் முஸ்லிம் ஒருமித்துப் பதிவு செய்துள்ளார்கள்.

5. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

“என் உம்மத்தவருக்கு அல்லது மனிதர்களுக்கு நான் சிரமம் கொடுக்காதிருந்திருப்பின் ஒவ்வொரு தொழுகையின் போது மிஸ்வாக்குச் செய்யுமாறு நான் கட்டளையிட்டிருப்பேன்”.

புகாரீ மற்றும் முஸ்லிம் ஒருமித்துப் பதிவு செய்துள்ளார்கள்.

6. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: “மிஸ்வாக்குச் செய்து வாயை சுத்தப்படுத்தக் கூடியது இரட்சகனின் பொருத்தத்திற்குரியது”.

நஸாயீ மற்றும் அவரல்லாதவர் அதைப் பதிவு செய்து நவவீ மற்றும் அவரல்லாதவர் அதைச் ஸஹீஹ் எனக் கூறியுள்ளனர்.

## ஸலாம் கூறுவதின் ஒழுக்கங்கள்...

1. உயர்ந்தோனாகிய அல்லாஹ் கூறுகிறான்:

وَإِذَا حُيِّيْتُم بِتَحِيَّةٍ فَحَيُّواْ بِأَحْسَنَ مِنْهَا أَوْ رُدُّوهَا

"*(எவராலும்) உங்களுக்கு முகமன் (ஸலாம்) கூறப்பட்டால் (அதற்குப் பிரதியாக) அதைவிட அழகான (வாக்கியத்)தைக் கொண்டு நீங்கள் முகமன் கூறுங்கள் அல்லது அதனையே திருப்பிக் கூறுங்கள்*". (அந்நிஸா அத்தியாயம் வசனம் 86)

2. மேலும், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: மனிதர்களில் அல்லாஹ்விடம் மிக முன்னுரிமையுடையவர் அவர்களில் ஸலாம் கூறுவது கொண்டு எவர் ஆரம்பிக்கின்றாரோ அவராவார்.

இதை அபூதாவூது அஹ்மது ஆகியோர் பதிவு செய்துள்ளனர். அதன் அறிவிப்புத் தொடர் மிகவும் ஸஹீஹ் ஆகும்.

3. இஸ்லாத்தில் உள்ள நற்பண்புகளில் மிகச் சிறந்தது எது? என ஓர் ஆடவர் அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் கேட்டார். அ(தற்க)வர்கள், உணவை (மற்றவருக்கு) நீர் உண்ணக் கொடுப்பது, நீர் அறிந்தவருக்கும் நீர் அறியாதவருக்கும் ஸலாமை நீர் கூறுவது என்று கூறினார்கள்.

புகாரீ மற்றும் முஸ்லிம் ஒருமித்துப் பதிவு செய்துள்ளார்கள்.

4. மேலும், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறுகிறார்கள்: "என் உயிர் எவன் கையிலிருக்கிறதோ, அத்தகையவனின் மீது சத்தியமாக! நீங்கள் விசுவாசம் கொள்ளாதவரை சுவனத்தில் பிரவேசிக்க மாட்டீர்கள், நீங்கள் ஒருவரை ஒருவர் நேசிக்காதவரை விசுவாசங் கொள்ளவும் மாட்டீர்கள். ஒரு விஷயத்தைப் பற்றி நான் உங்களுக்கு அறிவித்துத்தர வேண்டாமா? அதை நீங்கள் செய்தால் உங்களில் ஒருவரை ஒருவர் நேசிப்பீர்கள்; (அதுவே) உங்களுக்கு மத்தியில் ஸலாமைப் பரப்புவது.

இதனை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

5. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: வாகனித்திருப்பவர் நடந்து செல்பவருக்கு ஸலாம் கூறுவார், இன்னும்

நடந்து செல்பவர் அமந்திருப்பவர் மீது ஸலாம் கூறுவர்; (எண்ணிக்கையில்) குறைவானவர்கள் அதிகமானோருக்கு ஸலாமும் கூறுவார்கள்.

புகாரி மற்றும் முஸ்லிம் ஒருமித்துப் பதிவு செய்துள்ளார்கள்.

6. "நிச்சயமாக அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், சிறார்களுக்குச் சமீபமாக சென்றார்கள், அப்போது அவர்களுக்கு ஸலாம் கூறினார்கள்" என அனஸ் ரளியல்லாஹு அன்ஹு அறிவித்துக் கூறுகிறார்கள்.

புகாரி மற்றும் முஸ்லிம் ஒருமித்துப் பதிவு செய்துள்ளார்கள்.

7. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "வேதக்காரர்கள் உங்களுக்கு ஸலாம் கூறினால் "வ அலைக்கும்: என்று நீங்கள் (பதிலில்) கூறுங்கள்" என்று கூறினார்கள்.

புகாரி மற்றும் முஸ்லிம் ஒருமித்துப் பதிவு செய்துள்ளார்கள்.

8. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் ஓர் ஆடவர் வந்து 'அஸ்ஸலாமு அலைக்கும்' என்று கூறினார். அவருக்குப் பதில் ஸலாம் கூறினார்கள், பின்னர் அவர் அமர்ந்து விட்டார், அப்போது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "பத்து" (நன்மைகள் உண்டு) என்று கூறினார்கள், பின்னர் மற்றொருவர் வந்து "அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மத்துல்லாஹ்" என்று கூறினார் அவருக்குப் பதில் ஸலாம் கூறினார்கள் பின்னர் அவர் அமர்ந்து விட்டார். அப்போது "இருபது" (நன்மைகள் உண்டு) என்று கூறினார்கள். பின்னர் மற்றொருவர் வந்து, "அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மத்துல்லாஹி வபரகாத்துஹு" என்று கூறினார். அவருக்குப் பதில் ஸலாம் கூறினார்கள் பின்னர் அவர் அமர்ந்து விட்டார். அப்போது "முப்பது" (நன்மைகள் உண்டு) என்று கூறினார்கள்.

இதைத் திர்மிதி அபூதாவூது ஆகியோர் பதிவு செய்து அல்பானீ மற்றும் அவரல்லாதோர் அதன் அறிவிப்புத் தொடர் ஹஸன் எனக் கூறியுள்ளனர்.

9. மேலும், அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:

"ஒரு வீட்டினுள் நீங்கள் நுழையும் பொழுது அவ்வீட்டாருக்கு ஸலாம் கூறுங்கள் இன்னும் நீங்கள் வெளியேறும் பொழுது அவ்வீட்டாருக்கு ஸலாம் கூறி விடைபெறுங்கள்.

இதனை பைஹகீ பதிவு செய்து மிஷ்காத்தில் அல்பானீ ஹஸன்

தரத்துடையதெனக் கூறினார்கள்.

10. மேலும், அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:

“எனதருமை மகனே! உம் வீட்டாரிடம் நீர் பிரவேசிக்கும் பொழுது ஸலாம் கூறுவீராக! அது உமக்கு மற்றும் அவர்களுக்கு பரக்கத்தாக ஆகிவிடும்”.

திர்மிதி இதனைப் பதிவு செய்து மிஷ்காத்தில், அது பலவழியில் பதிவாகி யுள்ளதால் ஹஸன் தரத்தை அடைகிறது என அல்பானீ கூறியுள்ளார்கள்.

11. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:

“ஸலாமுக்கு முன்பு எவராவது பேசத் தொடங்கிவிட்டால் நீங்கள் அவருக்கு முகமன் (ஸலாம்) கூறாதீர்கள்” ஹில்யாவில் இதனைப் பதிவு செய்து ‘ஸிலஸிலா’வில் அல்பானீ ஹஸன் தரத்தையுடையதெனக் கூறியுள்ளார்கள்.

12. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:

“உங்களிலொருவர் தன்னுடைய (முஸ்லிம்) சகோதரனை சந்தித்தால் அவருக்கு ஸலாம் கூறவும், அவ்விருவருக் கிடையில் மரமோ அல்லது சுவரோ, அல்லது கல்லோ குறுக்கிட்டுவிட்டுப் பின்னர் அவரை அவர் சந்தித்தாலும் அவருக்கு அவர் ஸலாம் கூறவும்”.

இதை அபூதாவூத் பதிவு செய்து அல்பானீ இதன் அறிவிப்புத் தொடர் மிகச் ஸஹீஹ் என்று கூறியும் உள்ளார்கள்.

13. மேலும், அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: ஒரு கூட்டத்தினர் அவர்கள் (எங்காவது) சென்றால் அவர்களில் ஒருவர் (அங்கிருப்போருக்கு) ஸலாம் கூறுவது போதுமானதாகும், (அதுபோன்றே) உட்கார்ந்திருப்போருக்காக அவர்களில் ஒருவர் பதில் ஸலாம் கூறுவதும் போதுமானதாகும்” இதை அபூதாவூது பதிவு செய்து இதன் அறிவிப்புத் தொடர் ஸஹீஹ் எனவும் அல்பானீ கூறியுள்ளார்.

14. நிச்சயமாக அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஒரு தேவைக்காக என்னை அனுப்பி வைத்தார்கள், பின்னர் அவர்களை தொழுது கொண்டிருந்தவர்களாக நான் சந்தித்தேன், (அந்நிலையில்) அவர்களுக்கு நான் ஸலாம் கூறினேன். (அதற்குப் பதிலுக்காக) என்பால் சைக்கினை செய்தார்கள், அவர்கள் (தொழுகையை) முடித்துக் கொண்டபோது என்னை அவர்கள் அழைத்து “நிச்சயமாக கொஞ்சமுன்பு ஸலாம் கூறினீர் நானோ தொழுது கொண்டிருந்தேன்” என்று அவர்கள்

கூறினார்கள், என ஜாபிர் அறிவிக்கிறார்கள்.

இதை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

அச்சமயத்தில் அவர்களுடைய வாகனத்தை கிழக்குப்பக்கம் திருப்பியவர்களாக இருந்தார்கள்.

15. இப்னு உமர் ரளியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவித்துக் கூறுகிறார்கள்:

பிலால் அவர்களிடம், "நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை, அவர்கள் தொழுது கொண்டிருக்க அவர்களுக்கு மற்றவர்கள் ஸலாம் கூறுகின்ற நேரத்தில் எவ்வாறு அவர்களுக்கு பதில் கூற நீர் கண்டீர்" என்று நான் கேட்டேன், அ(தற்க)வர்கள், இவ்வாறு என சைக்கினை செய்து தனது முன் கையை விரித்துக் காட்டினர்.

இதை அபூதாவூது மற்றும் திர்மிதி பதிவு செய்துள்ளனர், (திர்மிதியான) அவர் அதன் தரம் ஹஸன் எனவும் கூறியுள்ளார் மேலும் தொழுது கொண்டிருக்கும் ஒருவருக்கு எவராவதொருவர் ஸாலம் கூறினால், (நாவால்) மொழியாது சைக்கினையின் மூலம் அவருக்கு அவர் பதில் கூறுவார் என்பதற்கு இந்த ஹதீஸ் ஆதாரமாகும். மேலும் குர்ஆனை ஓதிக் கொண்டிருப்பவர் (பாடங்களைப் படித்து) நினைவுபடுத்திக் கொண்டிருப்பவர், பாடம் நடத்திக் கொண்டிருப்பவர் ஆகியோருக்கு ஸலாம் கூறுவது ஆகும் எனவும் அறிந்து கொள்கிறோம்.

## கைலாகு செய்தல், முத்தமிடுதல் அல்ல

1. அபுல் கத்தாபு கதாதா அறிவித்துக் கூறுகிறார்கள்:

அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய தோழர்களில் கைலாகு செய்தல் இருந்ததா? என நான் அனஸிடம் கேட்டேன் அ(தற்க)வர்கள் 'ஆம்' என்று கூறினார்கள்.

இதை புகாரீ பதிவு செய்துள்ளார்கள்.

2. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:

"இரு முஸ்லிம் ஒருவரை ஒருவர் சந்தித்துப் பின்னர் அவ்விருவரும் கைலாகு செய்து கொள்வர்களானால் அவ்விருவரும் பிரிவதற்கு முன்பு அவ்விருவருக்கும் பாவமன்னிக்கப்பட்டே தவிர பிரிவதில்லை"

அபூதாவூது மற்றும் அவரல்லாதோர் இதைப்பதிவு செய்துள்ளனர்.

ரியாளுஸ்ஸாலிஹீனின் பரிசீலனையாளர் கூறியிருப்பதைப் போன்று அதன் புற ஆதாரங்களால் அது ஹஸன் தரத்தையுடைய ஹதீஸாகும்.

3. மேலும், அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:

சில் ஆடவர்கள் நாளை உங்களை வந்தடைவர் (யமன் தேசவாசிகளான) அவர்கள் இஸ்லாத்திற்கு (அதை ஏற்று நடந்திட) இதயங்களால் மிக்க இரக்க குணமுடையவர்கள் அவ்வாறே அஷ்அரிய்யூன்கள் வந்தார்கள் அவர்களில் அபூமூஸா அல்அஷ்அரீ இருந்தனர். மதீனாவிற்கு அவர்கள் சமீபமாக இருந்தபோது துணுக்குக் கவிகளைப் பாட ஆரம்பித்து "நாளை மிக்க விருப்பமானவர்களை முஹம்மது மற்றும் அவர்களின் தோழர்களை நாம் சந்திப்போம்" என்று கூறியும் கொண்டனர் பின்னர் அவர்கள் (மதினாவை) வந்தடைந்து போது ஒருவரோடு ஒருவர் முஸாஃபஹா - கைலாகு செய்து கொண்டனர், அவர்கள் தான் முஸாபஹா - கைலாகு செய்வதை புதிதாகச் செய்தவர்களாவர்.

இதை அஹ்மது பதிவு செய்து, அதன் அறிவிப்புத் தொடர் முஸ்லிம் அவர்களின் நிபந்தனையின்படி ஸஹீஹ் என்று அல்முன்திரீ கூறினார்கள்.

4. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:

"நிச்சயமாக ஒரு விசுவாசி (மற்றொரு) விசுவாசியை சந்தித்து அவருக்கு ஸலாம் கூறி அவரின் கையையும் பிடித்து , அவரை முஸாஃபஹா கைலாகு செய்து விடுவாராயின், அவ்விருவரின் குற்றங்கள், மரங்களிலிருந்து இலைகள் உதிர்வது போன்று உதிர்ந்துவிடும்".

தர்கீபில் முன்திரீ இதைக் கூறியுள்ளார்கள், அதன் அறிவிப்பாளர்களில் குறையுள்ளோர் இல்லை என நான் அறிவேன் என்றும் கூறியுள்ளார்கள்.

5. அனஸ் ரளியல்லாஹு அன்ஹு அறிவித்துக் கூறுகிறார்கள்:

அல்லாஹ்வின் தூதர் அவர்களே! எங்களிலுள்ள ஓர் ஆடவர் தன் சகோதரரை அல்லது தன் நண்பரை சந்திக்கிறார், (அப்போது) அவருக்காக அவர் குனிவாரா? என ஓர் ஆடவர் கேட்டார், அ(தற்க)வர்கள் "இல்லை" என்று கூறினார்கள் (அவ்வாறெனில்) அவரை அவர் கட்டியணைத்து அவரை முத்தமிடவும் செய்வாரா? என்று கேட்டார் அ(தற்க)வர்கள் 'இல்லை' எனவும்

கூறினார்கள் அவ்வாறெனில் அவரது கையைப் பிடித்து அவரை அவர் கைலாகு செய்வாரா? என்று கேட்டார், அதற்கவர்கள் ‘ஆம்’ என்று கூறினர்.

திர்மிதி இதை அறிவித்து ஹஸன் தரத்தையுடைய ஹதீஸ் எனவும் கூறினர். ரியாளுஸ்ஸாலிஹீனின் பரிசீலனையாளர் அதற்கு ஒப்புதலும் தெரிவித்துள்ளனர்.

மேலும் அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய தோழர்கள் பயணத்திலிருந்து திரும்பி வருவார்களானால் ஒருவரை ஒருவர் கட்டி அணைத்துக் கொள்வர். ஆனாலும், கையை முத்தமிடுதல் அது பற்றிய பாடத்தில் அநேக ஹதீஸ்கள் மற்றும் நபித் தோழர்களின் செயல்முறைகள் உள்ளன, அவை அனைத்தும் அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பற்றி அது நிரூபணமாகியுள்ளது என்பதைத் தெரிவித்துக் கொண்டிருக்கின்றன. ஆகவே ஒரு ஆலிமின் கையை அவர் பெருமை கொண்டவராக தன் கையை நீட்டாதிருப்பின் முத்தமிடுவது ஆகும் என நாம் காண்கிறோம். மேலும் அது பரக்கத்து தேடுவதற்குரிய வழியாகவும் இருக்கக் கூடாது முத்தமிடுவதை வழக்கமாகவும் எடுத்துக் கொள்ளப்படாதிருக்க வேண்டும் முஸாஃஃபஹாவை வீணடி(த்து ஒழித்து)க் கட்டப்படாமலும் (முஸாஃஃபஹாவைச் செய்து விட்டு அக்கையை) நெற்றியின் மீது வைக்கப்படாதுமிருக்க வேண்டும்.

## பெண்களிடம் நான் கைலாகு செய்யமாட்டேன்.

1. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:

“நிச்சயமாக பெண்களிடம் நான் கைலாகு செய்யமாட்டேன், நிச்சயமாக நூறு பெண்களுக்கு என்னுடைய கூற்று ஒரு பெண்ணுக்கு என்னுடைய கூற்றைப் போன்றதே”

திர்மிதி இதைப்பதிவு செய்து ஹஸன் ஸஹீஹ் தரத்தில் உள்ளது எனக் கூறியும் உள்ளார்கள்.

2. மேலும், ஆயிஷா ரளியல்லாஹு அன்ஹா கூறுகிறார்கள்:

அல்லாஹ்வின் மீது சத்தியமாக! பைஅத் செய்தபோது எந்தப் பெண்ணையும் அவர்களுடைய கை தொட்டதில்லை, “நிச்சயமாக உன்னிடம் நான் பைஅத்து செய்து கொண்டேன்” என்று அவர்களுடைய கூற்றின் மூலமே அல்லாது அ(ப்பெண்களான)வர்களிடம் அவர்கள் பைஅத்துச் செய்யவில்லை”.

இதைப் புகாரீ பதிவு செய்துள்ளார்கள்.

3. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:

மார்க்கத்தில் தொட அனுமதியில்லாத ஒரு பெண்ணைத் தொடுவதை விட இரும்பினால் ஆன ஊசியைக் கொண்டு உங்களில் ஒருவரின் தலையில் குத்தப்படுவது மிகச் சிறந்ததாகும்.

தப்ரானீ இதைப்பதிவு செய்துள்ளார்கள். ஸில்ஸிலாவில் அல்பானீ இதைச் ஸஹீஹ் தரத்தையுடையதெனக் கூறினார்கள்.

## தும்மல், மற்றும் கொட்டாவி பற்றிய ஒழுக்கம்

1. அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:

“நிச்சயமாக அல்லாஹ், ‘தும்மலை’, விரும்புகிறான், ‘கொட்டாவியை’ வெறுக்கிறான், ஆகவே உங்களில் ஒருவர் தும்மிவிட்டு, அல்லாஹ்வையும் அவர் (அல்ஹம்துலில்லாஹ் என்று கூறி) புகழ்ந்து விட்டால், அதைச் செவியேற்ற ஒவ்வொரு முஸ்லிமின் மீதும் அவருக்காக ‘யர்ஹமுக்கல்லாஹ்’ (அல்லாஹ் உமக்கு அருள் செய்வானாக!) என்று கூறுவது கடமையாகி விட்டது. ஆனாலும் ‘கொட்டாவி’, நிச்சயமாக அது ஷைத்தானிடமிருந்தே உள்ளதாகும். ஆகவே உங்களில் ஒருவர் கொட்டாவி விட்டால், அவரால் முடிந்த வரை அதை (அடக்கி விடவும்) ஏனெனில், உங்களில் ஒருவர் கொட்டாவி விடும்பொழுது அவரைப் பார்த்து நிச்சயமாக ஷைத்தான் சிரிக்கிறான்.

இன்னும் முஸ்லிமின் அறிவிப்பில்: “உங்களில் ஒருவர் (கொட்டாவி விடும் போது) ‘ஆஹ்’ என்று கூறினால் அவனிலிருந்து ஷைத்தான் சிரிக்கிறான் என உள்ளது.

2. மேலும், அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:

“உங்களில் ஒருவர் தும்மினால், “அல்ஹம்துலில்லாஹ்” என்று அவர் கூறவும் (அதைச் செவியேற்கும்) அவருடைய சகோதரர் அல்லது அவரின் (நண்பர்) உடனிருப்பவர், “யர்ஹமுகல்லாஹ்” எனவும் கூறவும்; அவருக்காக ‘யர்ஹமுக்கல்லாஹ்’ என அவர் கூறிவிட்டால் (தும்மியவர்) “யஹ்தீமுக்குல்லாஹு வயுஸ்லிஹு பாலக்கும்” (அல்லாஹ் உங்களுக்கு

நேர்வழிகாட்டி உங்களுடைய காரியங்களை சீர்படுத்தியும் வைப்பானாக!) என்று கூறவும்.

3. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:

“உங்களில் ஒருவர் தும்மிவிட்டு(ப் பின்னர்) அவர் ‘அல்ஹம்துலில்லாஹ்’ என்று கூறினால், ‘யர்ஹமுக்கல்லாஹ்’ என்று அவருக்காக நீங்கள் கூறுங்கள் அவர் (தும்மியபிறகு அல்ஹம்துலில்லாஹ் எனக் கூறி) அல்லாஹ்வைப் புகழாவிட்டால், நீங்கள் அவருக்கு “யர்ஹமுகல்லாஹ்” எனக் கூறவேண்டாம்”.

இதை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

4. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:

“உங்களில் ஒருவர் கொட்டாவி விட்டால், அவரின் கையை அவரது வாயின் மீது வைத்துப் பிடித்துக் கொள்ளவும், ஏனெனில் நிச்சயமாக ஷைத்தான் நுழைந்து விடுகிறான்”.

இதை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

5. ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தும்முவார்களானால் தங்களுடைய முகத்தை தங்களது கையினால் அல்லது தங்களது ஆடையினால் மூடிக் கொள்பவர்களாக இருந்தார்கள். இன்னும் அதனால் தங்களது சப்தத்தை தாழ்த்தி (அடக்கிக்) கொள்வார்கள்.

இதனைத் திர்மிதி பதிவு செய்து ஹஸன், ஸஹீஹான தரத்தையுடையதெனவும் கூறியுள்ளார்கள்.

6. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:

தும்மியவருக்கு மூன்று முறை யர்ஹமுக்கல்லாஹ் எனக் கூறுவீராக! அவர் அதிகமாக்கினால் அவருக்கு யர்ஹமுக்கல்லாஹ் கூறுவீராக! (மூன்று முறைகளுக்குப் பிறகு) நீர் நாடினால் இல்லை! (சொல்லாமலுமிருக்கலாம்).

7. நாஃபிஉ அறிவித்துக் கூறுகிறார்கள்:

இப்னு உமர் அவர்களுக்குப் பக்கத்தில் ஒரு ஆடவர் தும்மிவிட்டுப் பின்னர் “அல்ஹம்துலில்லாஹ் வஸ்ஸலாமு அலா ரசூலில்லாஹ்” என்று கூறினார். (அதைக் கேட்ட) இப்னு உமர் அவர்கள் “நானும் அல்ஹம்துலில்லாஹ் வஸ்ஸலாமு அலா ரசூலில்லாஹ்” என்று கூறலாம்; அது அவ்வாறல்ல! (ஏனெனில்) அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் “அல்ஹம்துலில்லாஹி அலா குல்லி ஹால்” என்று நாம்

கூறவேண்டுமென நமக்குக் கற்றுத்தந்துள்ளார்கள்” என்று கூறினார்கள்.

இதனைத் திர்மிதி பதிவு செய்து இன்னும் அல்பானீ ஹஸன் தரத்தையுடைய ஹதீஸ் எனக் கூறியுள்ளார்கள்.

அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய அறிவுரைகளை (ஏற்று) செயல்படுவதே மிக்க முன்னுரிமைக்குரியதாகும் என்று இந்த ஹதீஸ் தெரிவித்துக் கொண்டிருக்கிறது.

## நரையை சாயம் தேய்த்து மாற்றுங்கள், மற்றும் கருப்புச் சாயம் தேய்ப்பதை தவிருங்கள்.

1. உயர்ந்தோனாகிய அல்லாஹ் கூறுகிறான்:

وَمَا آتَاكُمُ الرَّسُولُ فَخُذُوهُ وَمَا نَهَاكُمْ عَنْهُ فَانتَهُوا

*“அன்றியும் (நம்முடைய) தூதர் உங்களுக்கு எதைக் கொடுத்தாரோ! அதை நீங்கள் (மனமொப்பி) எடுத்துக் கொள்ளுங்கள், அவர் எதனை விட்டும் தடுத்தாரோ அதிலிருந்து நீங்கள் விலகிக் கொள்ளுங்கள்.”* (அல்ஹஷ்ர் அத்தியாயம் வசனம் 7)

2. மேலும் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:

“மீசைகளை கத்தரி(த்துக் குறை)யுங்கள், மற்றும் தாடிகளை நீங்கள் நிறைவாக வைத்து; நெருப்பை வணங்குவோருக்கு மாற்றம் செய்யுங்கள்.”

இதை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

3. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:

நிச்சயமாக யூதர்கள் மற்றும் கிறிஸ்தவர்கள் (தங்கள் தாடிகளுக்கு) சாயம் தேய்த்துக் கொள்ளமாட்டார்கள், ஆகவே, அவர்களுக்கு மாற்றம் செய்யுங்கள்”.

இதைப் புகாரீ பதிவு செய்துள்ளார்கள்.

4. மேலும், ஜாபிர் ரளியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவித்துக் கூறுகிறார்கள்:

மக்கா வெற்றி நாளின் போது அபூகுஹாஃபா அவர்களைக் கொண்டு வரப் பட்டது. அவரின் தாடி மற்றும் அவரின் தலை (முடி)யானது வெண்மையில் தும்பைப் பூவைப் போன்று இருந்தது (அவ்வாறு கண்ட) அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "இதை எ(ந்த நிறத்)தைக் கொண்டாவது மாற்றுங்கள், மற்றும் கறுப்பு நிறத்தைத் தவிருங்கள்" என்று கூறினார்கள்.

இதை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

5. மேலும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:

"கடைசி காலத்தில் ஒரு கூட்டத்தார் புறாக்களின் அடிப்பாகங்களைப் போன்று இந்த(க் கறுப்பு சாயத்தைக்) கொண்டு சாயம் தேய்த்துக் கொள்வார்கள், (அவ்வாறு செய்யும்) அவர்கள் (முந்தி சுவனத்திற்குச் செல்வோருடன் செல்ல) சுவனத்தின் வாடையைப் பெற மாட்டார்கள்.

இதை அபூதாவூது, நஸயீ ஆகியோர் பதிவு செய்துள்ளனர், மேலும் அல்பானீ மிஷ்காத்தில் இதன் தரம் ஸஹீஹ் எனக் கூறியுள்ளார்கள்.

6. "நிச்சயமாக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், முடி நீக்கப்படாத தோலினால் ஆன காலணிகளை அணிந்து கொள்பவர்களாக இருந்தார்கள்", இன்னும் தங்களது தாடிக்கு மஞ்சள் தேய்த்துக் கொள்வார்கள், இப்னு உமர் அவர்களும் அதைச் செய்பவர்களாக இருந்தார்கள்.

நஸாயீ இதைப்பதிவு செய்து, மிஷ்காத்தில் அல்பானீ ஸஹீஹ் தரத்தையுடைய தெனவும் கூறினார்கள்.

7. மருதாணியினால் சாயம் தேய்த்துக் கொண்ட ஓர் ஆடவர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைக் கடந்து சென்றார், அ(ப்போத)வர்கள், "இது என்ன அழகாக உள்ளது? என்று கூறினார்கள், மற்றொருவர் கடந்து சென்றார்; அவர் மருதாணி மற்றும் (கசக்கிப் பிழிந்தால் சிவப்பின்பால் சாயலுள்ள கருப்பு நிறம் கிடைக்கக் கூடிய) 'கத்மு',வினால் சாயம் தேய்த்திருந்தார், (அதைப் பார்வை செய்த) அவர்கள், "இது அதைவிட மிக்க அழகாக உள்ளது" என்று கூறினார்கள். பின்னர் மற்றொருவர் கடந்து சென்றார். அவர் மஞ்சளால் சாயம் தேய்த்திருந்தார் (அதைப் பார்வை செய்த) அவர்கள் "இது அவை ஒவ்வொன்றையும் விட மிக்க அழகாக உள்ளது". என்று கூறினார்கள்.

இதை அபூதாவூது பதிவு செய்துள்ளார்கள், மேலும் மிஷ்காத்தில் அல்பானீ

அவர்கள், இதன் அறிவிப்புத் தொடர் மிக உறுதியானதாகும் என்று கூறினார்கள்.

8. மேலும் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:

“(சாயம் தேய்த்து) நரையை மாற்றுங்கள், யூதர்களுக்கு ஒப்பானவர்களாகவும் நீங்கள் ஆகாதீர்கள்.”

நஸாயீ இதைப் பதிவு செய்துள்ளார்கள். மேலும் ஜாமிஉல் உஸூலின் ஆய்வாளர் இதன் ஷவாஹிது (இதை வலுப்படுத்தும் மற்ற அறிவிப்புத் தொடர்)களின் நிமித்தம் இது ஸஹீஹ் தரத்தையுடையதாகும் எனக் கூறினார்.

9. உஸ்மான் பின் அப்துல்லாஹ் பின் மவ்ஹப் அறிவித்துக் கூறுகிறார்கள்:

உம்முஸலமா ரளியல்லாஹு அன்ஹா அவர்களிடம் நான் நுழைந்தேன், சாயம் தோய்ந்த நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய முடியிலிருந்து ஒரு முடியை எங்களிடம் வெளிப்படுத்தி(க் காட்டி)னார்கள்.

மற்றுமொரு அறிவிப்பில்: நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய மனைவியரான உம்மு ஸலமா நிச்சயமாக அவருக்கு அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய சிவப்பு நிற முடியைக் காட்டினார்கள்.

இதைப் புகாரீ பதிவு செய்துள்ளார்கள்.

10. அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், அவர்களின் தாடிகள் வெண்மையான “அன்ஸார்களின் கூட்டத்தினரே! (உங்களது தாடிகளை) சிவப்பாக்குங்கள் அல்லது மஞ்சளாக்குங்கள் இன்னும் வேதக்காரார்களுக்கு மாற்றம் செய்யுங்கள்” என்று கூறினார்கள்.

11. நிச்சயமாக அ(வ்வாறு செய்வதான)து கடமையான ஒன்றாகும் என்றும் ஒருமுறையாவது செய்வது கடமையானதாகும் என்றும் சாயம் தேய்ப்பதை விட்டுவிட்டு வேதக்காரர்களுக்கு ஒப்பான எவரையும் நான் விரும்பமாட்டேன் என்றும் கறுப்பு (சாயம் தேய்த்துக் கொள்ளும்) விஷயத்தில் ஷாஃபிய்யாக்களை போன்று அவர்களுக்கு இருகருத்துக்கள் உண்டு. மிகப்பிரபல்யமானது: வெறுக்கப்பட்டதாகும், மற்றும் தடுக்கப்பட்ட (ஹராமான)தாகும் அவ்வாறு செய்வது கொண்டு ஏமாற்றுகிறவனுக்கு தண்டனை உறுதியானதாகும்.

பாகம்10, பக்கம் 355 ஃபத்ஹுவில் இதைக் கூறியுள்ளார்கள்.

## அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களுக்கு நம்முடைய கடமை

அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்காக உரிமைகளும் கடமைகளும் உண்டு ஒரு முஸ்லிம் அவற்றை நிறைவேற்றினால் அதன் மூலம் அவருக்கு அல்லாஹ் பயனளிப்பான். (மறுமையில்) அவர்களுடைய பரிந்துரையை நல்குவதன் மூலம் அவரை மகிழ்ச்சியடையச் செய்வான் (மறுமையில் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களுடைய நீர்த் தடாகத்திற்கு வர வைப்பது கொண்டு அவரை அவன் கவுரவிக்கச் செய்வான் அவர்களுடைய பெரும் பாக்கியமுள்ள தண்ணீரிலிருந்து அவருக்கு குடிக்கின்ற நற்பேரை அவன் நல்குவான்.

தான் (தன்) குடும்பம் செல்வம், பிள்ளைகள் ஆகிய அனைத்தையும் விரும்புவதை விட (அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களை மிக்க அதிகமாக அவர் விரும்புதல்.

அல்லாஹ்வை அவனை மட்டுமே அழைத்துப் பிரார்த்தித்தல், அவனிடமே உதவி தேடுதல், உண்மை அமானிதம், நற்குணங்கள் ஆகியவை மற்றும் சங்கை மிக்க குர்ஆன் இன்னும் ஸஹீஹான ஹதீஸ்களில் வந்துள்ள இன்னபிறவற்றிலிருந்து அவர்கள் கட்டளையிட்டுவிட்ட ஒவ்வொன்றிலும் அவர்களுக்குக் கீழ்படிந்து நடத்தல்.

எதிலிருந்து அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், எச்சரிக்கை செய்துள்ளார்களோ அத்தகைய இணைவைத்தலில் இருந்து (தன்னை முற்றிலும் நீக்கிக் கொள்ளும் விஷயத்தில் மிக்க) எச்சரிக்கையாக இருத்தல் அதுவே, நபிமார்கள் மற்றும் வலிமார்களை (அழைத்து அவர்களிடம் உதவி, ஒத்தாசைகளை வேண்டுவதற்கென உரியவனான அல்லாஹ்விற்குரிய) வணக்கத்தை அவனல்லாத (அவனின் அடியார்களான)வர்களுக்கு (மாற்றித்) திருப்பி விடுவதாகும், “அல்லாஹ்வை யன்றி (அவனுக்கு) நிகரானதை அவர் அழைத்துக் கொண்டிருப்பவராக எவர் இறப்பெய்தி விடுகிறாரோ, அவர் நரகம் புகுவார்” என அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் திண்ணமாக கூறியுள்ளார்கள், (ஆகவே வல்ல அல்லாஹ்விற்கு நிகராக அவனுடைய படைப்பினங்களில் உள்ள மிகச்சிறந்தவர்களான நபிமார்களையோ, வலிமார் களையோ நன்மையை வேண்டித்தர அல்லது தீமையை நீக்கித்தர வேண்டி அழைத்தல் இணைவைத்தலாகும் என்பது தெளிவு, இது பற்றியே மேற்கூறப்பட்ட ஹதீஸில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்

எச்சரிக்கிறார்கள்).

5. "(நபியே!) மிக உயர்வானவனாகிய உமதிரட்சகனின் பெயரை நீர் புகழந்து துதி செய்வீராக!" என்ற உயர்ந்தோனாகிய அவனுடைய கூற்று மற்றும் "நிச்சயமாக அல்லாஹ் ஒரு (வேத) நூலை எழுதினான் அது அர்ஷுக்கு மேல் அவனிடம் உள்ளது" என்ற ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய கூற்று ஆகியவற்றை உறுதி(யாக உண்மை)ப் படுத்தி அல்லாஹ் தன்னுடைய அர்ஷின் மீது உயர்ந்திருப்பது போன்ற (அல்லாஹ்வினுடைய) பண்புகளிலிருந்து குர்ஆன் மற்றும் (அல்லாஹ்வின்) தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் தெரிவித்தவற்றை நாம் நம்பிக்கை கொள்ளுதல் மேலும்,

*"நீங்களிருவரும் பயப்படவேண்டாம், நிச்சயமாக நான் உங்களிரு வருடன் (யாவையும்) கேட்டுக் கொண்டும் பார்த்துக் கொண்டும் இருப்பேன் என (அல்லாஹ்வாகிய) அவன் கூறுகிறான் ."*

என்ற உயர்ந்தோனாகிய அவனின் கூற்றிக்கிணங்க நிச்சயமாக அல்லாஹ், தான் செவியேற்றல், தன்னுடைய பார்வை, தன்னுடைய அறிவு ஆகியவற்றால் தன் அடியார்களுடன் உள்ளான் என்றும் நாம் நம்பிக்கை கொள்ளுதல்.

தாஹா அத்தியாயம் வசனம் 146

5. அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய பிறப்பு மற்றும் அவர்களை நபியாக மற்றும் தன் தூதராக அனுப்பி வைத்த அல்லாஹ்விற்கு நன்றி செலுத்தி (நன்றி செலுத்துவதின் பிரதிபலிப்பாக) அவர்களின் சுன்னத்தான வழிமுறையை எடுத்து (நடந்து) செயல்படுவது முஸ்லிம்களின் கடமையில் நிச்சயமாக உள்ளதாகும். அதில் உள்ளதுவே திங்கட்கிழமை நோன்பு நோற்றல், அந்நாளின் நோன்பு பற்றி அவர்கள் கேட்கப்பட்டார்கள்? அ(தற்க)வர்கள் "அது ஒருநாள் அ(ந் நாளான)தில் நான் பிறந்தேன் அந்த நாளில் நான் (நபியாக) அனுப்பப்பட்டேன் (அந்நாளில் தான்) என்மீது (குர்ஆன்) இறக்கி வைக்கப்பட்டது" என்று கூறினார்கள்.

இதனை முஸ்லிம் பதிவு செய்துள்ளார்கள்.

6. ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய பிறந்த நாளை விழாவாகக் கொண்டாடுவது அதனைப் பிந்தியவர்கள் புதிதாக உருவாக்கி னார்கள். அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் (அவர்களுடைய) தோழர்கள் (அவர்களைப்) பின்பற்றிச் சென்றோர் ஆகியோர் அது பற்றி அறிந்திருக்கவில்லை. விழாக் கொண்டாடுவதில்

நன்மையிருந்திருப்பின் அதன்பால் நம்மை அவர்கள் முந்தியிருப்பார்கள், அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும், அவர்கள் பிறந்த நாளன்று நோன்பு நோற்க வேண்டுமென முந்திய ஹதீஸில் நமக்கு வழிகாட்டியது போன்று அதன்பால் வழிகாட்டியிருந்திருப்பார்கள்.

நிச்சயமாக அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் திங்கட்கிழமை தான் இறப்பெய்தினார்கள் என்று அறியப்பட்ட ஒன்றாகும். ஆகவே அந்நாளில் அவர்களுடைய இறப்பைப்பற்றி துக்கம் கொண்டாடுவதை விட மகிழ்ச்சியோடு இருப்பது முன்னுரிமையுடையதல்ல.

7. (அவர்களுடைய பிறந்த நாள்) விழாக்களில் செலவழிக்கப்படுகின்ற பெருஞ் செல்வங்கள், "அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய குணாதிசயங்கள், அவர்களுடைய வாழ்க்கை வரலாறு அவர்களுடைய நற்குணங்கள், அவர்களுடைய ஒழுக்கம் அவர்களுடைய பணிவு, அவர்களுடைய அற்புதங்கள் அவர்களுடைய ஹதீஸ்கள், தன்னுடைய தூதுத்துவத்தை எந்த ஏகத்துவத்தின் பால் அழைப்பது கொண்டு அவர்கள் ஆரம்பித்தார்களோ அந்த அவர்களுடைய பிரச்சாரம், மற்றும் இவையல்லாத அவர்கள் வழிமுறையாக்கிய பயனுள்ள காரியங்கள் ஆகியவற்றை விளக்கிக் கூற(பிரச்சாரம் செய்ய நூல்களாக வடித்துக் கொடுக்க)" செலவழிக்கப்படுமானால் முஸ்லிம்கள் அவ்வாறு செய்வார்களானால் தன்னுடைய தூதருக்கு உதவியை நல்கியது போன்று அல்லாஹ் அவர்களுக்கு உதவியை நல்குவான்.

8. அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை உண்மையாகவே விரும்பக் கூடியவர். "அவர்களுடைய கட்டளையைப் பின்பற்றுவது. அவர்களுடைய சுன்னத்தான வழிமுறையை எடுத்து நடந்து செயல்படுவது அவர்களுக்கருளப்பட்ட குர்ஆனில் உள்ளவற்றை வைத்து தீர்ப்பு வழங்குவது, அவர்கள் மீது மிக அதிகமாக ஸலவாத்துக் கூறுவது ஆகியவையே நிச்சயமாக அவருக்கு மிகமுக்கியமாக இருக்கும்".

## அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களுடைய நற்குணங்களைக் கடைப்பிடித்தல்

1. அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை உண்மையிலேயே விரும்பக்கூடியவராக நீர் இருப்பின் அவர்களுடைய நற்குணங்களால் உம்மை குணசீலராக்கிக் கொள்வீராக!

சொல் அல்லது செயலில் தீய மற்றும் ஒழுக்கமில்லாததை விட்டுவிடுவீராக!

2. உம்முடைய சப்தத்தை (மற்றவர்களோடு பேசும்போது) தாழ்த்திக் கொள்வீராக! இன்னும், நீர் பேசுகின்றபோது குறிப்பாக, கடைத்தெருக்கள், பள்ளிகள், கூட்டங்கள் அதல்லாத இன்னபிற இடங்கள் ஆகியவற்றில், நீர் வெள்ளிக்கிழமை குத்பா பேருரை நிகழ்த்துபவராகவோ, அல்லது எங்காவது மற்றவர்களுக்கு உபதேசம் செய்கிறவராகவோ, இல்லாதிருப்பின் (உம்முடைய சப்தமான) அதை உயர்த்தாதிருப்பீராக!

3. எவரிடமிருந்தாவது உமக்கு ஏற்பட்டுவிட்ட தீமையை நன்மையினால், தீமை செய்தவரை மன்னித்து, அவரை(க் குற்றம்) பிடிக்காதிருப்பீராக! அவருக்கு தண்டனை கொடுக்காது கண்டு கொள்ளாதும் இருப்பீராக! (ஆனாலும்) அவரை நீர் வெறுத்து விடவும் வேண்டாம்.

4. உம்முடைய பணியாளர் அல்லது உம்மோடு படிக்கும் சக மாணவர் அல்லது உம்முடைய மக்கள் அல்லது உம்முடைய மாணவர் அல்லது உமக்குச் செய்ய வேண்டியவற்றில் குறைவைத்துவிட்ட உம்முடைய மனைவி ஆகியோருடன் மூர்க்கத்தனம் மற்றும் கடுமை காட்டுதலை விட்டு விடுவீராக!

5. உம்முடைய கடமையில் குறைவைக்காதீர், மற்றவரின் உரிமையில் எதையும் குறைக்காதீர்! ஏனெனில், இதை ஏன் செய்தீர் என உம்மை இழித்துச் சொல்ல அல்லது இதை நீர் செய்யவில்லை என உம்மை அவர் கண்டிப்பதற்கு அவரை நீர் நிர்பந்தப்படுத்தி விடாதீர்.

6. குறைவாகச் சிரிப்பீராக! உம்முடைய சிரிப்பின் உச்சம் புன்னகையாக (ஒலி எழுப்பாது) இருக்க வேண்டும்.

7. இயலாதவர், வறியர், பெண் (இல்லத்தரசி) ஆகியோரின் தேவையை நிறைவேற்ற பெருமை மற்றும் புறக்கணிப்பின்றி அவர்களோடு செல்லவும் தாமதிக்காதீர்.

8. ஆட்டில் பால் கறக்க அல்லது உணவு தயார் செய்ய இவையல்லாத இன்னபிற வீட்டுக் காரியங்களில் இல்லாளுக்கு ஒத்தாசையாக இருத்தல்.

9. உம்மிடமிருக்கும் நல்ல ஆடைகளை குறிப்பாக தொழுகை நேரம், பெரு நாட்கள் கூட்டங்களில் கலந்து கொள்கின்ற சமயம் ஆகிய சந்தர்ப்பங்களில் அணிந்து கொள்வீராக!

10. தரையின் மீதிருந்து உண்ண, உணவில் முன் வைத்திருப்பதையும் உண்ண, குறைவாக உள்ள உணவை வைத்துப் போதுமாக்கியும் கொள்ள பெருமை கொள்ளாதீர்.

11. வேலை மற்றும் பூமியைத் தோண்டுவதற்காக மண்ணை அள்ளுவதாகயிருப்பினும் பணியாட்களோடு கூட்டாக்கிக் கொண்டு அதனால் பெருமையில்லை என்பதாக வெளிக்காட்டி மகிழ்ச்சியும் அடைதல்.

12. (மற்றவர்கள் நம்மை) அளவுக்கு மீறிப் போற்றுதல் மற்றும் அதில் எல்லை மீறி விடுவதை மறுத்து உண்மையான பண்புகள் சிறப்பு, நன்மை ஆகியவற்றில் தனக்கு எது உண்டோ அதை வைத்து மட்டும் போதுமாக்கிக் கொள்ளுதல்.

13. தீய, வெறுக்கத்தக்க, கெட்ட பேச்சுக்கள் ஆகியவற்றை விளையாட்டுக்காக இருப்பினும் பேசாதீர்.

14. தீயதைச் சொல்லாதீர்! அதைச் செய்யவும் செய்யாதீர்.

15. உம்முடைய சகோதரர்களில் எவரையும் விருப்பமற்றதைக் கொண்டு எதிர் நோக்காதீர்!

16. இனிதாகப் பேசுவதையும் சரியாகப் பேசுவதையும் கடைப் பிடிப்பீராக!

17. கேலியாகப் பேசுவதை அதிகப்படுத்தாதீர்! உண்மையல்லாததை பேசவும் செய்யாதீர்.

18. மனிதர்கள் மற்றும் கால்நடைகளுக்கு இரக்கம் காட்டுவீராக! அதனால் அல்லாஹ் உமக்கு அருள் செய்வான்.

19. கருமித்தனத்தைக் கைவிடுவீராக! அதுவோ, அல்லாஹ் மற்றும் மனிதர்களால் விரும்பப்படாததாகும்.

20. நேரத்தோடு தூங்குவீராக! வணங்க மற்றும் வேலைகளைச் செய்ய சரியான நேரத்தில் விழித்தும் கொள்வீராக!

21. பள்ளிக்குச் சென்று கூட்டுத் தொழுகையை நிறைவேற்றப் பிந்தி விடாதீர்!

22. கோபம் மற்றும் விளைவுகளைப் பற்றி எச்சரிக்கையாக இருந்து வருவீராக! நீர் கோபம் அடைந்து விட்டாலோ, 'அவூதுபில்லாஹி மினஷ் ஷைத்தானிர் ரஜீம்' என்றும் கூறுவீராக!

23. அமைதியைக் கடைப்பிடிப்பீராக! தேவையற்ற பேச்சுக்களைக் குறைப்பீராக! ஏனெனில் அவை உமக்குப் பாதகமாக (மலக்குகளால்) பதியப்படுகின்றன.

24. விளங்கி சிந்தனையோடு குர்ஆனை ஓதுவீராக! மற்றவரிடமிருந்து செவியேற்பீராக! (அதில் உள்ளவாறு செயல்படவும் செய்வீராக!)

25. நறுமணத்தை (யாரேனும் தந்தால்) மறுக்காதீர்! எப்போதும், குறிப்பாக தொழுகையின் போது உபயோகிக்கவும் செய்வீராக!

26. மிஸ்வாக்கை குறிப்பாக தொழுகையின் போது உபயோகிப்பீராக! அதுவோ மிக்க பயனுள்ளதாகும்.

27. வீரனாக இருப்பீராக! உமக்குப் பாதகமாக இருப்பினும் உண்மையைக் கூறுவீராக!

28. எல்லா மனிதர்களிடத்திலிருந்தும் உபதேசத்தை ஏற்பீராக! அதை மறுத்து விடுவதைத் தவிர்ப்பீராக!

29. உம்முடைய மனைவியர் மற்றும் உம்முடைய பிள்ளைகளுக்கு மத்தியில் நீதமாக நடந்து கொள்வீராக! (அது போன்றே) உம்முடைய எல்லாக் காரியங்களிலும் நீதியைக் கடைப்பிடிப்பீராக!

30. மற்ற மனிதர்களால் ஏற்படும் சங்கடங்களை சகித்துக் கொண்டு மன்னித்தும் விடுவீராக! அதனால் அல்லாஹ் உம்மை மன்னித்து விடுவான்.

31. உமக்காக விரும்புபவற்றை மற்ற மனிதர்களுக்கும் விரும்புவீராக!

32. (எங்காவது) பிரவேசித்தல், (அங்கிருந்து) புறப்படுதல் மற்றவர்களை கடைத் தெருக்களில் சந்தித்தல் ஆகிய சந்தர்ப்பங்களின் போது ஸலாமை அதிகமாக்குவீராக!

33. அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மதுல்லாஹி வபரகாத்துஹு என நபிவழியில் வந்துள்ள வாக்கைக் கடைப்பிடித்துக் கூறுவீராக! (குட்மார்னிங், குட்ஈவ்னிங்) அல்லது மர்ஹபா, அஹ்லன், போன்ற வார்தைகள் அதற்கு ஈடாகாது (ஆனாலும்) முறையாக ஸலாம் கூறிவிட்டு அவற்றைக் கூறிக் கொள்ளலாம்.

34. உம்முடைய தோற்றம் மற்றும் உம்முடைய ஆடையில் சுத்தமானவராக இருப்பீராக!

35. உம்முடைய நரையை மஞ்சள் அல்லது சிவப்பு நிறத்தால் மாற்றிக் கொள்வீராக! மற்றும் அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய கட்டளைக் கிணங்கி கறுப்பைத் தவிர்க்கவும் செய்வீராக!

36. நிச்சயமாக உங்களுக்கப்பால் பொறுமை(யைக் கடைபிடிக்க வேண்டிய) நாட்கள் உள்ளன. நீங்கள் எதன் மீது உள்ளீர்களோ (அம்மார்க்கமான)தை கடைப்பிடித் தொழுகுவோருக்கு உங்களிலுள்ள ஐம்பது (நபர்களின்)

கூலி உண்டு என்றார்கள். அ(தற்க)வர்கள் அல்லாஹ்வின் நபியவர்களே! அவர்களிலுள்ளவர்களிலிருந்தா? எனக் கேட்டார்கள் அ(தற்க)வர்கள், “இல்லை! உங்களில் இருந்துள்ளவர்கள்” என்று கூறினார்களே ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அக்கூற்றில் நீரும் பிரவேசிப்பதற்காக (அவர்களுடன் ஆகிவிடுவதற்காக) அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய சுன்னத்தெனும் நபிவழியை கடைப்பிடித்தொழுகுவீராக!

இப்னு நஸ்ர் என்பவர் சுன்னாவில் பதிவு செய்துள்ளார். அதற்கு நிகரானவற்றை அடிப்படையாக வைத்து அல்பானீ அவர்கள் அதைச் ஸஹீஹ் எனக் கூறியும் உள்ளார்கள்.

37. யா அல்லாஹ்! உன்னுடைய வேதம் மற்றும் உன்னுடைய நபியின் சுன்னத்தின் பிரகாரம் செயல்பாட்டை எங்களுக்கு நல்குவாயாக! அவர்களுடைய நேசம், அவர்களைப் பின்பற்றுதல் (மறுமையில்) அவர்களுடைய பரிந்துரை ஆகியவற்றை எங்களுக்கு நீ நல்குவாயாக!

குறிப்பு: இவை அபூபக்ரு அல் ஜஸாயிரீ மதினா சர்வகலா சாலை பேராசிரியரின் அறிவு மற்றும் அறிஞர்கள் என்று நூலிலிருந்து சில மாற்றங்களுடன் எடுத்து எழுதியுள்ளோம்.

# قطوف من الشمائل المحمدية

## والأخلاق النبوية والآداب الإسلامية

:تأليف

**محمد جميل زينو رحمه الله تعالى**

قام بالترجمة باللغة التاملية

**الشيخ محمد إقبال المدني**

الداعية المتقاعد من مركز الدعوة والإشاد بدبي

والمبعوث من الوزارة الشئون الإسلامية السعودية